தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு எண்: 234

# சிறுத்தொண்ட நாயனர்

## இசை நாடகம்

இயற்றியவர்: ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர்

பதிப்பாசிரியர்

கோ. சேதுராமன், M.A., B.Ed.,

அம்மாப்பேட்டை, தஞ்சாவூர்.




இயக்குனர்
தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதிமகால் நூல்நிலையம், தஞ்சாவூர்.

1990]

விலை ரூ. 35-00

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Tittle of the Book | : | Siruthonda Nayanar. |
| Editor | : | Sri Ranganatha Upatthiyayar. |
| Publisher | : | Director, Sarasvati Mahal Library Society, Thanjavur |
| Publication No | : | 234 |
| Language | : | Tamil |
| Edition | : | II Edition |
| Date of Publication | : | September 1990 |
| Paper used | : | 14.2 kg Double demy Seshasayee |
| Size of book | : | 21 × 14 c.m. |
| Printing type used | : | 10 point |
| Number of copies printed | : | 1200 |
| Number of pages | : | 266 |
| Price | : | Rs. 35/- (Rupees Thirty five only) |
| Printed | : | Gajendra Printers, 57, South Car Street, Chidambaram — 608 001 |
| Binding | : | Section stitching |
| Subject | ; | Literature |

# வெளியீடுவோர் முன்னுரை

சைவ சமயப் பெரியோர்களான அறுபத்து மூன்று நாயன்மார்களில் குறிப்பிடத்தக்கவராக விளங்குபவர் சிறுத்தொண்டர். சேக்கிழார் இவரைப்பற்றி ஏற்றமாகவே பாடியுள்ளார். நாடக வடிவில் அடியார்களின் வரலாற்றைக் கூறும் இந்நூல் இசை நயமும், சொல்நயமும், பொருள்நயமும் உடையதாகும். இந்நூலில் சரசுவதி மகால் நூலகத்திலுள்ள (சுவடி எண். 616) சிறுத்தொண்டர் நாடகம் வெளியிடப்படுகிறது. அத்துடன் மாரியம்மன் கோவில் ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயர் அவர்களால் இயற்றப்பெற்ற சிறுத்தொண்டர் நாடகமும் சென்னை நூலகத்திலிருந்து சிறுத்தொண்டர் யட்சகானம் என்ற நாடகமும் ஒப்புமைக்காக இணைத்து திருச்செங்காட்டங்குடி தல புராணமும் பதிப்பிக்கப் பெறுகிறது.

சிறுத்தொண்டர் பற்றிய பல குறிப்புகள் பதிப்பாசிரியரால் திரட்டி அளிக்கப் பெற்றுள்ளது. நாடகப் பகுதிக்குப் பின் நாடகம் நடத்தப்பெறும் முறை நாடகத்தில் சமூகப் பங்கேற்பு ஆகிய தலைப்புக்களில் நிறைய செய்திகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

மெலட்டூர் பாகவதமேளா நாடகங்களை இயற்றிய வெங்கடராம சாஸ்திரி என்பாரும் இந்நாடகத்தை இயற்றிய ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர் என்பவரும் இலக்குமணவையன் என்ற ஒரே ஆசிரியரிடம் பயின்றவர்கள் என்பதை பதிப்பாசிரியர் நிறுவியுள்ளார்.

இன்றைக்கு 140 ஆண்டுகால வரலாறு உடைய இந்த சிறுத்தொண்டர் இசை நாட்டிய நாடகம் தஞ்சையை அடுத்துள்ள மாரியம்மன் கோவில், உடையார் கோவில், அம்மாப்பேட்டை போன்ற பல கிராமங்களில் சித்திரை மாதத்தில் ஒரு சிவவழிபாட்டுச் சடங்காக நடத்தி வருகின்றனர். இந்நாடகத்தில் இறைவனுக்கு படைக்கப்படும் பிள்ளைக்கறி எனப்படும் மருந்துப்பொருளை பிள்ளைப்பேறு அடையாத மணமான பெண்கள் வாங்கி உட்கொண்டால் மறு ஆண்டே பிள்ளைப் பேறு உண்டாகும் என்ற நம்பிக்கை மக்களிடையே காணப் படுகிறது.

இந்நூலின் பதிப்பாசிரியர் திரு.கோ. சேதுராமன் அவர்கள் சுமார் 20 வருடங்களாக சாலியமங்கலம் பாகவதமேளா

நாடகத்திலும் அம்மாப்பேட்டை சிறுத்தொண்டர் நாடகத்திலும் இசைக்கருவி கலைஞராக பங்கேற்று வருபவர். புதிய முறையில் ஆய்விற்குரிய வகையில் பதிப்பினைத் தயாரித்துள்ளார்.

இந்நூலிற்குத் தேவையான மூலச் சுவடியை சரசுவதி மகால் நூலகத்திற்கு நுண்படம் எடுத்துக் கொள்ள கொடுத்துதவிய மாரியம்மன் கோவில் பூண்டித்தெரு திரு. குமரசாமி அவர்களுக்கும் ஆசிரியர் திரு. ம. கண்ணன் அவர்களுக்கும் நூலகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். சிறந்தமுறையில் அச்சிட்டு அளித்த சிதம்பரம் கஜேந்திரா பிரிண்டர்ஸ்சார்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் தமிழக அரசின் நிதியுதவியால் வெளியிடப்படுகிறது.

இன்னனம்

து. இரா. இராமசாமி, இ. ஆ. ப.
மாவட்டாட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
6—4—1986

---

## பதிப்பாசிரியர் உரை

நாயன்மார்கள் அறுபத்து மூவருள் அன்னதானம் செய்து ஏழை எளியோரின் பசிப்பிணியை நீக்கி பெருந் தொண்டு செய்து பேறு பெற்றவர் சிறுத்தொண்டர்.

இச் சிறுத்தொண்டர் பற்றிய நாடகங்கள் பல தமிழ் நாட்டில் உள்ளன. உத்திராபதியார் எனும் இறைவன் பெயரால் அமைந்துள்ள கோவில்களில் இந்நாடகங்கள் ஆண்டு தோறும் நடத்தப் பெறுவதுண்டு.

சேக்கிழாரின் அறுபத்து மூவர் வரலாற்றிலிருந்து வழுவாது, நாடகத்திற்கேற்ற முறையில் சுவைகூட்டி இசை நாடகமாக இயற்றியவர் ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர், மேலும் பலரும் இந்நாடகத்தினை இயற்றியுள்ளனர். சரசுவதி மகால் நூலகத்திலும் ஒரு சுவடி உள்ளது. இவைகளையெல்லாம் தொகுத்து இந்நூலில் விளக்கமாக அளிக்கப் பெற்றுள்ளது.

இந்நூல் சரசுவதி மகால் நூலக வெளியீடாக அமைவதில் நான் மிகவும் பெருமைப்படுகிறேன்.

இந்நூலின் கண்ணுள்ள, இனிய சுவையையும், எம்பணியையும் பாராட்டி அணிந்துரை வழங்கியருளிய திருமுருக வாரியார் சுவாமிகளுக்கு எனது வணக்கத்துடன் கூடிய நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சிட்டு வெளியிட ஆணையிட்ட நூலக இயக்குனரும், மாவட்ட ஆட்சித் தலைவருமான உயர்திரு T.R. ராமசாமி, I.A.S அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். இப்பதிப்பிற்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்துதவிய சரசுவதி மகால் நூலக நிர்வாகப் பொறுப்பிலிருக்கும் திரு. அ. பஞ்சநாதன் எம்.ஏ., பி.லிப்சி., அவர்களுக்கு எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை சிறந்த முறையில் அச்சிட்டுதவிய கஜேந்திரா பிரிண்டர்ஸ் அவர்களுக்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

இதில் காணும் குறைகளைச் சுட்டின் நன்றியுடன் ஏற்பேன்.

கோ. சேதுராமன்,
அம்மாப்பேட்டை
தஞ்சாவூர்.

# அணிந்துரை

"கடந்த ஞானியரும் கடப்பரோ பிள்ளை மேல் காதல்" என்பது பழமொழி. இத்தகைய பிள்ளைப் பாசத்தை அறவே அகன்றவர் சிறுத்தொண்ட நாயனார்.

விசுவாமித்திரருடைய வேள்விக் காவலுக்குத் துணையாக பருவமுள்ள தம் மகனை அனுப்ப தயரத சக்கரவர்த்தி யடைந்த துயருக்கு எல்லையில்லை.

சிறுத்தொண்டர் தன் ஒரே மகனைக் கறியமுதாக்கி அடியவர்க்கு படைத்த திறம் சிந்தனைக்கு எட்டாதது.

இத்தகு சிறுத்தொண்ட நாயனாரைப் பற்றி சென்னை அரசினர் சுவடிக் காப்பகத்திலிருந்தும், தஞ்சை சரசுவதி மகாலில் இருந்தும் பெரிதும் ஆராய்ந்து அன்பர் G. சேதுராமன் அவர்கள் இந்த நூலை திறம்பட வெளியிடுகிறார்.

இவருடைய அயர்ச்சியில்லா முயற்சி உயர்ச்சி பெறுவதாக இதில் மாரியம்மன் கோவில் ரெங்கநாத உபாத்தியாயரின் சுவடி உள்ளது.

இவருடைய தமிழ்த்தொண்டு ஓங்குக வளர்க.

*நேரிசை வெண்பா*

சீரார் சிறுத்தொண்டர் செய்யசரித மதை
ஆராய்ந்து மக்கட் களிக்கின்றார் - பேரார்
புகழ் சேதுராமன் போற்றிப் படித்தோர்
தரவுடனே வாழ்வார் தழைத்து.

அன்பன்
கிருபானந்தவாரி.

107, சிங்கண்ண செட்டி தெரு,
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை - 600 002.
போன்: 846666

## பொருளடக்கம்

# சிறுத்தொண்டர் இசைநாடகம்

**முன்னுரை**

அம்மையும் அப்பனுமாய் நின்ற சிவபெருமானிடத்து அன்புவைத்து, அவர்தம் அடியார்களுக்கு அமுதளித்து, அவ்வற வழி அருள்பெற்று நின்ற, பரஞ்சோதிப் பண்டிதன் எனும் சிறுத்தொண்டரின் கதையை இசையுடன் கூடிய நாட்டிய நாடகமாக விளக்குவது இந்நூல்.

சுமார் 140 ஆண்டுகளுக்கு முன், தஞ்சையை ஆண்டு வந்த மராட்டிய மன்னர்கள் காலத்தில், காவிரி வளநாடு இசையும் நாடகமும் வளம்பெற வளரும் தலமாக விளங்கியது.

அரும் பெருங் கலைஞரான 'சஹஜி மகாராஜா' அவர் களால் (1684—1711) "**விஸ்வாதீத விலாஸ நாடகம்**" (இது திருமாலும் பிரமனும் சிவனின் அடிமுடியைக்காண வேண்டி தேடியது பற்றியது.) "**ராதா பான்ஸிதார் விலாஸ நாடகம்**" (ராதைக்கும் கண்ணனுக்குமிடையேயான காதல்விளையாட்டுகள் பற்றியது) ஆகிய நாடகங்களும் ஆயிரக்கணக்கான இன்னிசைப பாடல்களும் இயற்றப்பெற்றன.

"**துக்கோஜி**" எனும் "**துளஜா மகாராஜா**" அவர்களால் (1729—1735) "**அதிருபவதி கல்யாணம்**" "**சங்கரநாராயண விலாஸ நாடகம்**" "**ராஜ ரஞ்சன வித்யா விலாஸ நாடகம்**" ஆகியவை இயற்றப்பெற்றன.

பின்னர், தஞ்சை மன்னரின் ஆதரவு பெற்ற, மெலட்டூர் வெங்கடராம ஸாஸ்திரி என்பவரால், தற்போது உலகப்புகழ் பெற்றதான "**பாகவத மேளா**" நாடகங்கள் எனும் இசை நாட்டிய நாடகங்கள் இயற்றப்பட்டன.

இவர் காலத்தில் வாழ்ந்தவரும், உடன் ஒரே ஆசிரியரிடம் பயின்றவருமான '**வினார் ஸ்ரீ ரெங்காநாத உபாத்தியாயர்**' என்பவரால் இயற்றப்பெற்றதே இந்தச் சிறுத்தொண்டர் இசை நாடகம்.

## 1. பாகவதமேளாவும் சிறுத்தொண்டர் நாடகமும்

நடனம், நாடகம் இரண்டிற்கும் 'கூத்து' என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டது. சமீப காலமாகத் தான் இசை நாடகம் என்ற சொல் பழக்கத்தில் வந்துள்ளது.

இசை நாடகங்கள், இசைப்பாடல்களும் செய்யுள் வகைகளும் சேர்ந்த இலக்கிய வகையைச் சேர்ந்தனவாகும். (Musical and Literary form Combined) இவைகள், ஒரு கதை நாடக வடிவில் எழுதப்பெற்று, இசைவடிவில், கீர்த்தனைகள், சிந்து, தரு, முதலியவவகளைக் கொண்டு அமைக்கப் பெற்று ஆங்காங்கே விருத்தங்கள், வெண்பா, கலித்துறை பத்யங்கள், சுலோகங்கள், போன்றவைகளும் சேர்க்கப்பெற்று, இடையிடையே உரைநடையும் கதையின் தொகுப்பிற்காக பயன் படுத்தப் பெற்று அமைந்துள்ளன.

இசை நாடகங்களை இயற்றிய ஆசிரியர்கள் நாடகம், விலாசம், சபா, வாசகப்பா, சண்டைநாடகம், கீர்த்தனை, மாலையிட்டு நாடகம், சரித்திர நாடகம், யட்சகானம் எனப் பெயரிட்டனர். இவைகளுக்கு உதாரணமாக, ராம நாடகம்—பாரத நாடகக் கீர்த்தனை—இரணியன் வாசகப்பா—முத்தய்ய விலாச பத்மினி சபா—அர்ச்சுனன் சண்டை நாடகம்—வல்லாள ராஜன் யட்சகானம் ஆகிய பழைய நாடகங்களைக் கூறலாம்.

தஞ்சை, மதுரை நாயக்கர்கள் காலத்திலும், மராட்டியர்கள் காலத்திலும், தமிழ் நாட்டில் தெலுங்கு யட்ச கானங்கள் பிரபலமாயின; யட்ச கான முறையில் தரு-கீர்த்தனை-பத்யம்-திபதை-சந்திரிகை போன்ற பாடல்கள் அமைந்த தமிழ் நாடகங்கள் 18ம் நூற்றாண்டில் தோன்றின.

இதற்கு உதாரணமாக சென்னை ஓரியண்டல் நூலகத்தில் உள்ள நீலியட்ச கானம் (63 பாடல்களைக் கொண்டது) வல்லாள ராஜன் யட்ச கானம் (51 பாடல்கள்) சாரங்கதாரன் யட்ச கானம் (130 பாடல்கள்) சிறுத்தொண்டர் யட்சகானம் (53 பாடல்கள்) ஆகியவைகளைக் கூறலாம்.

கேரளத்தின் கதகளி, கூடியாட்டம், கிருஷ்ணாட்டம் என்பவைகளும் இவை போன்றவைகளே. இவை கோயிலின்

உட்புறத்தே அமைந்த 'கூத்தம்பலத்தில்' ஆடப்படுகின்றன. ஆந்திரத்தின் பாகவத மேளாவும், வீதிநாடகமும் இவற்றில் பாமா கலாபம் - கொல்ல கலாபம் - என்பனவும் புகழ்பெற்ற இசை நாடகங்களாகும்.

கிருஷ்ண பக்தியிலும், கீத கோவிந்தத்திலும் பிறந்ததே பாகவத சம்பிரதாயம். 'பாகவத மேளம்' என்பது இதன் அடிப்படையில் தோன்றியதே!

பாகவதமேளா நாடகங்களை இயற்றிய மெலட்டூர் வெங்கடராம சாஸ்திரியார் 'பாகவதம்' எனும் வைஷ்ணவ நூலில் காணப்படும் அடியார்களான பிரகலாதன், ருக்மாங்கதன், துருவன், ஆகியோர் வரலாறுகளை மட்டுமின்றி சிவராத்திரி வைபவம்-பஸ்மாசூரன் வதம்-மார்க்கண்டேயன் சரித்திரம்-கம்ஸவதம்-ஹரிச்சந்திரபுராணம் ஆகிய நாடகங்களையும் இயற்றியுள்ளார். இதே முறையில் தமிழில் ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயர் என்பார் இந்நூலில் காணப்படும் சிறுத்தொண்டர் நாடகத்தையும் இயற்றியுள்ளார்.

பாகவதமேளா நாடக சம்பிரதாயப்படி இந்நாடகத்திலும், 'மேளப் பிராப்தி' எனும் மேளம் கட்டுதல், தாளவகையில் தருவுக்கு முன்னும் பின்னும் 'முகஜதி' 'அந்திய ஜதி' என்ற முறையும் 'நாந்தி' எனும் கடவுள் வணக்க முறையும் அமைக்கப் பெற்றுள்ளன.

தவிர, கதைப்பகுதி முழுவதையும் அபிநயம் செய்து காட்ட ஏற்ற வகையில், விருத்தம், தரு, என்ற இரு வகையிலும் மேளா நாடகத்தை ஒத்தே அமைக்கப் பெற்றுள்ளது.

'மேளா' நாடகங்களில் நகைச்சுவைக்காட்சிக்கென தனியாக, விதூஷகன், கோமாளி,—போன்ற பாத்திரங்கள் ஏதும் கிடையாது. வைஷ்ணவ சம்பிரதாய பாகவதமேளா நாடகங்களில் நாடகத் துவக்கத்தில் வரக்கூடிய 'கோணங்கி' என்ற பாத்திரத்திற்கும் நாடகத்தின் கதாபாத்திரங்களுக்கும் எவ்வித தொடர்பும் கிடையாது. இந்த கோணங்கி என்ற பாத்திரம் கண்ணனின் ஒரு அவதாரமாகும். இது வைஷ்ணவ சம்பிரதாய பஜனைகளில் பாடக் கூடிய பாடல்களுக்குரியதாகும். எனவே இந்த சிறுத்தொண்டர் நாடகத்திலும் தனியாக நகைச்

சுவைப் பாத்திரம் ஏதும் படைக்கப்பெறவில்லை. வழக்கமான கட்டியக்காரன் உண்டு. பாத்திரப் பிரவேசப்பாடல்களும் 'சூத்திரகாரு தருவு' எனும் நாடக இயக்குநர்கள், இசைக் கருவிகளின் துணையுடன் பின்பாட்டாகப் பாடக்கூடிய தருக் களும் விருத்தங்களும், வசனப்பகுதிகளும் இந்நாடகத்தில் உள்ளன.

பாகவத மேளாவின் பிரஹ்லாத சரித்திர நாடகத்தில் நரஸிம்ம அவதாரத்திற்குரிய ஒப்பனைப் (வேடப்) பொருட் களாகிய முகமுடி, மணிமாலை ஆகியவை பூசைக்குரிய பொருட் களாக போற்றப்படுவது போன்றே இந்த நாடகத்தின் கங்காள மூர்த்தியின் ஒப்பனைப் பொருட்களான முடி, புஜக்கட்டைகள், தண்டு, கமண்டலம், பாதரட்சை, அங்கி, உத்திராட்ச மாலை, திருவோடு, சங்கு, தண்டை; ஆகியவைகள் பூசிக்கப்பட்டு போற்றிக் காக்கப்படுகின்றன.

ஒரு நாடகத்தை எந்த முறையில் நடத்த வேண்டும். நடிகர்கள், எந்த முறைப்படி மேடைக்கு வந்து அபிநயம் செய்ய வேண்டும் என்பன போன்ற நாடக விதிமுறை விவரங் களை எல்லாம் கூறும் வகையில், கேரளா நாட்டின் நாடக இயலில் ''ஆட்டப் பிரகாரம்'' ''கிரம தீபிகை'' என்பன போன்ற விதிமுறைப் பகுதிகள் உள்ளன. ஆனால் நம் தமிழ் நாட்டில், நாடகங்களை, நமது முன்னோர்கள் ஆடிக் காட்டிய வழியைப் பின்பற்றி சற்றும் மாறுபடாமல், கவனமாகக் கடைபிடித்து வருவதன் மூலம் தான் நாடகத்தின் தனித்தன்மையை காத்து வர வேண்டியுள்ளது. இந்தப் பணியை அவ்வப்போது ''நாடக இயக்குநராக'' பொறுப்பேர்க்கும் அநுபவமிக்க பெரியோர்கள் செய்து வருகின்றனர்.

இதன்படி, மேளா நாடகத்தின் 'பிரஹலாத சரித்திர' நாடகத்தை உரிய தினமான 'நரஸிம்ம ஜெயந்தி' அன்று மட்டுமே நடத்துகின்றனர். அதுபோலவே சிறுத்தொண்டர் நாடகத்தை சித்திரை மாதத்தில் பரணி நட்சத்திரமும் சிவனிராவாகிய சதுர்த்தசி திதியும் கூடிய நாளில் மட்டுமே நடத்துகின்றனர். மேலும் நாடக மேடைக்கருகில் 'அன்னக் கொடி' ஏற்றி (அன்னப்பறவையின் படம் வரைந்தது அல்ல) 'அமுது படையல்' என்ற அன்னதான நிகழ்ச்சியையும் நடத்து கின்றனர். நரஸிம்ம வேட மேற்பவர் விரதமிருந்து வேட மேற்பது போலவே, கங்காள வேட மேற்பவரும் விரதமிருந்து,

மனத்தை ஒருநிலைப்படுத்தி, மேடைக்கு வருகிறார் என்பதும், இவ்விரண்டு நாடகங்களும் முறையே பதினைந்து நாள் இடை வெளியிட்டு அமையுமாறு வருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

மெலட்டூர் வெங்கட்ராம சாஸ்திரியார், ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயர் ஆகியோரின் காலத்தை ஒட்டி திருவாரூரில் வாழ்ந்த புலவர். சு. சொக்கலிங்கம் பிள்ளை என்பார் "**சிக்கல் நவநீத ஈஸ்வர குறவஞ்சி**" எனும் இசை நாடகத்தையும் இயற்றியுள்ளார். (தமிழிசைச் சங்க வெள்ளி விழா ஆண்டு மலர் 1974-P.P. 19

**சிறுத்தொண்டர் நாடகம்-பிறசெய்திகள்**

பக்திச் சுவைமிக்க இச்சிறுத்தொண்டர் நாடகத்தை வேறு பலரும் இயற்றியுள்ளனர். எடமணல் V.A. ரெங்கையா சகோதரர்களிடம் ஒரு சுவடியும், திருமுல்லைவாசல் T. ரெத்தினசாமி அவர்களிடம் ஒரு சுவடியும் உள்ளதாக பிறநூல்கள் வழி அறிய முடிகிறது.

இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் சென்னையில் நாடகக் குழு அமைத்து தொழில் முறை நாடகம் நடத்திய தஞ்சையைச் சேர்ந்த கோவிந்தசாமிராவ் என்பவரால் இந்த சிறுத் தொண்டர் நாடகம் நடத்தப்பெற்று வந்ததாக அறிய முடிகிறது. நாடகத் தந்தை பம்மல் சம்பந்த முதலியார் அவர் களும் சிறுத்தொண்டர் சரித்திரத்தை நாடகமாக இயற்றி யுள்ளார்கள்.

**3. மயூரசர்மன் கதை:**

*வைணவம் சார்ந்த கதைகளில் சிறுத்தொண்ட நாயனார் கதையை ஒத்ததாக மயூரசர்மன் என்பானின் கதை ஒன்று உள்ளது. இதில் தந்தையும் தாயும் இருபுறமும் ரம்பத்தைப் பிடித்துக் கொண்டு. தமது செல்வ மகனை இருபகுதிகளாக அறுத்து, வலப்பகுதியை இறைவனாகிய திருமாலிடம் அளிக்க, குழந்தையின் இடப்பகுதியிலிருந்த கண்ணில் மட்டும் நீர் பெருகியதெனவும், இதன் காரணம் யாதென இறைவன் கேட்க அம் மைந்தன் "எமது இடப்பாகம் உமக்கு ஏற்புடையதாக

* நன்றி:- புலவர் கீரன் அவர்கள்-புகழ் ஏணி வானொலி உரை!-

ஆகாமற் போயிற்றே'' என வருந்தி கண்ணீர் சொரிவதாகவும் வரக்கூடிய காட்சி, நம் உள்ளத்தைக் தொடுவதாக அமைகிறது.

## 4. ஸ்ரீயாள சரித்திரம்

புகழ்மிக்க தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தின் மூலம், மராத்தி மொழிப் பண்டிதர் திரு டி.ஆர் பீமாராவ் அவர்களால் ரேணுகா தாஸரின் ''ஸ்ரீயாள சரித்திரம்'' என்ற நூல் 1981-ல் வெளியிடப் பெற்றுள்ளது. இதில் காணும் கதையமைப்பு சிறுத்தொண்டநாயனாரின் கதைதான் என்றாலும், சிற்சில இடங்களில் மிகவும் அற்புதமான மாறுபட்ட அமைப்புகள் காணக் கிடைக்கின்றன.

'ஸ்ரீயாள சரித்திரம்' மராத்தியின் பழமையான மொழி நடையும், 'ஓவி' சந்த அமைப்பும், கடினமான சொற்களும் கொண்டது. இதன் ஆசிரியர் ரேணுகாதாஸர், அளவிடற்கரிய, பெரும் இலக்கிய இசைத்துறைப் புகழ்கொண்ட வரும் தஞ்சையை ஆண்ட மன்னனுமான 'சகஜி' யின் (1703) காலத்தவர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இந்நூலில் பரஞ்சோதியார், பங்காளுவின் மைந்தனாக 'ஸ்ரீயாளன்' எனப்படுகிறார். இதன்பொருள் செல்வத்தை ஆளக் கூடியவன் என்பதாகும். தொண்டனாரின் மனைவியாகிய வெண்காட்டுநங்கை 'சாங்குணா' எனப்படுகிறாள், இதன் பொருள் நற்குணம் பொருந்தியவள் என்பதாகும். 'சிராளன்' 'சில்லையா' எனப்பட்டு செல்லமானவன் என்ற பொருளிலும் திருச்செங்காட்டங்குடி 'காந்திபுரி' என்ற பெயரிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. அடியாராக வரும் சிவனாரை ஊர்மக்கள் பார்த்து அருவருக்கத் தக்க ஒரு கொடிய குட்டரோகம் பீடிக்கப்பட்டவனாக ரேணுகாதாஸர் வருணித்துள்ளார். கதையமைப்பில் — சிவனடியார் மிகக் கொடிய குருபியான உருவத்தில் வந்து, தொண்டரிடம், நரமாமிச உணவு, அதுவும் சொந்த மகனைத் தாயும் தந்தையுமாய் அரிந்து, நற்கறி சமைத்தளிக்க வேண்டுமென்று கேட்க, அதனை ஸ்ரீயாளனும், சாங்குணாவும், தமது கண்களாலேயே ஒருவர்க்கொருவர் பேசி, தமது மகவையே அவ்வடியவருக்கு உணவாக அளிப்பதென முடிவு செய்து கொள்வதும், இதுசமயம், நாரதர் தோன்றி, இங்கு வந்திருப்பது, சிவனடியார் அல்லவெனவும், இலங்கையைச் சேர்ந்த ஒரு கொடிய

இராட்சதன் எனவும், இவன் இதற்குமுன் பக்கத்து கிராமத்தில் இதுபோல் நரமாமிச உணவைச் கேட்டபோது, இவனை அவ்வூரார் அடித்துத் துரத்திவிட்டனர் எனவும், எனவே இவர்க்கு அன்னமேதும் அளிக்கவேண்டாம் எனக் கூறிய போதும், ஸ்ரீயாளன், தமது அறத்தின் தன்மையை நாரதரிடம் கூறி தமது மகவையே கறிசமைத்து அளிப்பது உறுதி என்று கூறும் காட்சியும், தலைக்கறியை தாயும் தந்தையும் உரலிலிட்டு, பாட்டுப் பாடிக் கொண்டே இடித்து பக்குவப்படுத்த வேண்டும் என்று அடியார் நிபந்தனை விதிப்பதும், பின்னர், நல்லன்னம் கறியமுது உண்ணும் போது, அடியார், 'பிள்ளையில்லாத வீட்டில் உணவருந்த மாட்டேன்' எனக் கூறுவதும், தொண்டனாகிய ஸ்ரீயாளனும், சாங்குணாவும் செய்வதறியாது,' சில்லையா' வெனக் கூவியழைக்க, சீராளனாகிய சில்லையா, விளையாடி விட்டு வருவான் போல் வந்து, தான் தேவலோகத்தில் சுகமாக இருந்ததாகவும் பார்வதி தேவியார் ஸ்நாநம் செய்வித்தாள், தெய்வானை உடை உடுத்தி அலங்காரம் செய்வித்தாள் அமிர்தத்தை உண்ணக் கொடுத்தாள், பின்னர் பார்வதி தேவியின் மடியின்மீது அமர்திருந்தேன் எனக் கூறுவதும், 'ரிஷபாருடராக' தரிசனம் கொடுத்த இறையனார், தொண்டரை, 'வேண்டும் வரம் யாது' என்று கேட்க, அவரும், தன்னைமட்டுமின்றி, காந்திமாநகர் மக்கள் அனைவரையுமே கைலாயம் அழைத்துச் செல்ல வேண்டுமென்று கேட்க, இறைவனும் அவ்வாறே அருள்செய்வதும் குறிப்பிடத் தக்கதாகும். மேலும், கைலாய பதவி கிடைத்த போதும் கூட தாம் செய்யும் தொழிலையும், தமது உற்றார் உறவினர்களையும் விட்டுவிட்டு வர மனமில்லாது தவிக்கும் காந்தபுரி மக்களின் நிலையை ஆசிரியர் ரேணுகா தாஸர் நகைச்சுவையுடன் அளிக்கிறார்.

இந்நூல் பதிப்பாசிரியரின் முகவுரை மூலம், சேக்கிழாரின் பெரிய புராணம், 'உபமன்யு' என்பவரால் 'சிவபக்த விலாஸம்' என்ற பெயரில் வட மொழியில் எழுதப்பட்டுள்ள தெனவும், இதில் சிறுத் தொண்டரின் வரலாறு, 'தப்ர பக்த சரித்திரம்' என்ற தலைப்பில் காணப்படுகின்றதெனவும், ஸ்ரீதரஸ்வாமி ஸ்ரீ ஆனந்த தேவர், உத்தவாசித்தனர் – என்னும் வேறு மராட்டிய புலவர்களும் பரஞ்சோதியாரின் வரலாற்றை எழுதியுள்ளனர் எனவும், விரூபாட்சகவி' என்பர், சேக்கிழாரின் பெரிய புராணத்தை, 'பக்த விலாஸ' என்ற தலைப்பில் மராத்தி மொழியில் இயற்றியுள்ளாரெனவும் அறிய முடிகிறது.

## 5. சிறுத்தொண்டர் யட்சகானம்

சென்னை ஓரியன்டல் நூலகத்தில் உள்ள ''சிறுத்தொண்டர் யட்சகானம்'' என்ற ஓலைச்சுவடி அச்சிடப்பெறாமல் உள்ளது. இது ஞானப்பிரகாசர் என்பவரால் இயற்றபெற்ற 53 பாடல் களைக் கொண்டது. பாடல்களுக்கு இராகங்கள் குறிப்பிடப் பெறவில்லை. தாளங்கள் மட்டும் கொடுக்கப் பெற்றுள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் டாக்டர் S.A K. துர்கா அவர்களால் ஆய்வு செய்யப் பெற்றுள்ளது.

இதில் காணப்பெறும் ஒரு அர்த்த சந்திரிகையில்

''துயரெனும் வினை கெடத்தோன்றிய மருந்தே
மலரே மலர்தனில் வரும் பரிமணமே
நலமே குலவிய நம் மேரு வனமே
மருவிய செய்கலி மாற்றிய மதியே

வருமுறை யருள் செய் வருஞ் சந்ததியே'' எனும் வரிகள் இராமலிங்க அடிகளாரின் 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே' எனும் பாடலை நினைவூட்டுகின்றன.

இறைவனார் அன்னம் கேட்டு வரும் காட்சியை ஞானப் பிரகாசர்,

''மாயாபுரி வீதி தனிலே யார் பார். மாய்வாரையா, வென்றே
விநோதார்த்தமாகப் பாட்டு வார பாடி வந்தாரே
பாட்டுக் கேட் டோடி வந்து பார்த்து சரணா கதியென்ன
மீட்டியான் சங்கம வேடங்கொண்டு யோக்கியமாய்
வாட்டமின்றி வீதி வந்தாரே,
வீதி தனில் உள்ளோர் யாவரும் வேடிக்கை பார்க்கவே சிலர்
எதிர் வரக் கடவுளே எண்ணச் சிலர்
சால மாதிகா மென்ன வந்தாரே
வளமான ராசவீதி மன்னவர் கண்டங்கீசரிச்க உணவுகேட்டுமிவர்
வீதியே கழக்காணி தன்வரவு தேடிக்கொண்டு வந்தாரே' என்ற

வரிகளால் விளக்கின்றார்.

சீராளனை அழைக்கும் ஒரு 'குன்னதரு'

'நதியே, நற்பதியே, சுப நிலையே, சிறுமலையே,
மதியே எங்கள் சீராளக் கண்மணியே ஓடிவாராய்
சுதனே மலர்முகனே நல்லதுரையே செஞ் சர்க்கரையே
மகனே எங்கள் சீராளக் கண்மணியே ஓடிவராய்

என வருகிறது மேலும் வெண்காட்டு நங்கை தனது கணவனான சிறுத் தொண்டனாரை, பள்ளிக்குச் சென்றிருக்கும் தமது புத்திரன் சீராளனை அழைத்து வரும்படி கூறுமிடத்தில் வரக் கூடிய தருவில்,

'குல்லா நிலையங்கி, நிசாறு, குலாவுத் தட்டி முண்டாசுக்கப்பாய
சல்லாவு மிடைக்கிடைப் பொன் மணி தான் கோத்த
ருத்ராக்ஷத் தாவடமும்,
நல்லாபரணமும் போந்த கோல மிக்கனானைப்
பொன்னெழுத்தாணி இவையெல்லாம் கொண்டுன் மாமன்
மதுரையிலிருந்தே வந்தாரிப் பொழுதே என்றே சொல்லி
யழைத்து வாரும்
ஓரான சீராலிக் கண்மணியே வென்று கூர் தம்பிரானுக்
கமுது விரைவிற் சமைத்துப் படைக்க வேணும்
நின்று நின்று கொண் டெண்ணமிட வேண்டாம்
நெஞ் சொருமித்து நடவு மென்ன
நன்று நன்றெனவே தன் குமாரனை நாடி யழைக்க நடந்த
னரே''

என்ற வரிகள் பாத்திரப் படைப்பின் நயங்களை நின்று விளக்குகின்றன. இந்நாடகப் பாடல்கள் அனைத்தும் எளிய முறையில் யாவரும் புரிந்து கொள்ளத் தக்க வகையில் அமைந்துள்ளன.

இவை தவிர, சென்னை, கலா க்ஷேத்ராவைச் சேர்ந்த, டாக்டர் உ.வே. சாமினாதய்யர் நூலகத்தில், 'சிறுத் தொண்ட உலா' என்ற சுவடி அச்சேற்றப் பெறாமல் உள்ளது. 'திருச்செங் காட்டான் குடி யமக அந்தாதி' என்ற தல புராண சுவடியும் இவ்விடத்தே யுள்ளது.

6. சரசுவதிமகால் சுவடி

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் இயற்றிய ஆசிரியர் பெயர் அறியமுடியாதவாறும், பாடல்வரிகள் முழுமையான தாக இல்லாத நிலையிலும் ஒரு சுவடி உள்ளது. (No.616 தமிழ்)

''மாதவம் புரியுஞ் சைவ
மறையவர் திலதமாகும்
தீதிலாக் குணத்தின் மிக்க
சிறுத் தொண்டன் கதையைப் பாட''

என ஆரம்பிக்கும் இந்நூலில்; கணபதி காப்பு இடம்பெற்றுள்ளது. (முழுதுமாக இல்லை.) ''கதிரவர் குலத்தில் காடவர் கோமான்'' என்ற வரிகள் மூலம் மன்னன் காடவர் கோனின் மந்திரியானவர் தான் பரஞ்சோதிப் பண்டிதர் என்பது தெரிய வருகிறது.

கட்டியக் காரன் பாத்திரப் பிரவேசப் பாடலும் உள்ளது. (முழுவதுமாக இல்லை).

''சிந்தனை பணி தப்பாமல், செலுத்துங் கட்டியக்காரா நீ
...தொண்டராகும் மந்திரி தன்னை யிங்கே
வரச் சொல்லி அழைத்தீடாயே'' எனவும்
''திரு வெண்ணீறுடனே செப வட மொரு கையில் தாங்கி
சிறுத் தொண்டர் வந்து தோன்றினாரே
பரு ருத்ராட்ச மாலைபூண்டு பரமசிவனைப் பணிந்து பணிந்து,
திருச் செங்காட்டு நங்கையுடனே சிறுத்தொண்டர் வந்து
தோன்றினாரே!
சைவம் தழைக்கப் பணி செய்யும்
சிவ சங்கர ருடனே தானும் ஏவல் செய்யும்
சந்தன நங்கையுடன் சிறுத்தொண்டர் வந்து தோன்றினாரே!''
என்றவாறு சபைக்கு வந்த மந்திரி

''அண்டினார் தம்மைத் தாங்கி, ஆறிலோர் கடமை வாங்கி,
மண்டல முழுதுங் காக்கும் மன்ன நீ வாழி தானே!'' என்று
மன்னனை வாழ்த்துகின்றார்.

மந்திரியைப் பாராட்டிய மன்னர் பெரும் பொருள் கொடுத்து ''சிவத்தலங்களில்போய் வேத சம்பன்னர்க்குரிய தான தர்மங்களைச் செய்வீரே!'' எனக் கூறுகின்றார். பின்னர், அப்பெருஞ் செல்வத்துடன் தம்வீடு வந்த தொண்டர் தமது மனைவியாகிய வெண்காட்டு நங்கையிடம்.

தோத்தொடி கேளாய், மன்னன் கொடைப் பொருளிதனைக்
கொண்டே
தேத்திய சோனாட்டுக்குள்ளே சிவ தவ னேகத் துள்ளும்
மாத்தி நல்லறஞ் செய்தா லொன்றட்சமாகு மென்று
சாத்திய திருச்செங்காட்டில் தருமம் நாம் செய்யச் செல்வோமே!''
என்று கூறி, மனைவியுடனும், அவளது தோழியான சந்தன நங்கையுடனும் திருச்செங்காட்டான்குடி எனும் தலமடைந்து தருமம் செய்துவரும் நாளில்

'மக்களைப் பெற்றோமில்லை மலடிசொல் மகனிலாத
துக்க தோறத் தக்கத் தொழி லென்ன செய்குவோமே'' என
வருந்தி

ஒரு புற முமைக்கு நல்கு, மும்பர் கோன் கருணை நம்மேல் வருவதற் கபிஷேகங்கள் மக பூசைகளை யுண்டாக்கி, யருகில் நந்தவனம் வைப்பித் தணித் திருப்பணி செய்வித்து, திருவிழா நடத்தியன்ன சிவ தர்மங்களைச் செய்வோமே!'' எனத் தெளிந்து தான தர்மங்களைச் செய்து வருகின்றார்.

''திருவடம் (திருவேடம்) பூண்டவர் வாரீர்!
சுத்தும் சடை கட்டிய சித்தர்கள் வாரீர்!
குருலிங்க சங்கமர் வாரீர்! மெய்க் குழைத்திட்ட
திரு நீத்துக் கோலத்தவர் வாரீர்!
சருமந்தரித்த பத்தா வாரீர்!
சிவ சைவ சித்தாந்தர் சதாகாலம் வாரீர்!
அருமந்த சிறுத் தொண்டர் மனைக்கே!
சிவனடியார் ரெவரு மங்கே யமுதுக்கு வாரீர்!
பொன்னை, புவியை, நவமணியை, கொத்தின் பூஷணாதிகள்
புனைகின்ற துகிலை, என்னத்தைக் கேட்டாலும் தருவார்.
தேசந் திறந்தும் பரந்தும் வீணே இனிச் செல்ல வேண்டாம்
சென்னற் பழனம் புடைசூழும் திருச் செங்காட்டிலே எங்கள்
சிறுத் தொண்டர் பெருமான்

அன்னக் கொடிக் கட்டிக்கொண்டார்
சிவனடியார் எவருமங்கே அமுதுக்கு வாரீர்
கவடி சாராராகிலும், ஈனக் கடையரானாலும்
கள்ள ரென்றாலு, தவமறியா ராகினாலும்,
அவமறியாதாரென்றாலும் சத்தும் ஆசாரம் தவறானாலும்
சொன்னேன் சிவனடியார் வேஷம் பூண்டில் - எங்கள்
சிறுத்தொண்டர்க் கெல்லாம் சிறுத் தொண்டர் கண்டீரே!''
என்ற வரிகள், தொண்டனார் சிவனடியார்களிடத்தே கொண்டிருந்த பக்தியைக் காட்டுகின்றன.
''தீதிலாச் சிறுத்தொண்டன்தான் சிவபக்தர்க் கமுதெப்போதும்
காதலாய் படைக்கும் பக்தி கண்டருள் புரிய வேண்டிப்
பூதலச் சைவர் வேஷம் பூண்ட கத்தினே யாதி
மாதவர் தாங்களோடும் மலரயன் தோன்றினானே!''
''மெய்யனின் திரு வெண்ணீறும் விரித்த சடையும்
செங்கையினில் சிவ வடமும் கமண்டலமும்
செய்ய சிறுத் தொண்டர் வந்து தெரிசனம் செய்து தொழ''
என்ற வரிகள் பிச்சைக் கேட்டு வந்த ஆடலரசனின் திருவுருவைக் காட்டுகின்றன.

அடியார்கள், இறைவனின் மேலோர் என்பதை,
"திருமுறை புகல்வீர் சரணம் சரணம்!
சிவனினும் வலியீர் சரணம் சரணம்! என்ற வரிகள் மூலம் அறியலாம்.
"குலத்துக் கங்கோர் புத்திர னுண்டாம்! அந்தப்
புத்திரனு தித்தால் பின்னை நித்திய பிர்மச்சாரி" என்ற வரிகள் மூலம் சீராளன் பிறக்கும் வரை தொண்டர் இல்லற நெறிப் படியும் பின்னர் பிரமச்சரிய நெறிப்படியும் வாழ்ந்தார் என் பதை அறியலாம்.

சீராளன் பிறந்தது பற்றிய செய்தியை,
"அணிப்பூண்கள் மின்ன, தண்டையஞ் சிலம்புங் கொஞ்ச,
சந்திரோ தைய நருப் பெற்றார்ப் போலே
கொண்டையுங் குழையுங் கொப்புங் குதலைச் சொல் மொழியு
மாக தெண்டிரை கடல் சூழ் பாரில் சீராளன் தோன்றினானே!"
என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

சீராளன் வரும் காட்சியை,
'நெத்தியிற் சுட்டிகை விளங்கக் குழையசைய,
நிலத்தில் சிறு நகையும் நிலவெரிப்ப,
சித்தடிச் சிலம்பு கொஞ்ச சிறுத்தொண்டன் செய்தவத்தால்
வந்துதித்த சீராளன் வந்தான்
பங்கய முகந்துலங்க, பொன்னரை ஞாணும்
பட்டுடையுமிட்ட பூணும் பளபளெனச் செங்கையில்
வளையிலங்கவே, சிறுத்தொண்டன் செய்தவத்தால்
வந்துதித்த சீராளன் வந்தான்" என்ற வரிகள் காட்டுகின்றன
பின்னர் சீராளனை பள்ளியிற் படிப்பிக்க வேண்டி, உபாத்தி யாயரை அழைப்பிக்க, "வண்ணங்கள் சொல்ல வல்ல வாத்தியார் தோன்றினாரே" என்றபடி ஆசிரியரும் வருகின்றார். அவருடைய குணத்தைக் காணின்.
"ஓது பாலகர் தமை ஒரு நாள் பிசகினாலும்
கோதண்டம் தனில் தாக்கி குளைச்சுக்கல் காலி விட்டு
காதண் டையிலுங் கிள்ளி கசையால் சுறுக்குத்தாக்கி
பலதெண்டஞ் செய வல்ல வாத்தியாரும் தோன்றினாரே!" என்ப தாகும். இப்படிப்பட்ட ஆசிரியரிடம் தொண்டர் தமது மகனாகிய சீராளனை கலைகள் பலவும் கற்பித் தருளும்படி வேண்டி அனுப்பி வைக்கின்றார். இதன் பின்னர் ஓர் நாள்,

''அருத் தழைத்திடும் சிறுத்தொண்டையரே இன்றைக்கேனோ
இருத்தலம் தோறும் அங்கங்கே சிவபக்தர் ஆகியுள்ள
ஒருத்த ரென்றாலும் உபசரித்தன்பு கூறப்போய்
வருத்த மொத்தழைத்தும் என்ன மாயமோ வரக்காணேன்
உரிய தெள்ளமுதுக் கின்றைக்கு ஒருத்தரும் வாராத தேதோ!
தெரிகிலேன் தலங்கடோறும் தேடியிக் கணத்தில் மீள்வேன்,
அருவை யென்னான வாசல் முன் ஆரேனும்
பத்தராகி வரில் நான் வருமளவும் நம்மனையில்
வைத்திரு கண்டாயே!'' என்று கூறி வெளிப்போந்த தொண்டர்
பல இடங்களிலும் அடியார்களைத் தேடிக் காணாது வருந்தும்
காட்சியை,

இப்பொழுது காணேன் நான் என் செய்குவேன் சிவனே
அமுதுண் டெப் பொழுது மெமை யாளு மீச னடியாரை.
(இப்பொழுது)

சிவதலங்கள் தோறும் புகுந்தும் தெரிசனம் பெற்றேனில்லை
யவரவருக் கேதும் பிழை அடியேன் செய்தேனோ
கவலையுறு மென் பாவ கர்மமோ அமுது கொள்ள
எவரு மிங்கு வராத தென்ன சோதனையோ. (இப்பொழுது)

திருவாரூர் திருமருகல் திருப்புகலூர் திருநாகை
தருவாகும் கீழ் வேளூர் சாத்தமங்கை தேவூர்
மருவா விற்கொடி பனையூர் வாஞ்சி நன்னில மென்னும்
அருளாளர் சிவத் தலங்கள் அனைத்தும் சென்றுமய்யோ.
(இப்பொழுது)

என்ற 'தருவில்' நன்கு காணலாம்: இந்தநேரத்தில்,
''பாதக்குரடும், வீரமணியும், பவளமேனி, பூதவள நீறும்
பேறமாய்ச் சிறுத்தொண்டர் மனையில் பிக்ஷாந்தேதி என்றே
ஓது மொழியும், கருணை விழியும் உதாபந்தமு மொளிவுடன்
குழைகள்
காதுகளில் துலங்க வீதியில் சிங்கக் கங்காளர் வந்து
தோன்றினாரே!

இவ்வாறு வந்த கங்காளரை, வெண்காட்டு நங்கை வந்து
வணங்கி நிற்க, கங்காளர் கூறுவதைக் காண்போம்.
''பிச்சை நாம் கேட்க வந்தால், 'உண்டில்லை' எனும் வார்த்தை
ஓங்குமாம் மனைக்கேயுள்ள தொண்டர் வந்து உரைப்பதன்றி
தொழுது நீ நம்மை வந்து தெண்டனிட்டருகே நின்ற
சேதியென்ன செப்புவாயே'' என்கிறார், அதற்கு வெண்காட்டு
நங்கை,

"உட்டவிர் சடையிரிந்த மனைப் பத்தரமுது கொள்ள
சிட்டரா மும்மைப்போல சிவபக்தர் தம்மைத் தேடி
சூட்ட ஹூரதிலே போனார் குடைத்தவர் வார மட்டும்
இட்டவர் தினத்தி லிங்கே இசைந் தெழுந்தருளுவீரே!" என்று வேண்டுகிறாள்.

அதனைக்கேட்ட இறைவர்,

"பைந்தொடி சொல்லக்கேளாய், பதியில்லா மனையில்
தங்கல்
நந்தமக் கூடாது-கண்ட நாமுமோர் ஆத்தியின் கீழ்
முந்துற விருப்போம், சொன்ன முன்னம் நின்
கணவனிங்கே
வந்திடிலவரை யங்கே வரச் சொல்லி யனுப்புவாயே!"

என்றி கூறி ஆத்தி மரத்தின் நிழல் நோக்கி நடந்தார். இவ்விடத் திவ்வாறிருக்க, அமுதுண்ணுவான் வேண்டி, அடியார்களைத் தேடிச்சென்ற தொண்டர், பல இடத்தும் தேடி, எவரையும் காணாது, வருந்தி,

"திருப்புகலூர் வாழும் சிவனே! இன்றைக்கிங் கேதோ
குடைத்திவண்
சிவ பக்தர்களைத் தேடென்னக் கிடைக்குமோ தான்
வடித்த தெள்ளமுது கொள்ள மவைக்கேயும் மொருவரு
மடுத்திலா ரென்றிப்போதே என்னாருயிர் நீக்குவேனே!

என்றவாறு சூளுரைத்து தமதில்லம் வந்தடைந்தார். வந்த தொண்டர் தமது மனையாளிடம்,

"சங்கத்தாய் குழலாய், தொண்டர் தங்களை
தலங்கடோறும்
அங்குதான் தேடத்தேடி அலைந்துமென் கண்ணிற்
காணேன்
கொங்குற்றார் குழலாய் நந்தம் குடிலைசக்கே யமுது
கொள்ள
இங்குற்று வந்தார் யாரும் இல்லையோ சொல்லுவாயே!"

எனக்கேட்க, அதற்கு வெண்காட்டு நங்கை, இங்கொருவர் வந்து பிச்சை கேட்டார்" அவரை தாங்கள் வரும் வரை இல்லத்தில் எழுந்தருளி இருக்க வேண்டுமென வேண்டினேன்.

ஆனால் அவரோ, ஆடவரில்லா வீட்டில் தங்கிடோமென்றும், ஆத்திமரத்தினடியில் இருப்பதாகவும், தாங்கள் வந்தால் அவ்விடத்திற்கு அனுப்பிவைக்கும்படியும் கூறிப்போனார், ஆகவே தாங்கள் விரைந்து சென்று அவ்வடியாரை அமுதுண்ண அழைத்து வாரும் என்று கூறினாள்: இது கேட்ட தொண்டர்,

''ஆத்திமரத்தினடியில் இருக்குமடியார் நான் போகுமளவும்
இருப்பாரோ!
இத்தனை போதங்கே என்னை வரக் காணாமல்
அத்தர் தனியே இருந்தாலும், பசியாலிளைத்து
ஆனபோதுள்ளம்
நோவாரோ! நொந்து கொண்டப்பாலே போவாரோ!
என்றறியேன்''

என்று பலவாறு மனம் கலங்கி விரைந்து, ஆத்திமரத்தடிக்கு வந்து அடியாரைக் கண்டு வணங்கி,

''கால தாமதமாய் நான் செய்த கடும் பிழையை
பொறுத்தென் வீட்டில் மேலமுதுக் கிப்போதே
விரைந் தெழுந்தருளுவீரே''

என வேண்டினார்.

இனி இதற்கு மேற்பட்ட பாடல்கள் ஏதும் கருத்து தெளிவாக புரியுமளவு தொடர் வரிகளாக இல்லை.

''நம் .... பொன்னெழுத்தாணி-போற் பூணனையும்
கொண்டுன்னருமாமன் வந்தார்.
சொற்படிக்கு வாசிக்கும் சுவடியைத் தூக்கி வைத்தே
நவமணி பணியும் கொண்டு நன் மாமன்
உனைக் காண வந்தார்—''

இவ் வரிகள் தொண்டர் பள்ளியில் பயிலும் தமது மகனை அழைத்து வரச் சென்ற போது சீராளனிடம் கூறியவை என அறியலாம்.

''பொன் னெழுத்தாணி கொண்டு வந்தாரென்றீர் அது
கழுத் தறுக்கும் போர் வாளன்றோ
வண்ணச் சிற்றாடை கொண்டு வந்த........
வயிற்றைக் கிழித்தீரல் வாங்குவதன்றோ!

சவடிக் கடுக்கண் கொண்டு வந்தாரென்றீரது
சவடிக் கழுத் தெலும்பது தகர்க்க........
சுவடி கொண்டு வந்தா ரென்றீரது தோலுரித்து
நரம்பினைத் தொகுப்பதன்றோ, அறியேனோ
கொத்துச் சரப்பளி கொண்டு வந்தாரென்றீர்
குடலைப் பிடுங்க நீர்''

என்ற வரிகள் சீராளன் வரும் பொருளுணர்ந்து தேர்ந்து தமது தந்தையிடம் கூறுவன வென அறியலாம்.

''சீராளன் தனக்கு மானே, தாலாட்டி நறுங் குஞ்சிக்குத்
தயிலமுமாட்டி, கங்கை நீராட்டி யமுதூட்டி
நித்திரை கொள்ளச் செய்வாயே!

என்னும் வரிகள் வெண்காட்டு நங்கை தமது பணிப்பெண்ணாகிய சந்தன நங்கையிடம் கூறுவதாக அறியலாம்.

''கோதி நல்லெண்ணெய் தேய்த்துக்
குஞ்சிக்கு தண்ணீராட்டி, ஆதரவாய்
நானூட்டு மமுதுண்ட மயக்கந்தீர
காதலனே சீராளா-கண்ணே முத்தே நான்செய்
மாதவமே நீ யெந்தன் மடியில் கண்வளருவாயே!''

என்ற வரிகள் வெண்காட்டு நங்கை தமது மகன் சீராளனை தாலாட்டும் வரிகள் என அறியலாம்: இவ்வளவே இதற்கு மேல் முற்றுப் பெறாத நிலையில் நூலகச் சுவடி உள்ளது.

இந்நூலின் அமைப்பினை நோக்கும் போது இதுவும் 19ம் நூற்றாண்டினைச் சார்ந்த தென்றே தோன்றுகின்றது. பாடல்களில் அமைந்துள்ள எதுகை மோனை அமைப்பும் இசைக்கேற்ற தன்மையில் அமைந்த சொற்கட்டுகளும் பாராட்டத்தக்கவாறே உள்ளன. ராகங்களோ தாளமோ குறிப்பிடப்படவில்லை.

## 7. பிற நூல்களில் சிறுத்தொண்டர்

கி. பி. 6ம் நூற்றாண்டில் சாளுக்கியர் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டமையும், பின்னர் 8ம் நூற்றாண்டில் இராஷ்ட்டிர கூடர் ஆட்சி செய்தமையும் தமிழ் நாட்டை பெருமளவு பாதித்தது. கி. பி. 7ம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை சமணம் தமிழ்நாட்டை ஆட்சி புரிந்தது எனலாம். அந்த

சமயத்தில் தோன்றியவர்கள்தான், திருநாவுக்கரசரும், சம்பந்தரும், இவர்கள் காலத்தில் சைவமும், வைணவமும் நாடெங்கும் வளர்ச்சி பெறலாயின.

சம்பந்தர் தமது தேவாரத்தில் திருச்செங்காட்டாங்குடியில் வாழ்ந்த சிறுத்தொண்டரை 11 பாடல்களிற் குறிப்பிடுகின்றார். அவற்றுள் "**சீர் உலாம் சிறுத்தொண்டன்**" **செருவடித்தோள் சிறுத்தொண்டன்**'' என்ற வரிகள் மூலம் சிறுத்தொண்டர் போரிற் புகழ் பெற்றவர் என்பது பெறப்படுகிறது.

பட்டினத்தார் பாடிய 1. கோயில் நான்மணி மாலை 2 திருக் கழுமல மும்மணிக்கோவை 3. திரு இடை மருதூர் மும்மணிக்கோவை 4. திரு ஏகம்ப உடையார் திரு அந்தாதி 5. திருவொற்றியூர் ஒரு பஃது என்பன இவற்றுள், சண்டீசர் சிறுத்தொண்டர், சாக்கியர், அப்பர், சம்பந்தர், சுந்தரர், ஆகியோரது பக்திச் சிறப்பு பாராட்டப்பட்டுள்ளது. (10ம் நூற்றாண்டு) வரகுண பாண்டியனையும் பட்டினத்தடிகள் சிறப்பித்துப் பாடியுள்ளார்:- **வாளால் மகவரிந்து** ஊட்ட வல்லேன் **அல்லேன்**'' என்ற வரிகள் குறிப்பிடத்தக்கதாகும்.

திருத் தொண்டர் திருவந்தாதி எனும் நூல் 85 பாக்களை உடையது. இதனுள் 63 அடியார்களைப்பற்றியும் 9 தொகை அடியார்களைப் பற்றியும் அறிய இயலும். **தில்லை உலா**: இந் நூல் முழுவதும் வெளிவராமையால், இதன் காலம் இன்னதென அறிய இயலவில்லை. இதனை சேக்கிழார்க்கு முற்பட்ட நூலாகக் கொள்வதில் தவறில்லை. இந்நூல் பற்றிய விளக்கங் கள் பண்டிதர் உலகநாதப்பிள்ளை அவர்களால் தமிழ்ப் பொழில் Vol. 12, 13 ஆகியவற்றில் அளிக்கப்பெற்றுள்ளது. இந்நூலின் கண் கோட்புலியார் தம் பிள்ளையைக் கூறாக்கினமையும், சிறுத்தொண்ட தமது பிள்ளையைக் கொன்று சமைத்து அடியார்க்கு படைத்த முழு விவரமும் கிடைக்கப் பெறுகிறது.

8. கல்வெட்டுத்துறை குறிப்புக்கள்

தென்னிந்திய கல்வெட்டு ஆய்வுத்துறையினரின் வெளியீடு கள் மூலம்;

1. முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் வாதாபி வெற்றி கொள்ளப்பட்டது:
   (Indian Antiquarry — Vol. Page — 100 — ).

2. திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்ட நம்பி விழா நடைபெற்றது (S. I. I. — 1913 — P. 59.)

3. தஞ்சைப் பெரிய கோயிலில், பைரவர், சிறுத்தொண்டர், வெண்காட்டு நங்கை, சீராளதேவர், ஆகியோரின் செப்புத் திருமேனிகள் எடுக்கப் பெற்றது.
(S. I. I. — 1928 — P. 43 — 44)

4. திருமருகல் — மருகல் நாட்டுத் தஞ்சாவூர்.
S. I. I. 2, 70 VII — 44.

ஆகிய விவரங்கள் கிடைக்கின்றன:

## 9. கோயிற் சிற்பங்களில் சிறுத்தொண்டர்

கோயில்களில் காணக்கிடைக்ககூடிய சிற்பவடிவங்களில் சிறுத்தொண்டரின் வரலாறு அறிய உதவும் இடங்கள்.

1. காட்டுமன்னார்குடிக்கு 5 கல் தொலைவில் உள்ள மேலக் கடம்பூர், கீழைக் கடம்பூர் என இரு சிற்றூர்கள் உள்ளன. இதில் மேலைக் கடம்பூர்க் கோயில் கர்ப்பக் கிரகம் தேர் போன்ற அமைப்பு உடையது. இதன் மூன்று பக்கங்களிலும், இரண்டு வரிசைகளாக 63 நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றுச் சிற்பங்கள் உள்ளன.

2. திருச்செங்காட்டங்குடியை அடுத்த கணபதீச் சரத்தில் அமைந்த கோயில். இது, உத்திராபதீசர் கோயிலுக்குள் ஒரு சிறிய கோயிலாக உள்ளது. இதன் சுவர்களில் சோழர் காலக் கல் வெட்டுக்களும் உத்திராபதீசர் கோயிற் சுவர்களில் விசய நகர அரசர் கல்வெட்டுக்களும் உள்ளன.

சித்திரை விழாவில் அடியார்களை உண்பிக்கவேண்டி சோழர் காலத்தில் சிறுத்தொண்ட நம்பி மடம் கட்டப்பட்டது. சீராள தேவர் என்ற பெயரால் விளங்கும் சிவபெருமானுக்கும் வீரபத்திரருக்கும் தொண்டு செய்து வந்த சிறுத்தொண்ட நம்பிக்கு விழாச் செய்யப்பட்டு வந்தது. உத்திராபதியார், சிறுத்தொண்டர் மாளிகையில் உபசரிக்கப்பட்டார். இன்றைய உத்திராபதியார் கோயிலே சிறுத் தொண்டர் மாளிகை எனவும், கணபதீஸ்வரப் பெருமான் சீராள தேவர் எனப் பெற்றவர் எனவும், இவ்விறைவனார் திருப்பெயரையே சிறுத்தொண்டர் தம் மகனுக் கிட்டார் எனவும் கூறலாம்.

3. 'தாராசுரம்' எனும் பெயரால் தற்போது வழங்கப் பெற்று வரும். இராச ராசேச்வரம் கோயிலின் மேற் புறச் சுவரில் சிறுத்தொண்டரின் கதை சார்ந்த-அடியார் உணவுக்கு முன் அமர்ந்த நிலை, சீராளன் ஓடி வரல், தாய், மகனை வரவேற்றல், இறைவன் ரிடபாருடராக காட்சி அளித்தல் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

சிறுத்தொண்டர், வெண்காட்டு நங்கை, சீராளன் ஆகியோரின் செப்புப்படிமங்கள், பெயர்ப் பொரிப்புக்களுடன். தாராசுரம் கோவிலிருந்து ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளது. இவைகள் பதினோறாம் நூற்றாண்டைச் சேர்ந் தவைகள் என ஆய்வாளர்களால் தெரிவிக்கப் பெற்றுள்ளது.

இத்திரு மேனிகளையொத்த பிரிதொரு வடிவாக்கம் தஞ்சை மாவட்டம் கண்கொடுத்த வனிதம் எனும் சிற்றூரில் வழிபடு நிலையில் உள்ளது.

ஆக இவ்வாறு, சிறுதொண்டர் வரலாற்றில் அமைந்த தெய்வீகச் செயல் தவிர்த்த மற்றய செய்திகள் யாவும் கல்வெட்டுச் செய்திகளாகவும், சிற்பங்களாகவும் காணக் கிடைக்கின்றன.

# 10. திருச்செங்காட்டாங்குடி தலவரலாறும் வழிபடுநலனும்

திருச்செங்காட்டங்குடி தலபுராணம் பாயிரம் முதல் அபிடேகச் சருக்கம் வரை 22 சருக்கங்கள் கொண்டது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப் பெறவில்லை.

வேண்டும் விநாயகர், வாதாபி கணபதி, கணபதீசர், வாய்த்த திருக்குழலியம்மை, ஸ்ரீ உத்திராபதீசர், முருகப் பெருமான், நடராசர், நந்திகேசுவரர், சண்டிகேசுவரர், திரு ஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், திருவாதவூரர், சிறுத்தொண்டர், வெண்காட்டு நங்கை, சந்தன நங்கை, சீராள தேவன், ஆகியோர் பெயரில் துதிப்பாடல்களும் தலப் பெருமை யும் கொண்ட நூல்

---

*வானொலிச் செய்தி 9—12—1984.

வலாம்பிகை தாஸர் எனும் சோழபுரத்துப்பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்ற "அமுது படைச்சிந்து" என்ற நூல் ஒன்று இருப்பதாக அறியமுடிகிறது.

ஆனந்த விகடன் வார இதழில் திரு பரணீதரன் அவர்களால் (கட்டுரை எண்: 222, 223, 224—திருத்தலப் பெருமை—அக்டோபர் 1885) மிகச் சிறப்பான முறையில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

மேற்கண்ட நூல்களைக் காண இயலாதோர்க்கென இங்கு சுருக்கமாக தலம் — மூர்த்தி — தீர்த்தம் ஆகியவைபற்றிய விவரங்கள் கொடுக்கப் பெறுகிறது.

## தலம்

திருச்செங்காட்டங்குடி தென் தமிழ்நாட்டின் வளமிகு தஞ்சைமாவட்டத்தில் திருவாரூரை அடுத்த நன்னிலம் தாலுகாவில் உள்ளது நன்னிலம், திருவாரூர், நாகப்பட்டினம் ஆகிய ஊர்களிலிருந்து போதுமான அளவு பஸ் வசதி உள்ளது. திருச்செங்காட்டங்குடி ஒரு சிற்றூர் எனினும் இரண்டொரு நாட்கள் தங்கியிருந்து வழிபடவும் வசதிகள் படைத்ததே! இவ்வூரின் வடபுறத்தே முடிகொண்டான் ஆறும் தெற்கே புத்தாறும் ஓடுகின்றன. தவிர தீர்த்த குளங்களும் பிற நீர் வசதியும் போதுமான அளவு உள்ளன.

சுற்றியுள்ள பிறதலங்கள்:

1. **திருப்புகலூர்:** அகழிசூழ்ந்த கோயில், சுவாமி பெயர் அக்கினிபுரீசர், அம்மை, கருந்தாழ் குழலி—அப்பர் சுவாமிகள் ஐக்கியமான தலம்—முருகநாயனார் அவதரித்ததும், சுந்தரருக்கு இறைவனார் செங்கல்லைப் பொன்னாக்கித் தந்ததும் இத்தலத்தே தான். சித்திரை மாதத்தில் அப்பர் திருவிழாவும் வைகாசியில் பிர்மோற்சவமும் சிறப்பு மூவர் பாடல் பெற்ற திருத்தலம்.

2. **திருக்கண்ணபுரம்:**- வைணவத்தலம் - பெருமாள் சௌரிராசர், அம்மை கண்ணபுரநாயகி; ஆழ்வார்களின் மங்களா சாசனம் பெற்ற திருத்தலம்.

3. **இராமனதீச்சரம்** — இராமன் வழிபட்டதலம் சுவாமி இராமனதீஸ்வரர், அம்மை சரியார் குழலி: இராமநந்தீஸ்வரம் எனவும் கூறுவர்.

4. **திருமருகல்**: ஞானசம்பந்தப் பெருமான், பாம்பு கடித்து மாண்ட செட்டி மகனை பதிகம்பாடி உயிர்ப்பித்ததலம்-சீராள தேவன் படித்த பள்ளிக்கூடம் இருந்த தலம்: சுவாமி பெயர் இரத்தினகிரீஸ்வரர்-அம்மன் வண்டுவார் குழலி:

5. திருப்பயற்றங்குடி, அம்பல், திருமாகாளம், திருச்சாத்த மங்கை ஆகிய பிறதலங்களும் அருகில் அமையப் பெற்றுள்ளன.

திருக்கோயில் தனியான கர்ப்பக் கிரகம்-அர்த்த மண்டபம் சுற்று மதிலோடு கூடிய சருங்கல் திருப்பணி. நாற்புறமும் வீதிகள் உள்ளன. கீழ்ப்பகுதியில் சத்திய புட்கரணி, தீர்த்தம் உள்ளது. அதனை அடுத்து 'வேண்டு விநாயகர் கோயில்' உள்ளது. தெற்கு வீதியின் தென்மேற்கு மூலையில் சூரிய புட்கரணி உள்ளது மேற்றிசையில் சிறுத்தொண்டர் திருமடம் உள்ளது. சித்திரைப் பரணியில் இவ்விடத்தே தான் உத்திரா பதீசர் பிள்ளைக் கறியமுது செய்யும் விழா நடை பெறுகிறது. மடத்தின் வடபுறத்தே அமைந்திருப்பது உத்திராபதியார் திருக்கோயில். இது சிறுத்தொண்டரின் திருமாளிகையாக இருந்ததென்பர். இக்கோயிலில் சிறுத் தொண்டர், திருவெண் காட்டு நங்கை ஆகிய திருவுருவங்களும் ஐயடிகள் காடவர்கோன் திருவுருவும் உள்ளன. இக்கோயிலின் திருமதில் கீழ்மேலாக 498 அடியும் தென்வடலாக 204 அடியும் நீள அகலம் கொண்டது.

உட்கோபுரத்தின் குடவரையில் 'அதிகார நந்தியை, வழி பட்டு உட்பிரகாரத்தின் தென்கிழக்குப் பகுதியை வலம்வரின் பிட்சாடனர். சிறுத்தொண்டர், திருவெண்காட்டுநங்கை சீராள தேவர், சந்தன நங்கை ஆகியோரின் திருவுருவங்களைத் தரிசிக் கலாம்: பின்னர், அறுபத்து மூன்று நாயன்மார்கள். பிரமன், உமையுருபாதியான், சம்பந்தர், அப்பர், சுந்தரர் மாணிக்கவாசகர், ஆகிய திருவுருவங்களைத் தரிசிக்கலாம். பின்னர், கிழக்குப்பார்த்த தனிக் கோயிலாக தல நாயகராகிய 'வாதாபி கணபதியை' தரிசிக்கலாம்: பரிவாரமூர்த்தியாக முருகன் தம்மிரு தேவியரோடும் இருப்பதையும் காணலாம்.

அர்த்த மண்டபத்தின் வாயிலில் பல்லவர்கால கற்கலை எழில்காட்டும் துவார பாலகர்களைக் காணலாம். பின்னர் கணபதிச்சரமுடையானை வழிபட்டு உத்திராபதியார்

திருமுன்னை அடையலாம். இவர் தம், அச்சமும், அருளுங்கலந்த கருணையும் கடுகடுப்பும் வழங்குகின்ற முகக் குறிப்பு காணக் கிட்டாத காட்சியாகும்.

இருபதடி தூரத்தில் மிகத் தொன்மையான ஆத்திமரம் உள்ளது.

வடக்குப்பிரகார மண்டபத்தில் 'நவதாண்டவ மூர்த்தி' களைக் காணலாம்.

சங்கம், பதுமம் என்பன எண்ணுப் பெயர்கள். ஒன்றுடன் பதினான்கு சுன்னங்கள் இட்டெழுதுவது சங்கம் எனவும், ஒன்றுடன் முப்பத்தைந்து சுன்னங்கள் இட்டெழுதுவது பதுமம் எனவும் கூறுவர். சங்கு, தாமரை ஆகிய வடிவங்கள் முறையே இவைகளின் குறியீடுகளாகும். திருக்கோயிலின் கன்னி மூலையில் இச்சின்னங்களைத் தாங்கிய இருகுறட் பூதங்களை தவறாமல் தரிசிக்க வேண்டியதாகும்.

கோயிலின் உட்பக்கச் சுவரில் சிறுத்தொண்டர் தம் குடும்பத்தாருடன் கயிலாயம் செல்லும் காட்சி சிற்பமாக அமைக்கப் பெற்றுள்ளது செப்புத்தகடு போர்த்திய நான்கு பட்டை வடிவ கொடிமரமும் உள்ளது.

## தலவிருட்சம்:

திரு ஆத்தி:- திருமாலும், பிரமனும், சிவனாரின் அடி முடியைக் காண முயன்ற போது, சிவன் திருமுடி மீதிருந்து வீழ்ந்து கீழ் நோக்கி வந்த தாழம்பூவானது, பிரமனுக்காக வேண்டி இறைவனாரிடம் பொய்யுரை பகர, அதன் காரணமாக. சாபம் பெற்ற தாழம்பூவே இங்கு ஆத்தி மரமாகத் தோன்றி அய்யன் அடியமர்ந்ததால், உய்யப் பெற்றது என்பர்.

## வேறு பெயர்கள்

விநாயகப் பெருமான், கயமுகன் எனும் அசுரனை அழித் தருளியபோது ஏற்பட்ட, இரத்த வெள்ளம் பரவிச் சிவந்த நிறமாகியதால், 'செங்காட்டங்குடி' எனப் பெயர் பெற்றது கணபதி வழிபட்டமையால் கணபதீச்சுரம். தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் இறைவனார் மந்திரங்களை உபயோகித்தமை யால் 'மந்திரபுரி' - சத்தியஷாடர் என்ற முனிவர் சிவலிங்கம

தாபித்து வழிபட்டமையால் 'சத்தியபுரி' -பொய்யுரை பகன்ற பிரமன் பழிதீர இறைவனை வழிபட்டமையால் 'பிரமபுரி' தட்சனின் யாகத்தில் கலந்து கொண்டமையால் ஏற்ற பழிதீர சூரியன் வழிபட்டமையால் 'பாஸ்கரபுரி' -சமுத்திர ராஜனாகிய வருணன் வழிபட்டமையால் -'சமுத்திரபுரி' -'வருணபுரி' துருவாசர், கௌதமர் ஆகிய முனிவர்கள் இட்ட சாபம் நீங்க இந்திரன் வழிபட்டமையால் 'இந்திரபுரி' என்பன போன்ற சுவையான கதைகளுடன் காரணப் பெயர்களும் இத்தலத்திற்கு உண்டு

**தீர்த்தங்கள்:**

சத்திய புஷ்கரினி—சூரியதீர்த்தம், இந்திர தீர்த்தம்-அக்னி தீர்த்தம்-யமதீர்த்தம், வருணதீர்த்தம் - வாயுதீர்த்தம் - சந்திர புஷ்கரணி, சீராளன் குளம் ஆகியன சிறப்புடையனவாகும்.

நாட்பூசை, திருவிழா, மாதவிழா, பெருவிழா ஆகியவைகளும் ஆண்டுதோறும் நடைபெறும் திருத்தலமாக திருச்செங்காட்டங்குடி விளங்குகிறது.

**கல்வெட்டுகள்:**

A R. No: 51 முதல் 74 வரை (1913) உள்ள கல்வெட்டுகளின் மூலம் இக்கோயிலுக்கென செலுத்தப்பட்ட நிபந்தங்களை அறியலாம்.

**சோழப்பெருமன்னர்களின் ஈடுபாடு:**

முதல் இராசராசன் (கி.பி. 985—1016) முதலாம் இராசேந்திரன் (கி.பி.1012—1044) முதலாம் இராசாதிராசன் (கி.பி. 1018—1054) முதற்குலோத்துங்கன் (கி.பி. 1070—1120) பரகேசரி இரண்டாம் இராசராசன் (கி.பி. 1146—1165) இரண்டாம் இராசாதிராசன் (கி. பி. 1163 — 1178) மூன்றாம் இராசராசன் (கி.பி. 1216 — 1256) இராசேந்திர சோழன் (கி. பி. 1245 — 1279) ஆகிய அனைவரும் தத்தம் ஆட்சிக் காலத்தே இக்கோயிலிற்கென கொடைகள் வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். மற்றும் விஜயநகர அரசவமிசத்தவரான வீரவிருபண்ண உடையார் 1306ல் பொன்னும் மணியும் அளித்துள்ளமையும், பாளையூரன், மூவேந்த வேளான், திருச்சிற்றம்

பலம் உடையான், பரந்தக பாண்டிய மன்னன் ஆகியோரும் இக்கோயிற்கென கொடையளித்தோரில் குறிப்பிடத்தக்கவரா வர்.

செந்தமிழ் நாட்டின் பாடல் பெற்ற தலங்கள் 274-ல் காவிரித் தென்கரைத் தலங்கள் 127 ஆகும். அவற்றுள் எழுபத் தொன்பதாக இடம் பெறும் இத்திருச்செங்காட்டங்குடி, சென் றடைந்து நின்று வழிபட்டோரின் இம்மை மறுமை வினைகளை நீக்கும் பெரும்புண்ணியத்தலமாக விளங்கி வருகிறது.

## 11. சேக்கிழாரின் சிறுத் தொண்டர் கதைக் குறிப்பு:

சேக்கிழாரின் பெரிய புராணம் இயற்றப் பெறுவதற்கு முன்னரே, நாயன்மார்கள் வரலாறுகளை மக்கள் ஓரளவு அறிந்திருந்தனர். அந்த நாயன்மார்களின் பெயர்களைத் தம் பிள்ளைகளுக்கு சூட்டி அழைத்து மகிழ்ந்தனர். திரு முறைகள் ஓதப்பட்டன. நாயன்மார்களின் உருவச் சிலைகளுக்கு பூசனை கள் செய்யப்பட்டன.

'புராணம் என்பது சரித்திரமும் புனைந்துரையும் கலந்த ஒன்று', என்ற முடிவினை பேரறிவாளர் திரு.வி.க அவர்கள் கூறியுள்ளார்.

பெரிய புராணம் பாடிய சேக்கிழார், அநபாயன் எனப் பட்ட, இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவர், அப்போதைய இளவரசன், இரண்டாம் இராசராசன், சேக்கிழாரின் தம்பி பாலறாவாயர். இவர் உமாபதி சிவத்திற்கும் முற்பட்டவர். சேக் கிழாரின் இயற்பெயர் இராமதேவர் என்பது. 'மாதேவடிகள்' எனும் சிறப்புப் பெயர் பெற்றவர், அருண் மொழித் தேவர் எனவும் இவரைக் கூறுவர். இச் செய்திகளை டாக்டர் மா. இராச மாணிக்கனாரின் பெரிய புராண ஆராய்ச்சி நூலிற் காணலாம்.

சேக்கிழார், தமக்கு முற்பட்ட, ஏறத்தாழ 250 முதல் 700 ஆண்டுகள் வரை, சுமார் 450 ஆண்டு காலத்தில், பரந்துபட உலவிய, நாயன்மார்களின் வரலாற்றை தொகுத்தளிக்கும் கடினமான பணியை மேற்கொண்டார், என்றாலும், இவர் அமைச்சராக, இருந்தமையால், தம்மின் முன்னோர் படைத்த இலக்கியங்களையும் படிக்க வசதி பெற்றார், வேற்று மொழி

நூல்களையும் அறிந்து கொண்டார். மேலும் அடியார்கள் சம்பந்தப்பட்ட பல தலங்களையும் தாமே நேரிற் சுற்றியலைந்து கண்டு, ஆங்காங்கே நிலவிய மரபு வழிச் செய்திகளையும், செவி வழிக் கதைகளையும் கேட்டு அறிந்து, கல்வெட்டுக்கள் மற்றும் ஆலயங்கள் ஆகியவற்றின் உண்மைகளையும் உணர்ந்து கொண்டதோடு இறையருளும் வாய்க்கப் பெற்ற பின்னரே தமது பெரிய புராணத்தை இயற்றிடத் தொடங்கினார். சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் தம்மின் முன்னோர் கூறியவற்றை மேலும் தெளிவாகக் கூறியுள்ளார், அவர்கள் கூறாத புதிய செய்திகளையும் கூறியுள்ளார்; அத்துடன் சில செய்திகளை மாற்றியும் கூறியுள்ளார்; என்பதனை ஆய்வாளர் கள் ஒப்பியுள்ளனர்.

இனி இந்நூலிற் காணும் இசை நாடகத்தினை இயற்றியுள்ள ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயர் தமது அகவற்பாவில், "பேரடைந்துள்ள பெரியபுராணத்துள் கூற்றுபத்து மூன்றுபேர் கொள்கையிற் சிறுத் தொண்டரென்னும் திருமறையவனாய் அருட் கொண்டுனன் புகழ் அறைகுவன்" எனத் தெளிவாகக் குறிப்பிட்டார். எனவே பெரியபுராணத்துள் இச் சிறுத் தொண்டனாரின் கதைப் போக்கினை அறிய வேண்டிய கடமை யுற்றவறாகிறோம்.

சேக்கிழார் பெருமான் தாமியற்றிய அறுபத்து மூவர் வரலாற்றில் 42வதாக சிறுத்தொண்ட நாயனாரின் வரலாற்றை கூறுகிறார். இதில் கூறப்பெறும் நாயன்மார்களில் பதினைந்து பேர்களுக்கு மட்டுமே இறைவன் இடப வாகனத்துடன் காட்சி யளித்துள்ளார் என்பதும் அவர்களில் சிறுத்தொண்டனாரும் ஒருவர் என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

"அடியார் தம்மை நயப்பாட்டு வழிபாட்டால்
மேதகையாரவர் முன்பு மிகச்சிறியராய்
அடைந்தார் ஆதலினாற் சிறுத்தொண்டர் என
நிகழ்ந்தார்"

என்ற வரிகள் பரஞ்சோதிப் பண்டிதனார்க்கு சிறுத்தொண்டர் என்ற பெயர் ஏற்பட்டதன் காரணத்தைக் கூறுகின்றன.

காவேரித் திருநாட்டின் வளப்பத்தைக் காணவேண்டி நாடு முழுவதுமாக சுற்றிப் பார்க்க வேண்டியதில்லை, திருச்செங்

காட்டங்குடியை பார்த்தாலே போதும் என்ற கருத்தில் 'காவேரித் திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங்குடி' என்கிறார்.

"உலகில் வளர் உயிர்களுக்கெல்லாம் உயர் காவற்றொழில் பூண்டவர்" பரஞ்சோதியார். இவர் 'ஆயுள் வேதக்கலையும், அலகில் வடநூற்கலையும், தூய படைக்கலத் தொழிலும் துறை நிரம்பப் பயின்றவர்' இவர் படைத்தலைவராய் பணிபுரிந்து வெற்றி பெற்றவர் என்பதை"

"மன்னவர்க்குத் தண்டுபோய், வடபுலத்து
வாதாவித், தொன்னகரந்துகளாகத் துளைநெடுங்கை
வரையுகைத்துப்
பன் மணியும் நிதிக் குவையும் பகட்டினமும் பரித்
தொகையும்
இன்னன எண்ணில கவர்ந்தே இகலரசன் முன்
கொணர்ந்தான்"

என்ற வரிகள் மூலம் அறியலாம், மேலும்,

"மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்த வலியுடைமை
யினால் எதிரிவருக் கிவ்வுலகிலில்லை" எனவும் பாராட்டப் படுகிறார். இவரது மனைவியார் 'தீதில் குடிப்பிறந்த திருவெண் காட்டு நங்கை' என்பார்.

பரஞ்சோதியார் வாதாபியை வெற்றி கொண்டு வந்த பின்னர் காடர்கோன் மன்னர் அவரை சிவனடியாருள் ஒருவர் என்பதை உணர்ந்து, இப்படிப்பட்ட அடியாரைப் பணி கொண்டமைக்காக வருந்தி, பின்னர் பெரும் பொருள் கொடுத்து, தமது மந்திரியாகிய பரஞ்சோதியை, அறச்சாலை அமைத்து தருமம் செய்ய விடுத்தார். அவ்வாறே தருமம் செய்வான் வேண்டி, பரஞ்சோதியாரும் தமது மனைவியுடனும் பணிப்பெண்ணாகிய சந்தனநங்கை என்பாளுடனும், நகர் நீங்கி கணபதீச்வரம் எனும் திருச்செங்காட்டையடுத்த ஒருபகுதியை அடைந்து, அடியார்களுக்கு பால் தயிர் நெய் ஆகியவற்றுடன் அறுசுவை அன்னமளித்து வந்தான். 'திரு அமுது முன்னூட்டிப் பின்னுண்ணும் நியதியாகக் கொள்ளும் தூய தொழிற்றலை நின்றார்'

'நீராருஞ் சடைமுடியார் அருளினால் நிறை தவத்துப் பேராள ரவர்க்குப் பெருகு திரு மனையறத்தின் வேராகி விளங்கு திரு வெண்காட்டு நங்கைபால் சீராளதேவரெனும் திருமைந்தர் அவதரித்தார்' என அவர்க்கு குழந்தை பிறந்த செய்தி கூறப்படுகிறது. பிறந்த பிள்ளையை, பாராட்டி, சீராட்டி, பட்டுடுத்தி, பன்மணி பொன்மணி யணிவித்து, கண்ணே போலகாத்து வளர்த்து, "பந்தமற வளர்ந்தவரை பள்ளியினில் இருத்தினார்."

இவ்வாறு இன்பமுற இருக்கும் நாளில், "இவர் திருத் தொண்டிடுங் கயிலை அத்தர் திருவடியிணைக்கீழ்ச் சென்ற ணைய, அவருடைய மெய்த் தன்மை நுகர்ந் தருளுதற்கு, விடையவர் தாம் சித்த மகிழ் வயிரவராய்த் திருமலை நின்றணை கின்றார்."

கங்காள மூர்த்தியாய், தமது பேருரு மறைத்து பெருநகர் நீங்கி வேறுரு கொண்டு வரும் இறைவனின் அழகை கீழ்க்கண்ட வரிகள் தெரிவிக்கின்றன.

"கருங் குஞ்சி கொந்தள மாகப் பரப்பி, தும்பை மலர் சூடி" நெற்றி நிறைய திருநீறு சாற்றி — முடியிலிருக்கும் வெண் பிறையை சிறியதாக்கி திலகமாக சாற்றி — காதினிற் செல்வ ரத்தை மலரை குழயென பூண்டு, மார்பினில் அரவுதனை நூலாக அணிந்து, வெண்பளிங்கு மணிகளை ஆரமாகப் பூண்டு,—"அஞ்சுகத்தின் அணி விளங்க,' அதாவது பசுமை நிற உடைதரித்து, கைகளில் அணிகொள் வளையணிந்து, "பிரானருளே பேணுவீர்"—"வருமன்பின் வழிநிற்பீர்" என கால்களிலுள்ள சிலம்புகள் ஒலிக்க, கையில் சூலமேந்தி—முகத் தில் அருள்மிகு முருவல் தெரிய—'வண் தமிழ் நாட்டுச் செங் காட்டங்குடி யடைந்தார்"

"தண்டாததொரு வேட்கைப் பசியுடையார் தமைப் போலக்
கண்டாரைச் சிறுத்தொண்டர் மனைவினவிக் கடிதணைந்து
தொண்டனார்க் கெந்நாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர்
வண்டார் பூந்தாரரிம் மனைக்குள்ளாரோ?" என்ன"

மனையின் கண் இருந்த சந்தன நங்கை யெனும் பணி மாது வந்து வணங்கி, ''அவர் புறத் தனைந்தார்—அகத் தெழுந்தருளுமென''

''மாதரார் தாமிருந்த இடவகையிற் றனிப் புகுதோம்'' என இறைவன் கூறுகிறார்.

பின்னர் உள்ளிருந்து மங்கை நல்லாள் வெண்காட்டு நங்கை வெளியில் வந்து, அடியாரை வணங்கித் தொழுது—

''அம்பலவர் அடியாரை அமுது செய்விப் பாரிற்றைக்
கெம்பெருமான் யாவரையுங் கண்டிலர், தேடிப்போனார்,
வம் பென நீர் எழுந்தருளி வருந் திரு வேடங்கண்டால்,
தம் பெரிய பேறென்றே மிக மகிழ்வார்! இனித்தாழார்,
இப்பொழுதே வந்தனைவார், எழுந்தருளி இரு மென்ன''
''ஒப்பில் மனையறம் புரப்பீர்! உத்திராபதி யுள்ளோம்,
செப் பருஞ் சீர் சிறுத்தொண்டர் தமைக்காணச்
சேர்ந்தனம், யாம்
எப்பரிசு மவரொழிய இங்கிரோ''

மென்றருளி, கண் நுதலிற் காட்டாதார்'' கணபதீச் சரத் தின் கண் வண்ணமலர் ஆத்தியின் கீழ் இருக்கின்றோம். மற்ற வர் தாம் நண்ணினால், நாமிருந்த பரிசுரைப்பீர்'' ரென்றருளி அண்ணலார் திருவாத்தி அணைந்தருளி அமர்ந்திருந்தார்.

இவ்வாறு இறைவனார் ஏக, தொண்டர் அமுதளிப்பான் வேண்டி அடியாரை பலவிடத்தும் தேடி அலைந்து, திரிந்து, களைத்துச் சோர்ந்து பின் வீட்டையடைய, நங்கையார், அடியார் ஒருவர் வந்து அகன்ற செய்தி கூறினார், உடனே ''அடியேன் உயர்ந்தேன் எங்குற்றார் உரையாய்?'' என்ன 'திருவாத்திமர நிழலில்' இறைவனார் இருந்திடும் கோலம் கூறி உடன் சென்று அவரை திரு அமுதுண்ண அழைத்து வரும்படி வேண்டினார். தொண்டரும் விரைந்து சென்று ஆத்திர மடைந்து அங்கு வீற்றிருந்த கங்காள உருவினரை தாள் பணிந்து நின்றார், நின்ற தொண்டரை நோக்கி இறைவனார், ''நீரோ பெரிய சிறுத் தொண்டர்''—என திரு வாய் மலர்ந் தருளினார். அதற்குத் தொண்டர் மீண்டும் பணிந்து போற்றித் தொழுது—'' தவத்தால் உமைக் கண்டேன்'' எமது இல்லத்திற் கெழுந்தருளி திருவமுதுண்டருளல் வேண்டுமென வேண்டினார். அதற்கு கங்காள மூர்த்தியாய் நின்ற இறைவனார், ''நிகழுந்

தவத்தீர்! உமைக் காணும் படியால் வந்தேன், உத்திராபதி யோம் எம்மை பரிந்தூட்ட முடியாதுமக்குச் செய்கை அரிதொண்ணா'' தென்று மொழிந்தார். ''அடியார் தலைப் பட்டால் தேட ஒண்ணாதனவும் உளவாகும்!'' என தொண்டர் கூறி நீவிர் உண்பதற்கேற்ற உணவின் நலம் ஈதெனக் கூறு மென்றார். அதற் கிறைவர்,

''நண்பு மிக்கீர்! நாமுண்ணப் படுக்கும் பசுவும்
நரப் பசுவாம் — உண்ப தஞ்சு பிராயத்துள் உறுப்பில்
மறு வின்றேல் இன்னம்
புண் செய் நோவில் வேலெறிந்தாற் போலும் புகல்வ
தொன்'' றென்றார்.

இப்போதும் தொண்டர்'' யாதுமரியதில்லை'' கூறுமென வேண்ட, இறைவர்.

''ஒரு குடிக்கு நல்ல சிறுவன், ஒரு மகனைத்
தாதை அரியத் தாய் பிடிக்கும் பொழுதில் தம்மில்
மன முவந்தே ஏதமின்றி அமைத்த கறி யாமிட்
டுண்ப'' தென மொழிந்தார்.

அதற்குத் தொண்டர் 'நன்று அவ்வாறே அமுது அளிப்பேன்' எனக்கூறி வீடுவந்து ஆத்திமரத்தையன் கூறிய தனைத்தையும் தன் துணைவி யாகிய வெண்காட்டு நங்கையிடம் கூறி, தமது குலம் தழைக்கத் தோன்றிய, கண்மணிக் கொப்பான சீராளனையே அரிந்தாக்கி அளிக்க, உளத்தே கருதி ''எனை இங்குய்ய நீ பயந்தான் தன்னை யழைப்போம், யாம்'' என்றார் இது கேட்ட அவ்வம்மையார் ''அன்றலர்ந்த செந்தாமரை மலரினை வென்ற தம்மா'' எனும் கம்பனின் வரிகள் நினை விற்கு வரும் வகையில் ''மலர்ந்த முகம் நன்று காண்ப'' ''நம்மைக் காக்க வரும் மணியைச் சென்று பள்ளியினிற் கொண்டு வாரு'' மென்றார், திருவனையார்''.

தாமதமின்றி தொண்டரும் விரைந்து திருமருகல் சென்று தமது புத்திரனை அழைத்து வந்தார். இனி இங்கு சேக்கிழார் கல்மனமும் கசிந்துருகும் வண்ணம் பிள்ளையைத் தாயும் தந்தை யும் மனமுவந்து தலையரியும் காட்சியை'' ''நல்ல மகனை, எடுத்துலகை வென்ற தந்தையார் தலையைப் பிடிக்க, விரைந்து மெய்த் தாயார் இனிய மழலைக் கிங்கிணிக் கால் இரண்டும் மடியின் புடை யிடுக்கிக் கனிவாய் மைந்தன் கையிரண்டும்

கையாற பிடிக்க, காதலனும் 'நனி நீடுவகை யுறுகின்றார்' என்று மகிழ்ந்து நகை செய்யத் தனிமா மகனைத் 'தாதையார் கருவி கொண்டு தலையரிவார்'' என்று கூறி, 'தாயும் தந்தையும் உள்ளத்து சிறிதும் மாறுபடாது வினை செய்தனர்' என்பதனை மேலும் வலியுறுத்த வேண்டி, "இருவர் மனமும் பெருவகை எய்தி அரிய வினை செய்தார்'' என்கிறார்;

இவ்வாறாக, பிள்ளையை அரிந்து வகையாக அமுது தயாரித்தனர்—தலைக்கறி உண்பதற்காகதென எண்ணி சந்தன நங்கையிடம் கொடுத்து விலக்கினர். ஆனால் இல்லத்திற் கேற்ற நல்ல பணிமாது ஆதலால் 'இதனையும் அவ்வடியார் வேண்டின் என் செய்வது' என ஒரு கணம் எண்ணி அத் தலைப்பாகத்தையும் உரிய முறையில் கறி சமைத்து வைத்தாள். இவள் எண்ணியவாறே அடியாரும் அமுதுண்ணும் போது தலையின் கறி எங்கே' எனக் கேட்க, பதறிய வெண்காட்டு நங்கை, "தலையிறைச்சி அமுதுக்காகா தெனக் கழிததோம்'' என்ன, "அதுவும் கூட நாம் உண்ப'' தென்றார் இடர்தீர்ப்பார்'. இவ் வேளையில் சந்தன நங்கை, தான் தனியே ஆக்கி வைத்திருந்த தலைக்கறியை எடுத்து வந்து, அடியார் முன் படைத்தாள். மனம் களிப் பெய்திய தொண்டர். "அய்யன் மீர்! இனிதே இனி அமுதுண்க' வென்றார். ஆனால், அடியாரோ; நெற்றியிலே வெண்ணீறிட்ட ஓரடியார் உடனமர்ந்து அமுதுண்டாலேயே தாமும் அமுதுண்ணலாகும் என்றார். இது கேட்ட தொண்டர் "இது ஏது புதிய இடர் ஒன்று வந்துற்றது, இந் நேரத்தில் மேலும் ஒரு அடியவர்க்கு எங்கு தேடிச் செல்வது'' என வருத்த முற, அதனை உணர்ந்த இறைவனார், உம்மைப்போல் நீறிட்டாருளரோ உண்பீர் நீர்'' என உரைத்தார், அவ்வாறே தொண்டரும் ஓர் மனையில் அமர்ந்து தமதருமைப் பிள்ளையை அரிந்து ஆக்கப்பட்ட கறியமுதை உண்ணவும் தலைப்பட்டார், அப்போது மீட்டும் அடியார் தொண்டரை நோக்கி, பிள்ளையில்லாதார் வீட்டில் போசனம் செய்வது மகா பாவச் செயலாகும் எனவே உனது "மைந்தன தன்னை அழையுமென' இடியுண்ட நாகம் போல் மருண்ட தொண்டனார், "ஈறும் முதலும் இல்லாதார்க் கிப்போது தவான் அவன்'' என்றார் அதற்கு ஈசரோ, "நாமிங்குண்பதவன வந்தால், நாடி யழையுமென'' தொண்டரும் "மைந்தா வருவாய்'' என்று கூவி யழைத்தார் ஆனால் மைந்தன் வந்தானில்லை. தெள்ளிய உள்ளத்து வெண்காட்டு நங்கை, "செய்ய மணியே! சீராளா!

வாராய்! சிவனார் அடியார்'' யாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றாறென்றோல மிட'' ''பள்ளியினின்று ஓடி வருவால் போல'' பாலகனும் ஓடி வந்தான்.

வந்த சீராளனை வெண்காட்டு நங்கை, தமது கைகளினால் அள்ளி எடுத்து மார்போடணைத்து, முத்தமிட்டு, பின்னர் தமது கணவனாராகிய தொண்டரிடம் கொடுக்க, சிறுத்தொண்டரும் களி கூர்ந்தார்.*

பின்னர், தொண்டர், தம் மகனை அழைத்துக் கொண்டு அடியார் அமுதுண்ண அமர்ந்திருந்த இடத்திற்கு வந்தார். ஆனால் அங்கு அடியாரைக் காணவில்லை. ஆதலால், தொண்டர் மிகவும் அதிர்ச்சியும் மனக்கலக்கமும் அடைந்தார். பின்னர் இறைவர் இடபாருடராக இன்னமுதிடட தொண்டருக்கு காட்சி தந்தார்.

''தனிவெள் விடைமே னெடு விசும்பிற் றலைவர் பூத கண நாதர்
முனிவரமரர் விஞ்சையர்கள் முதலானோர்கள் போற்றிசைப்ப
இனிய கறியும் திருவமுதுமமைத்தார் காண வெழுந்தருளிப்
பனிவெண் டிங்கண் முடி துலங்கப் பரந்த கருணை நோக்களித்தார்''.

இவ்வரிய காட்சியை கண்ட தொண்டரும், அவர் தம் மனைவியாகிய வெண்காட்டு நங்கையும், தாதியாகிய சந்தன நங்கையும், சீராளனும் களிபேருவகை எய்தினர்.

கொன்றை வேணியார் தாமும் பாகங்கொண்ட குலக் கொடியும்
வென்றி நெடுவேண் மைந்தரும் விரைப் பூங்கமலச் சேவடிக் கீழ்

---

*இங்கு தொண்டர் களி கூர்ந்தது தமது மகன் உயிர் பெற்று வந்தமையால் அல்லவெனவும், இவன் வந்து விட்டபடியால், இனி அடியார் தடை ஏதும் சொல்லாது அமுது உண்டிடுவாரே என்ற காரணத்தால் தான் என்பதே என உரையாசிரியர் திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

நின்ற தொண்டர் மனைவியார் நீடுமகனார், தாதியார்
என்றும் பிரியாதே யிறைஞ்சி யிருக்க வுடன்
கொண்டேசினார்''

இவ்வாறு அடியார்க்கு மட்டுமின்றி அவர்தம் மனைவிக்கும், பணிப்பெண்ணுக்கும் மகனுக்கும் அருள்புரிந்த இவ்வரலாறு, ஏனைய அடியார்கள் எவர் மாட்டும் காண இயலாத சிறப்புடையதாகும்.

## 12. நூலின் சுவை

''அரிய தண்கலை வான்மதியமும் கொதிகொள் ஆலமும்
தனதிடத் தடக்கி
உரிய வொண் கங்கா நதிக்கொரு பாதியால் யுறை
பெருமுயர் மகோத்தியிற்
பரிய திண்சிலை யோடம் பெலா முகந்து பற்குணப்
பொருப்பிடைப் பொழியும்
கரிய பைம் புயலைக் கை தொழுமவரே கருவிலே
திருவுடையவரே''

என்னும் வில்லிபுத்தூராரின் வாக்கிற் கிணங்க,

இரணியனின் தூய பத்தினியாகிய நீலாவதி யென்பாள்

பிரகலாதனைத் தன் மணிவயிற்றில் தாங்கிய காலத்தில் நாரதர் வழி நல்லறம் கற்றார்ப்போலவே, பரஞ்சோதியாரின் பத்தினியாகிய வெண்காட்டு நங்கையும் அறனடியார், தம் பணி செய்யுங் காலையில் நல்லருளோடு அவ மகற்றி உய்யும் வழியும் உணர்ந்தாள். எனவே சீராளன் பிறந்து ஐந்து பிராயத்தவனாக இருந்தபோதே ''பெரும் பேச்செல்லாம'' பேசுகின்றவனானான் தன்னாற்றன்னைப் பெற்றோரையும் உய்வித்தான்:

''நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீ மனமே
மாற்றிப் பிறக்க வழியறிந்தாயில்லை மாமறை நூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்
ஆற்றிற் கிடந்து துறை தெரியாமல் அலைகின்றாயே''

எனப் பட்டினத்தடிகள் கூறியபடி, மந்திரித் தொழில் புரிந்த பரஞ்சோதியார் அதனை விடுத்து அறஞ் செயப்

போந்தார்: அறிவின் செறிவும், சீலமும், நோன்பும் கொண்டால் மட்டும், பரம் பொருளின் அருட்பார்வை கிட்டி விடாது. ஒரு ஞானாசிரியனின் வழிகாட்டல் இன்றி சீவன் முத்தி கிட்டா தென்பது சைவத் துணிபாகும்.

பரஞ்சோதியை சீவன் முத்தனாகக் காட்டத் துணிந்த ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயர் தமது நாடகத்தில் பரஞ்சோதிக் கேற்ற ஞானசிரியனாக சம்பந்தப் பெருமானை அரசவைக்கு வரச் செய்து, காடவர்கோனிடம் ''பரஞ்சோதி ஒரு சிவ பக்தர்' இவரைப் பணிகொண்ட பாவம்தீர உன் செல்வமெலாம் அவர் பாலீந்து அவரை அறஞ்செய விடுப்பாயாக'' எனக்கூறியதோடு, பரஞ்சோதியாருக்குப் பஞ்சாட்சர மந்திர உபதேசமும் செய்வித்ததாக ஒரு காட்சியை சேக்கிழாரினின்றும் புதியதாக அமைத்துள்ளார்.

தொண்டரும், தன் ஞானாசிரியன் சொற்படி ''சிலம்பணி கொண்ட செஞ்சீரடி பங்கன் தன் சீரடியார் குலம் பணிகொள்ள தனைக் கொடுத்து, ''தொண்டரொடு கூட்டுக்கொண்டு'' சிவன் முத்தனாகிட தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்கின்றார். மெய்யடியார்களைப் பரம்பொருளாகவே காண்கின்றார்.

இனி வெண்காட்டு நங்கையை உய்விக்க வேண்டி நாடகாசிரியர் செய்யும் யுக்தியைக்காணில் சுவை கூடும்.

சிவனும் பார்வதிதேவியாரும் அமர்ந்திருக்கும் கயிலைக்கு நாரதர் வந்து சிறுத்தொண்டரின் அன்னதானப் பெருமை யினைக்கூறிட, ''கேட்கின்றபடியே அன்னம் படைப்பவர் கிடையாதிந்த நாட்கண்டதில்லைத் தேவரீர் நவின்றது மெய்யே யானால் ஏற்கின்றார் வேடம் பூண்டு, இதய சோதனைகள் பார்த்து ஆட்கொள்ள வேணும்'' (பக்-72) என்று உமையவள் கேட்டுக் கொண்டதற் கிணங்கவே இறைவனார் உருவொளித்து வந்தார் என்பதை நோக்கின் மனையறத்தே மனையாளின் மன ஒப்பமின்றி கணவரின் செயல் அமையாது என்பதனைக் காட்டும் ஆசிரியரின் நயம் பாராட்டிற்குரியது-இதே போன்று ''மந்திரி வேடம் பூண்டு அடியார்களைத் தேடின் கிடைப்பரோ? தொண்டர் வேடம் பூண்டு பின்னர் தேடுங்கள் அடியார் அகப் படுவர்'' என்பதாக வெண்காட்டு நங்கையைக்கூறச் செய்கிறார். (தரு 41—பக்—77)

சைவ நெறிப்படி, மூவகை சீவன் முக்தர்களான, விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் ஆகியோரில் விஞ்ஞானகலருக்குப் பரம்பொருளானது அருவமாய் நின்று உணர்த்தும், பிரளய கலருக்கு உருவமும், அருவமுமாக நின்றுணர்த்தும், மூன்றாம் நிலையினரான சகலருக்கு பரு உருவமாக, மானிடச் சட்டை போர்த்து பூதலத்தில் எழுந்தருளி அருள் புரியும். இவ் விதியினுக் கிணங்கவே பார்வதிதேவியாரும் கூற, இறைவனாரும் கயிலையிறிந்து உருவம் கரந்து, வைரவச் சந்நியாசியாக உருவேற்று வருகின்றார்.

தேவி, தன் கணவனாகிய இறைவனிடம் நேரே சென்று உடன் தொண்டர்க்கு அருள்புரியும்படி கூறவில்லை—'இதய சோதனைகள் பார்த்தே' அருள் புரியச் சொல்லியுள்ளாள்—இறைவர்க்கு, அருள் புரிவதில் கிட்டும் ஆனந்தத்தை விட-அடியாரைச் சோதிப்பதில் மிக்க ஆனந்தம்—தன் மனைவி மகனையும் கூட விடார்—

இனி முதற்கண்

'விண்ணின் றிழிந்து வினைக் கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளை தலைக்காவல் முன் வைத்து
உண்ணின்றுருக்கி யொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டி களிம் பறுத்தானே'-

எனும் திருமூலரின் வாக்கிற் கொப்ப, தாய்க் குலத்திற்கே முதன்மையளித்து — தொண்டர் தம் மனையகத்தில்லாத போது வந்து — வெண்காட்டு நங்கைக்கும் சந்தன நங்கைக்கும் காட்சி தந்து — கண்காட்டி களிம் பறுக்கின்றார் — பின்னரே சிறுத் தொண்டர் கண்ணிற்குத் தம்மை காட்டிக் கொண்டார்—

இவ்வாறிருக்க இறைவனார் நிகழ்த்திய சோதனைகளின் திறம் காணின் கல் மனமும் கசியும்.

முதற்சோதனை: அன்னமுண்டிட பரதேசிமார் எவரையும் கண்ணிற் காட்டா தொழித்தது.

இரண்டாவது: தொண்டர் தம் இல்லில் சமைத்திருக்கும் உணவு வகை உதவாதெனவும், பிள்ளைக் கறியமுதே உண்போம் எனவும் கூறுகிறார்.

இதற்கு உடன் ஒப்பிய தொண்டர், சத்தியமும் செய்து கொடுத்து விட்டு, தமது மகனை அரிந்தாக்கியளிக்கத் தாமுளம் கொண்டவாறே தம் மனையாளின் மனமும் கூடவேண்டுமென வேண்டிச் செல்ல, அம்மாதர் சிரோண்மணியோ கருத் தொருமித்து வளர் காதலனே சீராளக் கண்மணியை யழைத்து வாரும். ஓதுங் கூடத்திற் கேகி ஒரு நொடியில் அழைத்து வாரும். அரைநொடியில் அழைத்து வாரும்." என்கிறாள். (பக்-119)

தொண்டர், பள்ளிக்குச் சென்று சீராளனை அழைக்கு முன்னேயே இறைவனார், அச்சீராளனுக்குக் கனவினால், வரு வது காட்டியருளியதால்—மாமனழைப்பதாகக் கூறும் தந்தை யிடத்தே சீராளன், "வந்த காரியம் எந்தனுக்கே தெரியும்" (பக்-131–தரு-72) எனக் கூறியதோடு

"எந்தன் மேல் முள்ளுங் கல்லும் ஏதேனும் காயமாகில்
அந்தகன்றனை யுதைத்த அய்யருண்காரோ ஏதோ
எந்தையே எமையே யுந் தோளில் ஏற்றிச் செல்லுவீரே!"

(பக்—138) என்று "இளமையிலேயே பழமைகள் பேசுகின்றான்,

மூன்றாஞ்சோதனை: பள்ளியினின்றும் அழைத்து வந்த பிள்ளையை தாய்மடி மீதிருத்தி வாள் கொண்டறுத்து வகை யாகக் கறியமுது செய்து வைத்து விட்டு—ஆத்திமரத்தடிக்கு வந்து அமுதுண்ணவாரும் என தொண்டர் அடிதொழுது அழைக்க—இறைவனார்,

"தில்லுமுல்லும் பேசி இல்லுக்கு வாவென்ற திருடா
எழுந்திரடா
அட முரடா எழுந்திரடா!" (தரு 84-பக்-156)

என வசைமொழி கூறி-என்னைச் சாப்பிடச்சொல்லி அநேகமான பேர் வந்து கூப்பிட, அதற்கு நான் போகாமலிருக்க-நீ இப்படி சொன்ன கெடுவான நாழிகையுந் தப்பி-தாமதப்படுத்தினதினால் நான் சாப்பிட வரமாட்டேன்" என்று கூறுகிறார்.

நாலாம் சோதனை: அழுதும் தொழுதும் அடிபணிந்தும் வேண்டிய தொண்டருடன் எழுந்து மனையேகி உண்ணவும் அமர்ந்தாயிற்று. கறிகளின் வகையின்ன திதுவெனக் கூறிப் படைக்கும்போது 'தலைக் கறியெங்கே' 'அதுவும் யாமுண்ப' என்றார்.

இந்த சோதனையில் தொண்டர் வெற்றிகாண உதவியவள் சந்தன நங்கை எனும் பணிமாது. பாத்திரப் படைப்பில் ஒரு சிறிய பாத்திரமாக சந்தன நங்கையின் பாத்திரம் அமைக்கப் பெற்றிருந்தாலும் — ஆசிரியரால் உரிய தருணத்தில் உயர் விடம் அளிக்கப் பெறுவது நாடகவியலின் நுட்பமான படைப் புத் திறமாகப் போற்றற்குரியதாகும். தொண்டரும் நங்கையும் கறியாக்கியபோது தலைக்கறியை அடியார் உண்ண மாட்டார் எனக் கருதி அதனை விலக்கினர். ஆனா அவ்விடத்தே உத விக்கு நின்ற சந்தன மாதின் மனம் சற்றே கலக்கம் எய்தியது— (இக்கலக்கம் எவ்வாறேற்பட்டதெனின் திருநாவுக்கரசர், அப்பூதி யடிகளாரின் இல்லத்தில் அமுதுண்ணுங்கால், உண்ணுமுன் நீரணிவான் வேண்டி அனைவருக்கும் தம் திருக்கரத்தாற்திரு நீறளித்தார், அப்போதவர் உள்ளத்தே ஒரு தடுமாற்றம் ஏற் பட்டது. இத்தடுமாற்றத்தாலேயே அப்பூதியடிகளின் இடர் நீங்கியது. அதனை "உம்பர்பிரான் திருத்தொண்டர் உள்ளத்தில் தடுமாற்றம் நம்பர் திருவருளாலே அறிந்தருளிநவை தீர்ப்பார்" எனும் வரிகளால் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். இங்கு சந்தன மாதிற்கேற்பட்ட கலக்கமும் இவ்வாறே என்க:) இல்லத்திற் கேற்ற பணிமாதான அவள், 'இதனையும் அவர் வேண்டின் என் செய்வது' என எண்ணி தனியே வகையாகச் சமைத்து வைத் தாள்—அடியார் கேட்டபோது அதனை எடுத்தளித்து இடர் களைந்தாள்:

சோதனை ஐந்து: ஆயிற்று, தலைக்கறியும் படைத்தாயிற்று இனி "எல்லாம் தெரித்திடும் தொண்டனாரே' என்போல் சிவனடியார்கள் தன்னை அரைநொடி தனிலெம்மோடே அமுதருந்திடவிப்போதே திறமுடனழைப்பாய்" (பக்-165) என் கிறார் இறைவனார். இதனைக்கேட்ட தொண்டர் இடியுண்ட நாகம்போல் நடுங்கி' இன்னுமொரு அடியார்க்கு எங்கு நான் போவேன்' என அரற்றினார். அதற்கிறைவர் "ஆனால் சரி நீயும் ஒரு அடியார் போலவே உள்ளவன் ஆதலினால் 'நீரே எம்முடனிருந்துண்ணும்" என்றார். தான் பெற்ற பிள்ளையைத் தன் கையாலே யறுத்து தன் மனைவியினால் சமைத்துப் படைக்கப் பெறத்தானே யுண்ணும் கொடுமை'! இதற்கீடாக 'சுடலை காத்த அரிச்சந்திரன், தன் மனைவி, தம் மகவினை எரித்திட முனைந்த போது தடுத்து "தாலியை விற்றேனும் கொள்ளிக் காசு கொடுவெனக் கேட்ட காட்சியை கூறின் தகும். ஆயினும் நம் தொண்டர் அதற்கும் உடன்பட்டு உடன் அமர்ந்து உண்ணத் தலைப்பட்டார்.

சோதனை ஆறு: "பிள்ளையில்லாத வீட்டில் போஜனம் செய்தால் மகா பாவம்"-"அல்லது இல்லையாகில் அமுதுண்க மாட்டோம் - வல்லமை பேசிடாதுன் மகன் தனை அழைப்பிப் பாயே" என்றார். இறைவர் (பக் 167-168) இப்போதும் தொண்டர் கலங்காது. "அவன் ஓதிவாப் போயுளளான் வரத் தாமதமாகும். நீங்கள் போஜனம் பண்ணுங்கள்" எனக்கூறிப் பார்த்தார். ஆனால் அதனை அரனார் ஏற்றாரில்லை. எனவே வெளியில் சென்று பிள்ளையை ஓலமிட்டு அழைக்க அவனருளாளே அறுப்புண்ட பிள்ளையும்" முந்துள வுருவினும் சுந்தரமாகவே" (பக்.172) வந்தும் சேர்ந்தான்.

ஏழாம் சோதனை: இவ்வாறு பிள்ளை வந்ததால் இனியும் தடையேதும் சொல்லாமல் அடியார் அன்னமுண்பார்கள் என உளம் மகிழ்ந்து இல்லினுள்ளே வந்து நோக்கின் அங்கு கங்காள தேவரைக் காணவில்லை-காட்டா தெளிந்தார் எங்க.

இனியும் நீட்டின் நன்றாகாது எனவே 'நீர் எம் முன் இப்போதே வராவிடின் கைவாளால் சிரமறுத்து மாள்வது உறுதி எனத் தொண்டர் சூளுரைக்க, அப்போது தனியேதான் மட்டுமின்றி உமையாளுடன் கூட இடபாருடனாகக் காட்சி தந்து அடியாரின் குடி முழுதுங்கைலை கொண்டேகினார்.

மாயத்திரைகள் ஏழு என்பதனை வள்ளலார் இராமலிங்க அடிகளார் விளக்கும் போது, அவைகளை மாயாசக்தி, கிரியா சத்தி, பராசத்தி, இச்சா சத்தி, ஞான சத்தி, ஆதி சத்தி, சிற் சத்தி எனக் கூறி அத் திரைகளின் நிறங்களாக முறையே, கருப்பு, நீலம், பச்சை, சிவப்பு, பொன்மை, வெண்மை, கலப்பு நிறம் என்பதாகவும் கூறுகிறார் (வள்ளலார் விளக்கம், வசன பாகம்: 81-24) இதனை உணர்ந்த ஸ்ரீ ரெங்கநாத உபாத்தி யாயரும் தம் நாடகத்தே ஆன்ம முக்தியை விளக்க வேண்டி ஏழுவகைச் சோதனைகளைப் படைத்து ஏழு திரைகளையும் வகையாக நீக்கிக் காட்டினார் என்பதும் தகும்.

மேலும் பசியின் அவத்தையை வள்ளலாரை விட வேறெவரும் விளங்கக் கூறினாரில்லை எனலாம். எனவே அடியாரின் பசிப்பிணி போக்கும் பெருந்தொண்டு கொண்ட சிறுத்தொண்டர் வரலாற்றையே பெரிதும் விரும்பி, தம் திறன் காட்டி நாடகமாக்கினார் என்பதே பொருந்துவதாகும்.

பெருங்கதையின் போக்கு இவ்வாறிருக்க வெண்காட்டு நங்கையின் பிரசவ வேதனை (பக். 55, 56) மருத்துவச்சியின் அழகும் பேச்சும், சீராளனைத் தாலாட்டும் காட்சி. (தரு 32) சீராளனின் ஆசிரியரின் நலம். (பக். 67) அடியார்களை நான்கு திசைகளிலும் தொண்டர் தேடும் காட்சி. (தரு 42 — 46) கங்காளர் வரும் காட்சி (தரு 49) எவ்வகையான தருமங்கள் செயின் எப்படிப்பட்ட பயன் கிட்டும் என்பதற்கான விளக்கம் ஆகியவைகளையும் சுவைபடக் கூறும் (பக். 115, 191, 192) பகுதிகளையும், அடியார்களின் வகையினை அறியக்கூறும் (பக். 85) குறிப்பினையும் காணலாம்: ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயர் அவர்களால், நடிப்பதற்கென்றே படைக்கப் பெற்றதிந்த இசை நாடக நூல், நாடக வடிவில் காண இயலாதோர், இந்நூலைப் படிப்போர் படித்தேயறிந்து சுவைப்பான் வேண்டி இத்துடன் இதனை நிறைவு செய்வது நன்றாகும்:

# 13. ஸ்ரீ சிறுத்தொண்டர் நாடக நூலாசிரியர் ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியார் - குறிப்பு

தஞ்சையை அடுத்த விளார் எனும் சிற்றூரைச் சேர்ந்த, கள்ளர் மரபினரான அரங்கனாதன் என்பார், சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் சிறந்த கல்வியாளராய் விளங்கினார். இவரது புலமைத்திறனறிந்த தஞ்சையையடுத்த புன்னை நல்லூர் எனும் மாரியம்மன் கோவில் கிராம மக்கள் தம் பிள்ளைகளுக்கு, கல்வி கற்பிக்க ஏற்றவர் இவர் எனக் கண்டு, வேண்டி யழைத்து வந்து ஆசிரியராக அமர்த்தி தம் மூரிலேயே இருப்பிடமும் அளித்து வைத்துக்கொண்டனர்.

இயற்றமிழோடு, இசைத்தமிழும், நாடகத் திறமும் கொண்ட அரங்கனாதனார், கிராம மக்களுக்காக வேண்டி இச்சிறுத்தொண்ட நாயனார் சரிதம் எனும் இசை நாட்டிய நாடகத்தை ஆக்கி, அதனை, திருச்செங்காட்டங்குடியில் கோயில் கொண்டுள்ள இறைவனார் முன்னிலையில் அரங்கேற்றமும் செய்வித்தார்.

அன்று தொட்டு இன்றளவும் ஆண்டுதோறும் தவறாமல் இவ்வூர் மக்கள் இந்நாடகத்தை அவர் பயிற்றுவித்த வழி நடத்தி வருகின்றனர்.

இந்நாடகத்தில் அவ்வூர் மக்களே நடிகர்களாகப் பங்கேற்று வருகின்றனர். அரங்கேற்றம் நடந்த சில ஆண்டிற்குள்ளேயே இப்புனிதரை, சிவனார் தம் பக்கலில் ஏற்றுக்கொண்டுவிட்டார். இவரின் பூதவுடல் இடப்பெற்ற நினைவாலயம், புன்னை நல்லூரின் வடபாகத்தே அமைந்து, இன்றும் பூசிக்கப்பெற்று வருகிறது.

ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர் காலமான ஆண்டு 1849 என்பதை, குமர குருபரதாஸன் என்பவர் இயற்றியுள்ள இரங்கற்பாவின் மூலம் அறிய முடிகிறது. தெலுங்கு மொழியில் பாகவத மேளா நாடகங்களை இயற்றியுள்ள, மெலட்டூர்

வெங்கடராம ஸாஸ்த்திரி என்பாரின் ஆசிரியர் பெயரும் ஸ்ரீரெங்கநாத உபாத்தியாயரின் ஆசிரியர் பெயரும் "இலக்குமணை வையன்" என்பதாக, இருவராலும் தத்தமது நாடக நூல்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது. எனவே இவ்விருவரும் ஒரே ஆசிரியரிடம் பயின்றவர்கள் என்பது தெளிவாகிறது.

"It may be taken that Mellattur Venkatarama Sastri wa) a younger Contemporary of Adiappayya — (1741—1764) and an elder Comtemporary of Mallarji Appa—1799—1836. and Tyagaraja.

In the prologues to his Telugu plays, Venkatarama Sastri describes himself as belonging to the 'Srivatsa' gotra, son of Gopalakrishnarya and pupil of "Lakshmanarya"

By Dr. V. Raghavan—19—12—1963
Music Academy—Madras—

1. "அவகுணங் களகற்றியாளிலக்குமவையன் அடிபணிந்து"
(விநாயகர் வணக்கம்)

2. "ஆறாறு தத்துவத்துக் கப்பால் நின்ற
'அயிலேச லக்குமக் குரு வாழி"

(மங்களம்)
(By. ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர்
சிறுத்தொண்டர் நாடகம்)

# "ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர் பெயரிலான இரங்கற்பா"

1. சீர் பெருகு தென்கைலை மீதிருந்தே சகல
சீவ சந்துக்களிடமாய்
தினகரன் திங்களொளி வாருதிகள் சுற்றி வளர்
திசையாவிலுள்ள முனிவோர்
சித்தரெனில் சப்தரிஷி கொங்கணர் பதஞ்சலி
சித்தி வித்தியாதரர் களின்றும்
சிறந்த தென்மலை முனி கபிலரிஷி ரோமரிஷி
செய்ய கோரக்கர் சுகர்மா.
சின்மய நிறைந் திலகு அருமறைக் கெட்டா
தே சோ மய னந்தமாய்
திவ்ய பரிபூரண நிரஞ்சன நிராமய
திறமை கண்டமரர் முனிவோர்
தினம் தினம் மகிழ்ந்து அவர் பணிந்திட வளர்ந்திடும்
சிவ கைலை யன்றொரு நாள்
தேவர் கோன் வானவர்கள் தம்மை முகம் நோக்கியே
தீர வைராக்கிய தீரன்.

2. பார் பெருகு உலகு புகழ் பல்லாயிரங்கோடி
பரிவண்டர் முதல் யாவினும்
பயபக்தி விசுவாசம் தமது செயல் லீலைமேல்
பட்சம் வைத்திடு சிலாக்கியன்
பாருலகில் யாராகிலும் கண்டதாரெ‌ன
பயந்து முன் எழுந்து இந்திரன்
பகர் நமது குல திலகன் காசா நாடாள்
கவரும் பாக்ய சம்பன்ன தீரன்
பாகனைய அமுத கவி பாடவும் வரமுதவு
பாலன் குருபர தாசன் மேல்
பட்ச மறவாதவன் கருவூர் இலக்கும
பாரதி தன் பாத மறவான்
பல நூல் இலக்கணன் காரிகை கல்லாடகம்
பன்னூல் நாலடியார் குறள்
பதினெண் பேர் சித்து புருஷாள் சாத்திரம் யாவையும்
பார்த்துணர் தறிவாகரன்

3. பேர் பெருகு புன்னைநல்லூர் மாரியம்மன் கோவில்
பிரிய மிகும் அன்ன தானப்
பிறையணி பராசக்தி யிருகால் சிலம்பினில்
பிறந்த நவ வீர பாகு
பில மதிகம் வரு மசுரர் வடிவுகொடு பொடியதுசெய்
பிரபல மயில் முருக குகனும்
பெருமை மிகு தமைய னெனும் வருவமிச குல திலகன்
பேசும் நாற்பத்திரண்டூர்
பேதமை யிலாது வளர் செங்குந்தர் பிள்ளைகள்
பேரறிவு பெருவதற்குத்
பிங்கல நிகண்டு முதல் பிரபு லிங்க லீலைகள்
பெருந்துறை உபாத்தியார் போல்
பேதமற உபாத்திமைத் தொழில் செய்கை சைவநெறி
பின்னு முன்னுந் தவறிலா
பேருலகில் அந்நாளில் தீர்க்க வைராக்கியம்
பெற்று முன் பேர் பெற்றோன்

4. தார் பெருகு திரு நீல கண்டரும் கண்ணப்பர்
தமது பிள்ளையை உமக்கு
தான் கறி சமைத்திட்ட தொண்டனார் சரிதையை
தான் நாடகங்கள் செய்து
தாரணியிலாடவும் நான் மறை கொண்டாடவும்
தாமரை மின்னாள் நாடவும்
தமிழ் வளர் உபாத்தியாயர் ரெங்கய்யர்
தயவு பரி பூரணமதாய்
தருணமிது சபைதனில் வரவழையு மென்றிட
சௌமிய வருஷம் பங்குனி
தக்கதொரு தேதி இருபத்தொன்று திங்களில்
தகு அமர பக்ஷம் இரவில்
தத்த பஞ்சமி அனுஷம் உற்றநாள் சாலோக
சரமீப சாரூபமாம்
சாயுச்சிய பதவியுடன் ரெங்கய்ய உபாத்தியாயர்
தான் கயிலை சார்ந்த நாளே!

தஞ்சாவூர் மாரியம்மன் கோவில்–புன்னைநல்லூரில் வாழ்ந்த (விளார் கிராமம்) ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர் அவர்களால் இயற்றப்பெற்ற சிறுத்தொண்ட நாயனார் சரித்திர நாட்டிய

இசை நாடகம்

**பிரணவதுதி:- விருத்தம்**

மாமணியார ரவணியும் வள்ளல் தனக்கமுதூட்டி வளர்பேர் பெற்ற
மாமறையோர் குலத்துதித்தப் பரஞ்சோதிப் பண்டிதனார் வளமை கூற
கோமனணி மலர்ப் பாதங் குமரகுரு முன்பிறந்து குழகனாகி
ஓம் எனவும் இணையிலாதொருவனடி தனை மறவாதுளத்தில் வைப்பாம்,

சீர் திகழும் மறைவடிவாய்ப் பலகலை ஆகமமெல்லாம் சிறந்தே யோங்க
பேர் தகையும் அஞ்செழுத்தினுருவாகி ஐம்பூதப் பிரிவாய் நின்றும்
வார் திகழும் முலை மடந்தை மலைமாதோரிடமிலங்க வைத்த யெங்கோன்
ஏர் தொழுகும் சித்தனடி வணங்கித் தொண்டர் புகழ் செந்தமிழாலியம்புவேனே;

உலகு திரை கொண்ட சுரர் உரமுட னஞ்ஞான விருள் ஒதுங்கச் செந்தி
இலக இருந்த இராணி மங்கல மீய்ந்தருள் வடிவாய் இயங்கி எந்தன்
கலக மறக் கிருபை தரும் காங்கயன் சீரடி வணங்கிக் கடவுளார்க்கு
நலகறி சோறுண ஊட்டும் சிறுத் தொண்டர் புகழ்தனையே நவிலுவேனே;

கங்கையொடு தும்பை வில்வ மத்த மெருக்காத்தி புன்னை
கடுக்கை வன்னி
திங்களொடு கரந்தையரா வருகுடனே முடிபுனையும்
தேவனார்க்குத்
தன் குழந்தைக்கறியமு தீந்தருளைப் பெற்ற சிறுத் தொண்டன்
சரிதை பாட
மங்கை மலை மாதுமையாள் மலர்ப் பதத்தை யென்னாளும்
வணங்குவோமே

திருமுலைப் பாலுண்டானைப் பரவைக்காகச் சிவபெரு
மான்றனைத்தூது செலவைத்தானை
கருமலையை யிதந்திடவே கவிசெய்தானைக் கடவுள் தலைமண்
சுமக்கக் கருதினானை
நிருமலனைக் குருவாக நேசித்தோனை நித்தர் பத்தர் சித்தர்
முத்தர் நேசர் தங்கள்
திருமலியும் சீர் தாளைச் சிந்தை செய்து சிறுத் தொண்டர்
புகழ்தனையே செப்புவோமே.

வேண்டு விநாயகன்றனைப் பணிந்து போற்றி மெல்லி பெரியாள்
அடியை விரும்பி ஏற்றி
ஆண்டகையாம் கணபதி ஈஸ்வரன் தாள் போற்றி ஐயன்
சாத்தாவினடி அன்பில் வைத்து
ஆண்டருளும் மாணிக்க வண்ணர்தன்னை யம்மை வண்டு
வார்குழலியன் பினாலே
தீண்டு விடம் தீர்த்தானை சிங்கார வேலன் திருத்தாளைப்
பணிந்து தமிழ் செய்கின்றேனே.

புன்னை நகர் கௌமாரி துர்க்கை பதம்பரவி தொண்டர்
புகழைப் பாட
மின்னிய வாள் கருப்ப னொடு வைப்பாளிக் கூத்தரையும்
மிகுபிலாவர்
தன்னையும் கோதண்ட கரத்த யாளுவையும் சாமளையாம்
சத்தியோடும்
பொன்னியம்மை யோடிவர்கள் பொற்பாதம் எப்போதும்
றுவோமே.

சிவகணத்தோர் அனைவரையும் சிந்தை செய்து திருநந்தி
மரபினரைத் தியானம் பண்ணி
தவகுணத்து மூலர் குழாம் தன்னைப் போற்றித் தாயான
செல்வனடி தன்னை வாழ்த்தி
அவகுணங்களகற்றி யாளிலக்கும் வையன் அடிபணிந்து
சிறுத்தொண்டரானுக் கன்பாய்
தவ சுதனைக் கறியமு தீந் தருளைப் பெற்ற சரிதை தனை
நாடகமாய்ச் சாற்று வேனே.

தவளநிறப்பதுமை பீடிகைமேல் கொண்டு சதுர்மறை
ஆறங்கமெலாந்தானாய் நின்று
கமலையெனப் பொருள் தோன்றப்பக மாலை கரகமொடு
புத்தக மெய்க்கரத்தில் வீணை
பவளயிதழ்க்குமிழ் நாசித்தவள மேனிபார்பதியாளிணை
யுளத்தில் பரிந்து போற்றி
குவலயத்தில் பேறுபெற்ற சிறுத்தொண்டையன் குணசரிதை
நாடகமாய்க் கூறினேனே.

எழுத்தோ டைந்தா மிலக்கண முத்தமிழ் நாற்பாட்டிய
லோடிலக்கிய மறியா எளியேன் சொல்லை
பழித்திகழார் கற்றோர்கள் யேதினால் முன் பரம னுண
வமுதளித்த பக்தன் கீர்த்தி
வழுத்தினன் காண் என்னுளத்தில் மகிழ்ந்தன்பாக மாபுருடர்
கொள்வரென வடிவேற் கந்தன்
செழித்திடச் சீரடி வணங்கி உபாத்தியாயர் ஸ்ரீ ரெங்கநாத
னென்போன் செப்பினானே.

## வாழி விருத்தம்

காராருங் களனுடனே உமையாள் வாழி கந்தனொடு வள்ளி
தெய்வானை வாழி
சீராரும் கசமுகன் வல்லபையும் வாழி திருமால் பூமகள் வாழி
திசை முகத்துப்
பேராரு மிறைவனா மகளும் வாழி பேறுபெற்ற நல்லடியார்
பெருக வாழி
ஆறாறு தத்துவமாயப்பால் நின்ற அயிலேசலனிக்கும குரு வாழி
தானே.

செந்தமிழ் வாழி இந்த சிவகதை படித்தோர் வாழி
பைந்தமிழ்ப் பாவணர் வாழி—பாலகர் பெரியோர் வாழி
மந்திர வஞ்செழுத்து வாழி மறையவரரசர் வாழி
மைந்தனுான் அரர்க் களித்த மன்னனும் வாழி தானே

கம்ப நாயகனும் வாழி காமாக்ஷி உமையாள் வாழி இந்த
சம்பு தீவரசர்க் கெல்லாம் தானுவாய் காடர் கோமான்
செண்பகத் திருநாள் வாழி திரு அமுதளித்த கீர்த்தி
அன்பினால் கேட்போர் வாழி யானவரருள் சேர்வேலே.

## அகவல்

சீர் மலி மார்பன் திருமறைக் கிழவன் போர்மலைந்தறயா
பொறபுரு வானோன்

கொன்றையும தும்பையும் கூவிள மத்தமும் துன்றிளம் பிறை
நீர் தோன்றவே முடித்தோன்

மின்னிய சடையன் வெள்ளை மால் விடையான் வெண்டலை
மாலையான்

வெண்ணீ றொளியான் முண்டக விழியான் முதுமறைக்
கொளியாய்

இகலரும் பொருள் தரும் இன்ப மாமலையான் புகலறு மின்பப்
பூரண நதியான்

இருவினை நீக்கு மினிய நன்னாடான் அருள் தழைக்கின்ற
ஆனந்த நகரான்

விஞ்சு மிருளற விளங்கிய பதியான் அஞ்சவத்தைகளை
அடக்குகுஞ்சரத்தான்

ஆரணமணி மாரருள் மலர் மாலையன் காரண காரியம் கடந்த
நற்கொடியான்

நவந்தரு போத நன் முரசுடையான் பவங்களைந்தின்பம்
பாலிக்கு மாணையான்

சச்சிதானந்த தன்மயன் றன்னை சிற்சிவ மென்றும் தியானித்தும்
பூசித்தும்

பேறடைந்துள்ள பெரிய புராணத்துள் கூறறுபத்து மூன்று பேர்
கொள்கையிற்

சிறுத் தொண்ட ரென்னும் திருமறையவனாய் அருட்
கொண்டுளன் புகழ் அறைகுவன்

திருக் காஞ்சிபுர தேச நகருளிருக்கா னின்றதோரின்ப மாதவனாங்
கலைஞான பண்டிதன்

கருதிய தவத்தால் தலைஞானியாகி தனையனாய் வந்தோன்
உமாமயீஸ்வரருகந்து

ஈன்ற சேயன் நமசிவாயமாம் நல்லுரை உணர்ந்தோன் பரஞ்
சோதிப்பாண்டிதன்

என்னும் பேர் படைத்தோன் கழற்சிங்க காடவர் கோன்
முதல் தளகர்த்தனாகி

தலைமை மந்திரியாய் வையக வரசர் மன மகிழமைச்சனாய்
சைவ சமயந்தன்னையே

நம்புவோன் வேதா கமங் கலைமிகு புராணங்கள் வோதியே
பேரறிவுள்ளவனாகி மந்திரித் தலைமையாய் வாழ்ந்திடும் நாளில்
வாதாவிடப் பட்டண வரசர்செய்தீங்கை ஓதியே காடவர்
கோனும்

உரைத்திடக் கேட்ட வரசனுக்கு கெம்பீர வார்த்தை
நாட்டிக மாக சமர்த்துகள் சொல்லி வாதாவியரசன்
வலுவினையடக்கி

ஏதமிலாப் பொருளெல்லாங் கவர்ந்து காடவர் கோனுக்
கடிமை என்றெழுதிய

ஏடுடன் சொர்ணமிரதம் பரியுமுதல் கூடவே கொணர்ந்து
குரிசில் முன்னுய்க்க

கண்டதை யரசன் களித்திடுங்காலையில் தொண்டர்கள் சூழ
தோணிபுர னருள்

கொண்டுளக் குமரக் குரிசிலாய் வந்த சம்பந்த மூர்த்தி
சதசினில் வருக

தருமம் தழைக்கும் தரணி மன்னவரும் பரஞ்சோதிப்
பண்டிதனாரும் பணிந்திட

அறஞ்செயுஞ் சிறுத் தொண்டராமிவரென்றும் புரஞ்சிரித்
தெரித்தோன்

புதல்வன் மொழிந்திட கேட்டுமே அரசன் கிடுகிடென்றஞ்சி
நாட்டினிலிவரை நமதாள னாக்கிச் செய்தவக் குற்றம்
பொறுகெனவைதீக

நாதன் மலரடி தொழுது அரனடியாரை யான் பணிகொண்ட
பவமெலா மகலுமாதலா லிதற் கென் செய்குவேன் என
ஏங்கிய அரசனை

அஞ்சிடேலென்று ஆங்கவ ரருள் புரிந்து

உமதுநிதியெலாம் உதவி யிவருட மனதின்படி சிவமாதவர்
பூசை
பண்ணென்று அனுப்பினால் பாவம் அகன்றிடும் நன்றென்றே
சிவஞான சம்பந்தர் சொன்னது கேட்டுத் தோணியான்
விடைபெற்றுத்
தொழு தனுப்பிய பின், தன்னுடை யமைச்சனைத்
தாமனுப் பிடும்
மன மிலா மையினால் மயங்கியே வாடி தனி மானெனவே
தானயர்ந்திருந்து இணையிலாப் பொருளெலாம்
எடுத்துமக் கிசைந்த துணைவியு நீருந் தொண்டர்கள் பூசை
நடத்திடு மென்று ராசனுரைத்திட திடத்துடனந்த திரவிய
மனைத்தையும்
எடுத்தின்ன மெனக்கு எந்தெந்த வேளையில் அடுத்த செலவிற்
கான நிதிகள்
தந்திடவேணும் தரணி மன்னவனே ஏந்தலே என்று
இசைத்திடும்போது ராசனும் நன்றென்றின் பமாயுரைக்க
ஈசனைப் போற்றும் எந்தை சிறுத்தொண்டர் காஞ்சீ
புரத்தையாள்
காடவர் கோனை வாஞ்சையுடனே வழி விடை பெற்று
திருச்செங் காட்டில் சென்று மனையாளுடன் மறைச்
சிறப்புடைய
வானே சுரனைப் போற்றி வணங்கிப் புண்ணிய தலத்தின்
கீர்த்தியும்
புகன்று கிலேசத்தை நீக்கி சத்திரங்கட்டிவித்தன்னக்கொடி
நித்தியம் சாதம் நேசமாய்
படைப்பேன் என்னவே அன்னவர் பேரிகை அடித்தபின்
சுருதி சொன்ன வாகமப்படி தொண்டர் பூசை நடத்திப்
பரிகலம் நங்கையும் தானும் எடுத்தருந்திடவே
ஈசனருளால் பாலனும் பிறந்திடப் பல்லோர் புகழவே
காலனை உதைத்த கடவுளர் மகிழவே உரிமையாய்
சீராள தேவ னெனப் பேரது செப்பி பாராளு மந்திரி
பரதேசிக் கன்னம் படைத்திடும் நாளில் பரன் சோதனையால்
பார்தனில் ஆண்டிமார் மாதபோதனர்களைக் காணாது
மடத்தினில் ஒருவரும் வாராதொழிந்தது கண்டு வாடியே
மனது மயங்கியே எங்கும் தேடியே ஓடித்திரிந்து
களைத்திடு மெல்லையில்
சிவனே கங்காளனாய்த் திருவுருக்கொண்டு அவனிமீதன்னம்

அன்புடன் படைக்கும் சிறுத்தொண்டருடைய தேவிபால் சென்று
கருத்துடன் அன்னம் படையெனக் கருத நங்கையும்
கேட்டு நமஸ்காரம் செய்து கங்கை வேணியனோ
கடவுளோ என்று தன் சிந்தை மகிழ்ந்து சேடியுமங்கு
வந்தவர்க் கன்னம் வைத்திடும் போது
ஆடவர் எங்கே அம்மையேயென்ன, தேடிப் பரங்கள்
பால் சென்றார் வருவார் வாடிய பசியால் வந்த
அய்யனே நாடியிவ் வன்னத்தை நன்றாயருந்துவீரென்ன
கங்காளர் எழுந்து ஆடவரில்லா உன்னிட மன்ன
முண்கோமெனச் சொல்லி ஆத்தி அடிதனில் அமர்ந்
தினிதிருப்பேன் காத்திரா துமது கணவனும் வந்தால்
சுருக் குடனனுப்புந் தோகையே என்று
முருக்கிதழ் வாயால் மொழிந்தவரேகி தாதகி
நிழலில் தானிருந்தனர். பின்
அடியரைத்தேடி அலைந்து வாடி கடிகமழ் குழலி காண்கிலேன்
என்ன காரணமோ இது கதை போலிருக்குது ஆரணமறியா
ஐயன் சோதனையோ என்றுமே தொண்டர் இசைத்திடும்
எல்லையில், நன்றரன் செயற்கு நாமென்ன செய்குவம்
மன்றாடி போலொரு மாதவர் வந்தார் அவரை
வணங்கி அன்னம் கறி பலகார வகையன கன்னியும் யானும்
கடுகியே படைத்து உண்ணையா வென்று உபசரித் தேத்திட
பன்னவர் சொன்னது பத்தனில்லா விடத்தமுதுண்டால் பாவம்
அன்னையே என்று நமதிடமுமது நாயகன் வந்தால்
ஆத்தியடியில் யாமிருப்பிடம் காற்றென வரவிடு கன்னியே
என்று போயினார் தேவரும் போயழைத்திடும் என் நாயகனே
என்று நங்கை மொழிந்திட கேட்டுமே தொண்டர் கிலேசம்
விட்டன்பாய் நாட்டிய ஆத்தி நன்னிழல் தன்னில்
இருந்தது கண்டு, இதய முருகி திங்களை முடித்த திரியம்
பகன் போல் எங்களை ஆள்க எழுந்த கங்காளா உங்கள்
பேர் யாது உரைகென்று சொல்ல, வைரவரென்று மனமகிழ்ந்
துரைக்க, உயிர் தனைக் காக்கும் உடையவர் நீரே
உண்ண வாருமென்றுபசரித்திட, நீ பண்ணிய கறிதான்
யாதெனக் கேட்க தொண்டர் தானுரிமையாய்ச் சொல்லிய
காய்கறி வாக்கிலே சொல்லோம் வடதேசத்தில் கண்டீரோ வென்று
கங்காள ருரைக்கத் தொண்டருஞ் சொல்லுவார், நன்றிது தாங்கள்
நயந்துண்ணும் கறிகளைச் சொல்வீராகில் சுவாமி யிப்போதே

ஒல்லையிற் படைப்பேன் உரைத் தருள் நீரென கங்காளர்
சொல்லுவார் காசினி தன்னில் ஒருவரொருத்தி யுதவிய
மகவாம் சிறுவன் கறியன்னம் சிறப்புடன் படைத் தால்
உண்பேனென்று உரைத்திடக் கேட்டந்த விதமாயமுது
படைக்கிறேன் என்று பணிந்து தன்மனைக்கே திடத்துடன்
வருகையிற் சிந்தூர மாமுகன் கணபதி தோத்திரத் துடனே
தோகையும் தானும் விரும்பி சாத்திர மோதிய தனயன்
முன் வந்து அழைத்திடப் பாலன் அங்கு தான் கண்ட
வழுத்திடக் களவை மைந்தனும் சொல்ல, பிள்ளைக் கனவு
பேதமை எனவே மெள்ளவே அழைத்து வீட்டினில் வந்து
வரதனும் சொன்ன வாய் மொழிப்படியே சரசமாய்
மகவைத் தாய்மடி வைத்து தந்தையும் வாளால் தலையை
அரிந்து விந்தையாய்க் கறிகள் விதம் விதம் சமைத்து
தொண்டருக்கு நங்கை சொன்னது கேட்டு அண்டர் கோனிடம்
சென்றழைத்திட வந்து ஆசனத்திருத்தி அமுதுடன் கறிகள்
தேசுறு நங்கை செப்பியே படைக்க இன்னுமோர்கறி யெங்கே
யெனச் சொல, நன்னயச் சந்தன நங்கையும் கேட்டு
தலைக்கறி கொணரச் சுவாமியும் கண்டு நினைப்பிலா மகிழ்ச்சி
தன் நெஞ்சினில் கொண்டு தொண்டனே உந்தன் சுகமுறு
மகவைக் கொண்டுவா வென்ன கோதறும் குழகன்
செப்புதல் கேட்டுத் தெருவினில் வந்து ஒயிலாய் மைந்தனை
உவந்துமே கூவ தண்டை சிலம்பு சதங்கைகள் கொஞ்ச
கொண்ட மணங்கள் குமு குமு யெனவே பாலனும்
வருகப் பரிந்துமே தொண்டர், காலனைக் காமனைக்
கடிந்திடுங் கடவுள் இருந்த இடத்தில் இயல்பதாய்
வந்து பொருந்தவே பார்க்க புனிதனைக் காணாது
அகமிகவாடி அழுதுளமுருகி இகமதில் பாவியானென மயங்கி
திடுக்கிட்டு நால்வரும் சீக்கிரம் ஆத்தி இடத்தினில் வந்து
இறைவனைப் பார்க்க கண்டிடாததனாற் கதறியே கிறுத்
தொண்டர்
அன்பாய் ஸ்தோத்திரம் அநேகம் வழுத்தியும் காணா
வாய்மையால்
வாளைக் கழுத்தில் வைத்தது கண்டே கணேசன் கந்தன்
மாலயன் கடவுள்
முனிவர் இந்திரன் முதலாயவரும் சூழ மால்விடை மீதில்
மங்கையோடரும்

கால் விரைவாக கணத்தினில் வந்து பக்தனும் சிறுத்தொண்டன்
நங்கை சீராள தேவன் கிரக்கறி படைத்த தெரிவை சந்தன
நங்கை
இந்நால்வருமே அங்கயிலையைத் தந்தருளிய மோட்சக் கதை
யதனை கண்டு கேட்டறியக் கான்முளை கற்றோர்க்கு
தொண்டனாகிய எளியேன் கழறினேன் பலநாள் விதிமுறை
யுணர்ந்த
மேதகு புலவர் முன்னோர் ஓதுமுது மொழி எனவு மன்னோர்
இதன் மேல் அருள் செய்வாரென்றே கலைமகள் அருளால்
கந்தன் கிருபையால் உலகில் நாடகமாயுரைத் தனிதனை
பெரியோர் இதனுட பிழைகள் பொறுத்து அறியாதானிதனை
அறைந்தனனின் புறவே

## தோடயம்

பொன்னலரு மின்னல் சடை அண்ணல் திருவிளையாட்டை
பூவுலகிற் றமிழ் பாடு நாவரசர்கள் முன்னே கன்னியருந்
தமிழால்
சொன்ன கவிதைதனை நாளும் கற்றவர்கள் குற்றமற
உற்றுரை கொள்வாரே—ஜெய ஜெய.

ஆலமுண்ட நீலகண்டத் தையர்க் கமுதளித்து முத்திக்
கோலங் கொண்ட சிறுத்தொண்டர் குணசரிதைபாட
மூலமென்று பிரணவத்தின் முன்னாக நின்றருளும்
சீல மருள் கணபதி தாள் சிந்தை செய்குவோமே ஜெய ஜெய

பத்தி செய்யுங் காடவர்கோன் பார்த்திபன் மந்திரியாகிச்
சித்தி பெருஞ் சிறுத் தொண்டர் சீர்கதையைப் பாட
சத்தி சரவண பவனார் சற்குருவாய் வந்தருளும்
முத்தையன் தன் சீரடியை முடியிலணிவோமே ஜெய ஜெய.

நான் முகன் தன் நாவினிலே நான் மறைகணவிற்றி யந்தப்
பாமுறை எல்லாந் தானாய்ப் பயிற்றியருள் செய்யுங்
கோமகடன்னுடை சீரடியைக் குறைவகல உளத்திருத்தி
சேமநிதி சிறுத் தொண்டர் சீர்கதையைச் சொல்லுவோமே
ஜெய ஜெய,

மஞ்சனை முன்கறி சமைத்து மாதேவர்க் கமுதளித்த
அஞ்சல் சிறுத் தொண்டர்கதை அன்புடனே யான் பாட
விஞ்சை தரு திரிசூலி விமலி யுள்ளார் மாரி
கஞ்சமலர் பாதத்தைக் கருத்தில் வைத்துப் பணிவோம்
ஜெய ஜெய.

## சபை விருத்தம்

சீர்வளம் பெருகும் காஞ்சி தேசத்தை யாளு மன்னன்
பேர் பெருங் காடர் கோன்றன் பெருமையை விளங்கச் செய்யும்
தார் பெருஞ் சிறுத் தொண்டையன் சரிதை நாடக மாய்ப் பாட
கார் பெருங் கழத்தோன் தொந்திக் கணபதி காப்புத் தானே

## பிள்ளையரர் விருத்தம்

வேணிக் காதலனுமையாள் புகழ் தனை வெங்கோட்டாற்
கிரியதளில் எழுதும் வேத
பாணிக்கோர் வருவையறப் பேரின்பம் பயிற்றியருள்
பாலித்தன்பர்
சேணுக்கோ மருகனென வசுரர் களைந்த செவ்வேட்கு
முன்னாய் நின்ற
மாணிக்க வண்ண முள்ள கஜமுகனும் சபைதனிலே
வருகின்றாரே.

## தரு 1

ராகம்:—ஹம்ஸத்வனி  தாளம்:—ஜம்பை

ஐந்து கரத்தோனும் வந்து தோணினார்—ஆகுவிலேறி
ஐந்து கரத்தோனும் வந்து தோணினார்
சுந்தரி மாரி புரந்தனில் யாவர்க்கும்-சிந்தையில் கோரிய
கோரிய தெந்த விஷயமும்

முந்தக் கைமேல் பலன் தந்தோம் தந்தோமென்ன
கந்தனுக்கு முன்னம் வந்து பிறந்ததோர் [ஐந்து ..]

1. வேதத்தை மேருவில் வரைந்திடும் நாதன்
ஔவைக்காக ஓடி
மேவுங் கரமதை நீட்டுங் கணபோதன்

கீதங்களைப் பொருளேயருள் நீதன்
கிளைக்கும் சாகரத்துள் வளர் போதன்
ஈதலிரக்க முள்ளவர்க் கருள் நாதன்
இன் சொல் கவிஞ ரிதயத் ததீதன் [ஐந்து ....]

2. வடை யவல் பொறியரிசி மேற்றாகன் வரை யுயா மோதகம்
வைக்க உண்டு பின்னும் வல்லபைக்கு மோகன்
தடதடக்கும் பவிக்கிர விவேகன்
கருத்தில் உருத்திசெய் பரிபாகன்
விடையேறு மீசனுக்கதி யோகன்
விதி மதி துதி பதிக்கி யேகன். [ஐந்து ....]

3. சிறுத் தொண்டன் சரித்திரத்தை நாட்டவும் - இந்த
உலகமுழுதும்
சிறக்க நாடகம் திருத்தி யாட்டவும்
பொருத்த சைவப் பொருள் வசத்தை நாட்டவும்
புத்தமு தொத்த முத்தமிழை யூட்டவும்
திருக்குள்ள க்கசட்ட சட்டை யோட்டவும்
சிந்தை குடி கொண்டு நிசத்தைக் காட்டவும் [ஐந்து ...]

குருக்கள் விருத்தம்

முப்புரி நூலும் வேத முகமதில் விளங்கும் ஞான
சிற்பரன்தனை சேவிப்பவர்க்கு திருவருள் உபதேசிக்கும்
சொற்பொருள் ஆகமங்கள் சிவாகமு மோர்ந்து சைவ
திப்பிய மாக வாழும் சிவபோத குருக்கள் வந்தார்.

தரு-2

ராகம்: யமுனா கல்யாணி தாளம் : ஜம்பை

1. குருக்கள் வந்தாரே-சிவபோத குருக்கள் வந்தாரே
முருக்கிதழ் வாணி திருப்பதந்தன்னை
முக்காலும் எக்காலும் சிந்தையிலே போற்றி. [குருக்கள் ...]

2. நான் முக னென்குல மானாலு மென்போலே
நாதனைப் பூசிக்க போதனைக் காகவே
மூதோர்கள் பக்கமாய் போதனைப் பெற்றவன்
மூவரிலே ஒரு தேவனானா னென்று [குருக்கள்...]

3. வைகறை மூழ்கியே மெய்யில் நீது பூசியே
வஸ்திரம் மடியோடும் புஸ்தகம் கையோடும்
பொய்யகல வருள் போதிக்கும் மாணிக்கப்
பிள்ளையாரைப் பூசை உள்ளபடி செய்ய [குருக்கள்]

## குருக்கள் விருத்தம்

வந்திடும் குருக்கள் வேதமதை முகபடமாய்க் கொண்ட
தந்தியைப் பூசை செய்ய தண்டலை மலர்க் கை கொண்டு
சந்தத மன்னத் தோடும் சங்கமர் உறையும் வீதி
செந்திரு வளர்க வென்ன திரிகாலம் பூசித்தாரே :

## கட்டியக்காரன் : விருத்தம்

சுந்தரமாய் நீறணிந்து திலகம் தீட்டி தூய்ய சரிகைப் பாகை
சிரசில் கட்டி
மந்திர மாலிகை புனைந்து சிவநேசத்தோர் மலரடி தன்
முடிசூட்டி வாள் கை பூட்டி
தந்திர வானிவனென்ன அரசர் மெச்ச, சபையில் ஒயிலாய்
நடந்து சரச வார்த்தை
கந்தருவர் கான உரை என்றே ஏத்த காடர்கோன் வாசல்
கட்டியக் காரன் வந்தான்:

## கட்டியக்காரன் தரு-3

ராகம் : கல்யாணி
தாளம் : ஆதி

கட்டியக் காரன் வந்தானே நல்ல துதி சுதி கதியொடு
[கட்டியக்காரன்]
மட்டிலாப் புகழ் படைத்த வானர்கோன் இவனென் றேத்த
சிட்டர்கள் பணிந்து போற்றும் தீரன் காடர்கோன் வாசல்
காக்கும்
[கட்டியக்காரன்]

வஞ்ச நினைவினைத்தீர்த்து அானடி முடி தரியாரை
நெஞ்சமான கல்லைப் பேர்த்து - பஞ்சு போல் பறக்கத் தூற்றி
கஞ்சன் மால் காணாப் பதத்தை நெஞ்சுளே நினைத்து வாழ்த்தி
விஞ்சையர் தங்களைப் போற்றி. [கட்டியக்காரன்]

அட்டதிக் கெங்கினுமோடி தெவ்வர் பொடிபடக் கிளையொடு
வெட்டிய புகழைப் பாடி-சட்டமாய்க் கட்டாரி வாங்கி
கட்டியே புயத்திலோங்கி-தட்டியே சபையைத் தூங்காத
தட்டியே பிரம்பை ஏந்தி— [கட்டியக்காரன்]

நெற்றியில் நீரணிந்திலங்க மதி துத்துரா கல்கி சிரம் வைத்து மாலை
புயத்திலங்க வெற்றிசேர் காடர் கோன் சீரை
பத்தியாய் புகழ்ந்திடாரை குத்தியே சினந்து வாரி
எத்தியே எறியும் சூறை மாரி.... [கட்டியக்காரன்....]

பூதி யக்க மாலை யணிந்து பஞ்சாட்சரத்தை
நீதியுடன் தினம் நினைந்து ஓதிய வன்பர் சைவரை
ஆதி யென் றறிந்திடாரை காதையே துணித்த வரை
வீதியிலெறியும் சூர வீர [கட்டியக்காரன்...]

## கட்டியக்காரன் வசனம்

ராஜாதி ராஜன், ராஜகெம்பீரன், ராஜ மார்த்தாண்டன் ராஜ கோலாகலன், காஞ்சீபுர தேசத்தை ஆளப்படா நின்ற காடர்கோன் மகாராஜன் பட்டணம் பார்க்க கொலுவிற்கு வருகிற படியினாலே, வீதிகளை அலங்கரித்து, பன்னீர் தெளித்து தங்க வாழை, பொன் வாழை, பூரணகும்பம், மகுடதோரணம், கட்டி வைக்கவும்! எச்சரிக்கை! பராக்!

## ராஜா விருத்தம்

ராகம்: தோடி

மன்னவர் பணியும் காஞ்சி மாநகர் மன்ன னெங்கும்
நன்மையாய் உலகு நீதி நடத்திய காடர்கோன் முன்
கன்னியர் கவரி வீசக் காவலர் உடைவாளேந்த
வன்ன மாங் கொலுவின் மீது மன்னவர் வருகின்றாரே!

## ராஜா—தரு: 4

ராகம்: அசாவேரி தாளம்: ஆதி

தேச ராஜர்கள் புகழ் தீரன் காடவர் கோமான்
சிங்கார மாகவே வந்தான் ராஜாதிராஜன்;

பாச பந்தங்களென்னும் இருள் விண்டோட
பரமனைத் துதிநாட - பாவண ரிசை பாட
பாகு சேர் மொழியாளாடல் புரிந்திட
பக்தர்கள் அரகரசம் போவென்றிட
பஞ்சமப் பண்பாட தம்பூ ரஞ்சித சுதிகூட
கீதங்கள் பாட மலர்கள் போட கொண்டாட [தேசராஜர்....]

காஞ்சிபுர நகரிலாஞ் சிவ சங்கரனை
காலை மாலை யுச்சியும் சீலமுடன் அர்ச்சித்து
கந்தமா மலர் போலும் சந்தத மென்மேலும்
காசினியாள் செங்கோலும் பேசும் தரும நூலும்
காட்டிய படி முடிசூட்டி மனுவின்படி
காத்துலகின் மிடி தீர்த்து முறையின்படி
காத்திடும் திறம் கொண்டு அன்பரைச் சேர்த்திட மனம்
கொண்டு
புகழுவென்று மகிழக் கண்டு கொண்டாட. [தேசராஜர்]

வச்சிரம் பதித்த முடி உச்சியில் மாணிக்கமடி
பச்சை மரகதப் பொடி வைத்திடுங் கிரீட முடி
மாமணியொளி மின்ன காம ணிவ னென் றெண்ண
சோம னுருப் போல் மின்ன பூமன்னரர சென்ன
தாம மோடு புய கிருது விளங்கிட சந்திரப்பிறைபோல்
மகர கண்டி துலங்கிட தண்மலர் மாலையாட
அங்கி நிஜார் தப நர னொளி வாட
வீரர்கள் கூட சுரர்கள் நாட கொண்டாட. [தேசராஜர்...]

மன்னர் மன்னவரென்றே வானவர் புகழ் கொண்டே
வாழும் அரசரென்றே வாணர்கள் தமிழ் விண்டே
சொன்ன கவிதை கண்டே தோகை மாராடல் கண்டே
துதிக்கும் புகழைக்கொண்டு துணைக்கரம் சிரம் கொண்டு
சூழும் இரத கஜ படைகள் நெருங்கிட துடியொடு முரசொடு
வான முழங்கிட தொம் மென மத்தளமுந் தாளம்
நம் மெனவே மேளம் ஓசைகள் முழங்க தேசங்கள் விளங்க
கொண்டாட [தேசராஜன்....]

## ராஜா விருத்தம்

கட்டியக் காரா கேனாய் கனிரசம் போல் சங்கீதம்
தொட்டுமே பாடிடும் தோகையை நமது பக்கம்
பொட்டென அழைத்துக் கொண்டு புலவர் விஞ்சை
யரைக் கூட்டி
திட்டென வருகு வாயிச் சணமதில் விரைவில் தானே!

## ராஜா வசனம்

அகோ வரும் பிள்ளாய் கட்டியக் காரா, நமது கொலுவிலே, வித்வ ஜனங்கள், நாடகசாலைப் பெண்களை, அதிசீக்கிரத்தில் அழைம்பி வையும் பிள்ளாய் கட்டியக் காரா....

## கட்டியக்காரன் வசனம்

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி:—

## கட்டியக்காரன் விருத்தம்

தந்தியினோசை யாழின தண்ணுமை தாளங்காண
முந்திடா இசையைப் பாடி முனிவரை மயக்கு மோக
சுந்தர வனிதையான தோகையே! காடர் கோமான்
உந்தனை அழைக்கச் சொன்னார் ஒருநொடி வருகுவீரே!

## கட்டியக்காரன் வசனம்

அகோ வாரும் நாடக சாலைப் பெண்களே! உங்களைக் காடவர்கோனரசன், சுருக்கிலே சதகக்கு வரச் சொல்லி யிருப்பதினாலே, அதிசீக்கிரத்திலே வாருங்கள் பெண்களே!

## நாடக சாலைப் பெண்கள் விருத்தம்

மேனகை ரம்பை யென மெல்லியும் நாண வீணை
தானென மிடற்றினோசை தந்திரி மொழிபோல் கீதம்
மானித முடனே பாடும் மங்கையரெவரும் சூழ
ஈனமில் பரதஞ் செய்யும் ஏந்திழை வருகின்றாளே!

## நாடக சாலைப் பெண்கள்—தரு-5

ராகம்: மோகனம் தாளம்:

வந்தாள் நாடக சாலை மாது—சிங்காரமாக:

[வந்தாள்...]

கொந்தார் குழலில் மாலையும் தாரிலங்க - மேலை
யந்தரா பரண வளை திந்தா திந்தா குலுங்கக் கோல
ஆடையில் மேலைச் சரிகை மின்னிப் பாடகத் தோடிப் பாடிட

[வந்தாள்...]

ரெத்தினச் சுட்டிகள் பிறை மின்ன சிங்கார மாக
முத்தாபரண ஒளி துன்ன, சங்கீத மான
சுத்ததாள ஓசை கழுத்துட லசைவுகள்
எத்திசையில் பாடக் கருத்தே யிவளை நாட்டவே
சாரி - சாரி - சநிதப - பதநித - தநித -
சரிகம பதநி சரியென

[வந்தாள்...]

## ராஜா விருத்தம்

நடனஞ் செய் மாதர் விஞ்சை நன்றிவர் தமக்கு முத்தின்
படமணியுடனே சொர்ணம் பரிவுடனே கொடுத்து
விடையது சொல்லிடாமல் மென்மேலும் புலவர்க் கெல்லாம்
அடவுடன் நிதியளித்து அனுப்பி எம்மிடம் வாராயே....

## ராஜா வசனம்

அகோ வாரும்பிள்ளாய் கட்டியக்காரா. இந்த நாடக சாலைப் பெண்கள் செய்த நாட்டியமும், வித்வத் ஜனங்கள் பாடல்களும் கேட்டு மகா சந்தோஷமாச்சுது. அவர்களுக்கு ரத்தினங்கள், சொர்ணங்கள், ஆடையாபரணங்கள் கொடுத்து அனுப்பி வைத்து நம்முடைய சமூகத்திற்கு வாரும் பிள்ளாய் கட்டியக் காரா.

## கட்டியக்காரன் விருத்தம்

சகமதிலரசர்க்கெல்லாம் தனியோமென்றுலகம் போற்ற
மிகுபுகழ் பெற்று வஸ்து மெல்லடி மறவா தேத்தும்
மகிபனே தேவரீர் சொன்ன மார்க்கம் போல் புலவர் மாதர்
தகும்படி நிதியளித்தேன் சரணநின் தாசன் தானே.

### கட்டியக்காரன் வசனம்

அகோ வாருங்களையா சுவாமி! அடியேனுக்கு உத்திரவு கொடுத்த பிரகாரம், அவர்களுக்கு வேண்டிய ஆபரண மெல்லாம் கொடுத்து, அனுப்பி வைத்தேனையா மகாராஜனே!

### ராஜா விருத்தம்

நன்றரனடியார் போல நமது வாசகங்கள் கேட்டு
நின்றேவல் செய்ய வல்ல நேசங் கட்டியனே கேளாய்
இன்று நம்மரசுக் கேய்ந்த இனிய மந்திரிமார் தன்னில்
பண்டிதர் தம்மை யிங்கு பரிவுடனழைத்தி டாயே!

### ராஜா வசனம்

அகோ வாரும் பிள்ளாய் கட்டியக் காரா, அரனடியாரைப் போல பக்தி விசுவாசமுள்ள கட்டியக்காரா, நீ நம்முடைய அரசுக் கிசைந்த மந்திரிகளிலே, தலைமை மந்திரியாகிய, பரஞ்சோதிப் பண்டிதனாரை, அதிசீக்கிரத்தில் அழைத்துக் கொண்டு வாரும் பிள்ளாய் கட்டியக் காரா.

### கட்டியக்காரன் வசனம்

அப்படியே அழைத்துக் கொண்டு வருகிறேனய்யா சுவாமி!

### மந்திரி விருத்தம்

மந்தர கிரிபோல் தோளும் மலர்மகள் விளங்கும் மார்பும்
சுந்தர வதனமாகத் துலங்குஞ் சந்திரனைப் போல
மந்திரித் தலைமை பூண்டு வள்ளலா ரன்பராகி
சிந்துவின் முரசோன் போல சிறுத்தொண்டர் வருகின்றாரே!

### மந்திரி — தரு 6

ராகம்: காம்போதி தாளம்: ஆதி

மந்திரி வந்தான் காடர்கோன் மன்னன் சபையி
லொயிலாய் [மந்திரி]

1. சுந்தர மிகுந்த பூர்ண சந்திரன் போல கிரணம்
தோத்திட மறையவர் வாழ்த்திட அடியவர்
ஏற்றிட வையகம் போற்றிடப் பரஞ்ஜோதி [மந்திரி]

2. வையக மரசர் செங்கோல் செய்யு முறைமை இவ்
வாறெனை உணர்த்தி வளர் நீதியருமை
செய்திடும் திறமை கண்டு கையிலே நீதிநூல் கொண்டு
தேசத்தியற்கை கண்டு, ராசர்க்கீதென்ன விண்டு
ஈசன் பதத்தை யென்றும் நேசிக்க உளங் கொண்டு
[மந்திரி....]

3. சென்னியிலணி முடிகள் மின்னி சொலிக்கமிகு
தேசு வீசுங் காதிலணி வீசி சொலிக்க
பன்னகமணி முத்தோடு பொன்னிழைத்த பணியோடு
மனனிய வணி சிறக்க நண்ணின பேர் கண்களிக்க
புண்ணிய மது தழைக்க விண்ணுலகோர் புகழிக்க
[மந்திரி... ]

4. கதிர் மதிப் பிறையுடனே கல்கிய ணிந்து வலங்
கட்டிய ஒண்டி ரேக்குடன் பூட்டு மகிழ்ந்து
சதிருடனே நீறணிந்து பொதியு முன்னூலும் புனைந்து
சைவப்பயிர் தழைய தெய்வச் செழு நீர் பாய
ஐயப் புலன்கள் மாய வையகத் தரசில் நேய [மந்திரி....

5. வெற்றிசேர் புயவளைகள் ருத்திரா க்ஷமும் புனைந்து
வெற்றி மாலையுமணிந்து நித்திர பக்ஷமும்
வைத்துலகில் தெவ்வர் கொட்டம் அற்றிட வாள்
கரந்தொட்டு
வையகமதிலே புண்யம் செய்யவே மனதிலெண்ணி
தையலோர் பாகனை நண்ணி, சைவமே முதலென்றெண்ணி
[மந்திரி....]

## மந்திரி விருத்தம்

வந்த மந்திரியன்பாக மன்னவன் முன்ன மோக
தந்திர வசனத்தோடு சந்ததம் வாழும் வேந்தே
எந்தனை அழைத்த சேதியேது விண்ணப்பம் யூகம்
சித்தையில் நினைத்த தெல்லாம் தெரிவிப்பீர் தெரியத்தானே.

## மந்திரி வசனம்

ஆசீர்வாதம்! நித்ய மங்கள பூரணாதித்த, அகண்ட மண்டலாதிபனாகிய மகாராஜனே! அடியேனை அழைப்பித்த காரியம், இன்னதென்று, திருவுளம்பற்ற வேணுமைய்யா மகாராஜனே!

### ராஜா விருத்தம்

எண்ணிய படியே யூகம் இசைத்திடும் மதியுரைக்கும்
பண்ணவனான வேதப் பண்டிதனாரே முன்னம்
சொன்ன வாதாவிராசன் துடுககறச் சூழ்ந்த வாறும்
அன்னவன் தனைச் செயித்த விவரமே தரைகு வீரே!

### ராஜா வசனம்

எண்ணியபடியே, என் புத்திக்கிசைவாய், மதியுரைக்கும் பண்டிதரே, வாதாவி ராஜன் நிஷ்டூரத்தை, முன்னம், உம்மிடம் சொல்லியபோது, நீர் அவனை, செயித்து வருகிறோம் என்று போனீர்களே, அந்த விருத்தாந்தம் எனக்கு தெரியப்படச் சொல்ல வேணும் பண்டிதரே.

### மந்திரி வசனம்

அப்படியே சொல்லுகிறேன் கேளுங்கள் மகாராசனே!

### மந்திரி தரு 7

ராகம்: தாளம்:

வாதாபி ராசனை வென்ற வளமை சொல்லுவேனரசே
[வாதபி....]

1. பூதலத் தரசை யொத்து போர் செய்யாமலே ஜெயித்து
சூதை யறிந்தவன் பாலுற்று தும்பி மாமுகனைப்பூசித்து.
[வாதபி....]

2. மண்டலத்தரசர் போர்க்கு வந்த போதே—தும்பி
மாமுகனைப் பூசை செய்து வாரண வெற்றி
கொண்டிட அவர் தேசத்தைக்கைக் கொண்டுமே
வாழ்கின்ற வீர
கண்டனைச் செயித்து கறைகண்ட னருளாலே யானும்
[வாதாபி...]

3. இரத கஜ துரக பதாதிக ளெல்லாம் தூர
இருத்தியே யானொருவனாகவே சென்று
அரகரா வெனப் புகழ்ந்து அவனுடைய நகர் புகுந்து
துரவெல்லாம் அறிந்து வந்து துரிசுடன் பாளையம் வந்து
[வாதாபி....]

4. பாளையத்தில் ஆறு சமயத் தோரை யெல்லாம்
ஆகமப் படியே கணேசன் பூசை பண்ணவே சொல்ல
வேழமா முகன் அடியை வேண்டியே பூசை முடிய
பாலையத் தைங்கர னடியேன் பால் வந்த தினால் கொடிய
[வாதாபி...]

5. வந்திடுங் கணேசனை யான் வாழ்த்தியே வைத்து வாதாபி
மன்னனைச் சேனையுடனே வாதில் ஜெயித்து
தந்தி ரதம் புரவியும் தன்னுடனே திரவியம் கொண்டு
உந்தனிடம் வந்தேனைய்யா உற்றது உரைத்தேன் மெய்யாய்

மந்திரி விருத்தம்

இந்த விதம் வாதாபிப் பட்டணத்துக்கே நம் இரத கஜ துரக
பதாதிகளைக் கூட்டி
அந்த நகர்க் கருகாக இருக்க வைத்து யானும் அந்த அரசனது
ளவறிந்து வந்து
தந்தி முகன் தன்னைப் பூசை புரிந்து போற்றி தளத்துடனே
வெற்றி கொண்டு, தனங்கள், யானை
கந்துக ரெத்தினத் துடனே மகமைச் சீட்டும் காணிக்கையாக
வந்தேன் காடர் கோனே!

மந்திரி வசனம்

கேளுங்களையா காடர் கோனாகிய மகாராஜனே! தங்களிடத்தில் உத்திரவு பெற்றுக் கொண்டு, வாதாபி பட்டணத்தருகாக, தளங்களை நிறுத்தி வைத்துப் போட்டு, யானொருவனாக, வேடமாறிப் போய், உளவறிந்து பார்த்து வந்து, கணேசன் பூஜை செய்து, வாதாபி ராசனையும் வென்று, அவனைக் கப்பம் கொடுக்கும்படி செய்து, சகல ரெத்தினங்கள், தனங்கள், யானை, தேர், புரவிகள் அனந்தமாய் உங்களுக்கு, காணிக்கையாகக் கொண்டு வந்தேனையா மகாராஜனே!

ராஜா விருத்தம்

ராகம்: கேதாரகௌளம்

தேசராஜர்க ளெல்லோரும் திரையளந்தன்பு நம்பால்
நேசம் வைத்திருக் கின்றாரோ நீணிலத்தோர் களெல்லவம்
ஈசனன் புடனே வாழ்ந்து இருப்பது மெமக்கு நன்றாய்
ஆசிலாதுரையு மெந்தன் அருமை மந்திரி யிப்போதே!

### ராஜா வசனம்

அகோ வாரும் பண்டிதரே! நீர் வாதபிப் பட்டணத்து அரசனை ஜெயித்தது கேட்டு, மகா சந்தோஷ மாச்சுது. மற்றுமுள்ள தேசராஜாக்களெல்லோரும், செழிப்பாக இருப்பதும், தேசத்திலுள்ள ஜனங்கள், சுகமே இருப்பதும், தெரியப் படச் சொல்ல வேணும் மந்திரியே!

### மந்திரி விருத்தம்

**ராகம்: கேதாரகௌளம்**

மண்டலத் தரசர் கப்பம் வருவதும் குறைவொன்றில்லை
விண்டு வென்றுமைப் புகழ்ந்து வேந்தெல்லாம் புகலுவார்கள்
எண்டிசைக் குடிகளெல்லாம் ஈசனன் பாலே வாழ்ந்து
கொண்டிருக்கின்றார் யாதும் குறை வொன்றுமில்லை தானே!

### மந்திரி வசனம்

கேளுங்களையா காடர் கோனாகிய மகாராஜனே! தேசத்திலுள்ள ராஜாக்க ளெல்லோரும், திரையளந்து வருகிறார்கள். உங்களை விஷ்ணுவுக்குச் சமதையாய், அரசுரிமை செய்யப் பட்டவர் என்று, புகழ்கிறார்கள். மண்டலத்திலுள்ள ஜனங்கள், ஈசனுடைய கிருபையினாலே, சுகமே இருக்கிறார்களையா மகாராஜனே!

### ராஜா விருத்தம்

**ராகம்: கேதாரகௌளம்**

மந்திரி சொன்ன சேதி வன்மையும் கனக ரத்ன
தந்தியும் புரவி தேர்கள் தரியலர் அடிமையாக
வந்தது கண்டு இந்த மந்திரிக்கிணை ஏதென்று
புந்தியும் மகிழ்ந்து ராசன் புகலுவான் புகழ்ந்து தானே!

### ராஜா தரு-8

**ராகம்: எதுகுலகாம்போதி** **தாளம்: ஆதி**

1. மந்திரியே யுனைப்போல் வாய்த்த துணை யெமக்கு
   இந்தத் தரணி மீதிலே துண்டினி மேலையா
2. சந்திய கீர்த்தி போல ஒத்தவரிவ ரென்றாலிந்த
   புத்தியும் வீரமொடு வெற்றி யெவர்க்குண்டாமோ

3. சாத்தகி சுமந்திரன் தனக் கேற்ற முடைய ரென்று
நாற்றிசை யோர்கள் உம்மை ஏற்றிப் புகழ்வதாலே

4. மனுவுக்குத் தனுகரன் வாய்த்தது போல நம
தனுவுக்குத் துணைவனாகத் தானெழுந்தருளிய
[மந்திரியே....]

5. ஆவிக் குறுதியாகி மேவிக் கொண்டாய் குலாவி
தாவிப் படர் கொடிக்கிப் பூவில் கொழு கொம்பாகி

6. வையத் தரசர்க்கு மதியுரைப்ப தல்லாமல்
வெய்ய பகையை வென்று வெற்றி கொடுப்பதுனைப் போல்
[மந்திரி....]

## ராஜா விருத்தம்

**ராகம்: மோகனம்**

இந்த வாறிசைந் தெமக்கு அமைச்சனாக ஈசனமைத்தா னென்றி
தயத் தெண்ணி
சிந்தையிலே மகிழ்ச்சி பொங்கி சதசிலுள்ள சேனை காவலர்கள்
தள வீர சூரர்
வந்திருந்த கொலு முகத்திலுள்ளோர் தம்மை மன்னவனும்
பார்த்திந்த மந்திரிக்கீடு
இந்த உலகத்திலில்லையென்றே சொல்லி இன்பமுடனாடை
செம்பொன் ஈகின்றானே!

## ராஜா வசனம்

இந்தப் பிரகாரம் சபையிலே இருந்த, மற்ற மந்திரிகள் தளகர்த்தர் வீரர் பந்து ஜனங்கள் சகலரையும் பார்த்து, இந்த மந்திரிக்கீடு இச்சகத்திலில்லையென்று, ஆடையாபரணம் ஈந்தார்.

## சம்பந்தர் விருத்தம்

**ராகம்: தோடி**

சுந்தரஞ்சேர் வெண்ணீறு துலங்க இந்து தோன்றுதல் போல்
நுதல் சாந்தம் சிறந்து தோன்ற
அந்தணர்கள் அடியார்கள் அனந்தம் சூழ்ந்து ஆடலும் பாடலும்
பண்ணினார்ப்பும் ஓங்க

செத்திருமாலோ வேளோ அரனோ இந்தத் திருக் கூட்டத்தி
நடுவாய் வந்தாரென்று
சிந்தையினில் அரசர் மகிழ்ந்திட சம்பந்தர் திருக்காஞ்சிநகர்
தழைக்கச் சிறந்து வந்தார்

## சம்பந்தர் தரு—9

ராகம்: தோடி தாளம்: ஜம்பை

சம்பந்தர் வந்தனரே திருஞான—சம்பந்தர் வந்தனரே!

1 அம்மையுடையவருள் கொம்மை மூலைப்பால்தனை
உண்மையுடனே புசித்தி ம்மைப் பிறப்பறுக்கும்
[சம்பந்தர்...]

2. ஆறு சமயந்தன்னில் மெஞ்ஞான அருள் சைவ மெய்
யென்றெண்ணி
நீறு பஞ்சாட்சரமும் நிறையவே மனத் தெண்ணி
கூறு முத்திராக்ஷங்கள் குறை வில்லாமல் நண்ணி
[சம்பந்தர்....]

3. கையில் செப மாலையும் நாவினில் பண் பைய நவின்ற
கலையும்
தொய்யு மடியுடையு மெய்யிலணியும் பொடியும்
அய்யமறு வோர் புடையும் தெய்வ துதி நடையொடு
[சம்பந்தர்...]

4. கலைஞான பண்டிதனார் தவசுதன் கருத்திலுயர்ந்த போதன்
தலை ஞானியுமா மகேஸ்வரனார் தனயனான—பல
கலை தெரிபரஞ் சோதிக் கருள் செய்யவே...
[சம்பந்தர்....]

5. மந்திரி பண்டித ரென்றுரையை மாற்றி வள்ளலன்ப
ரென்றேத்தி
இந்த உலகிலுள்ளோ ரெல்லாம் சிறுத் தொண்டரென்று
சந்தோஷமாகவே சொல்லவென்று தந்திரி பஞ்சுரம்
விளங்க
[சம்பந்தர்....]

6 சிறுத்தொண்டரெனப் பெயரை செலுத்தியன்பர் திருவடிப்
பெருமை
உரைத்துப பஞ்சாக்ஷரத்தை உரைத்துப் பதித்துவத்தை
உளத்திலிருத்தும் உபதேசம் தனைப் புகல [சம்பந்தர்...]

## விருத்தம் பொது

**ராகம்: காம்போதி**

முடிவிலா மாயவாரியனை முறித்தலை நீர் தீயப்
பொடிபுனை கடவுள் அன்பன் போதன் சம்பந்தர் தாளை
படிமிசைக் காடர் கோனும் பரஞ்சோதிப் பண்டிதரும் போற்றி
அடியினில் வீழ்ந்தெழுந்து அஞ்சலி செய்கின்றாரே!

## ராஜா மந்திரி தரு 10

**ராகம்:** **தாளம்:**

1. சீர் வளருந்திருமாலும் திசை முகனும் தேடியும் காணாத
—பொருள்
திருவுருவாகவே வரு குருபரனைத் திருவடி தொழுவோமே
—இன்று
அருளது பெறுவோமே
2. கார் வளரும் பொழில் சூழும் சீர்காழி கடவுளரிடப் பாகம்
—மேவும்.
கன்னிகை யம்பிகை தன்னுடை மூலைப்பால் கவரும்
திருவாயா-வினை
தவறிட அருள் வாயே!
3. பார் வளரும் தமிழ்ப்பாடலால் மாலை பகவனுக்
கணிவோனே-எங்கள்
பவமறப் பேரின்பத் தவமுறவே யருள் பாலிக்கும்
பெரியோனே-பண்
ஆலிக்கும் திறலோனே
4. ஆர் வளரும் முடியா ரருளால் வரும் ஆனந்த குருமூர்த்தி-
உனை
ஆரறிவார் அறிவார் பெரியோர் அறுமா முக
நீயென்றே-திரு
ஞான சம்பந்த னென்றே!

## ராஜா விருத்தம்

**ராகம்: காம்போதி**

புகலி காவலனே போற்றி போத மீதென்று காட்டி
இகலுடை பவத்தை நீக்கும் எந்தையே போற்றி—ஞானத்
திகழ் பொருளாம் பஞ்சாக்ர திருவெழுத்தருமை கண்டு
சகலருக் கருளு ஞானசம்பந்தப் பொருளோ போற்றி

### ராஜா வசனம்

புகலி என்ற ஊரில் பிறந்தவனே போற்றி, போதமாகி யது, இது, இது, வென்றருளும் போதனே போற்றி - பசு பதி பாசமென்ற திரிபதார்த்தத்தை ஈதென்றருளிச் செய்யும் திருஞான சம்பந்த ரென்ற குருநாதனே போற்றி போற்றி !

### சம்பந்தர் விருத்தம்

போற்றிய அரசே இந்த புவியெலாம் புகழ உத்தன்
கீர்த்தி சேர் மந்திரி போல் கிடைக்குமோ புவனமீதில்
பார்த்திபன் மந்திரியாய் நின்ற பரஞ்சோதிப்
பண்டிதரென்னாமல்
சீர்த்தி சேர் சிறுத்தொண்டரென்று செப்புங்கள் செகத்தோர்
கேட்க.

### சம்பந்தர் வசனம்

கேளும் ராஜனே! இந்த மந்திரியைப் போலே இனிமேலுங் கிடைக்க மாட்டாது. அப்படிப்பட்ட மந்திரியை உமக்குத் தெரியவில்லை, அவரோ, சிவனுடைய பக்தனாக்கும், அவருக்கீடாக, அடியார் பக்தி செய்கிற பேர்களில்லை. ஆகையால், இனிமேல், அவருக்குப் பேர், "சிறுத் தொண்டர்" என்று சொல்லும், இச் செகமெல்லாம் புகழும்படியாக ராஜனே!

### ராஜா விருத்தம்

சிறுத் தொண்டர் என்று நீங்கள் செப்புங்கள் என்ற சொல்லை
கருத்துடன் அரசன் கேட்டுக் கலங்கியே புலம்பி வாடி
உருத் தெரியாமல் இந்த உலகினில் ஏவலிட்ட
குருத் துரோகங்கள் நீங்க கூறுவீர் கொடியனேர்க்கே!

### ராஜா வசனம்

அரசுரா நீலகண்ட குருபரா, யேகாம்பர நாதா, என்ன செய்வேன். இந்தச்சிவனடியாரைத் தெரியாமல், மந்திரி வேலையிட்ட பாவம் தீர வகை காணேனே, இத்துன்பம் தீரும் படி கிருபை செய்ய வேணும், காழிக்கரசே! கடவுளர் சேயே! சுவாமி!

### சம்பந்தர் - விருத்தம்

அரனடியவரை வேலை யாளாக்கிப் பணியே பெற்ற
மறமது தீரக் கேட்ட மன்னனே சொல்லக் கேளாய்
திரவிய முள்ள தெல்லாம் சிறுத்தொண்டர்க் களித்துப் பின்னும்
அறமது புரியச் செய்யில் அகன்றிடும் பாவந்தானே!

### சம்பந்தர் - வசனம்

கேளுமையா ராஜனே! இந்த சிவனடியாரை ஏவல் கொண்ட பாவம் தீர வகை கேட்டீரே, அது சொல்கிறேன் கேளும்! உம்முடைய திரவியம் அனைத்தையும், சிறுத் தொண்டருக்கு தெத்தம் பண்ணி, அவரை தர்மஞ் செய்யும்படி அனுப்பினால், உமது பாவமெல்லாம் தீரும் ராஜனே!

### சம்பந்தர்-விருத்தம்

அரசனுக்குரைத்துப் பின்னும் ஆதியாந் தலங்கள் தோறும்
விரைவுடன் நடக்க வெண்ணி வேதியரோடு முன்னே
சிரவணவான தொண்டர் திரளுடன் சிறுத் தொண்டர்க்கு
உரை செய்தஞ் செழுத்தைக் காட்டி உண்மையாய்
தலங்கள் சேர்ந்தார்

### சம்பந்தர் - வசனம்

இந்தப் பிரகாரம் செய்யும்! ராஜனே அருமையான சிறுத் தொண்டரே கேளும்! பஞ்சாட்சரத்தின் மகிமை இந்தப் பிரகாரமாக்கும், இதை சிவத்தியானம் செய்துகொண்டு ராசனுடைய உத்திரவு பெற்று, திருச் செங்காடென்று ஒரு திவ்யஸ்தலமுண்டு, அந்தஸ்தலத்துக்குப் போய், அன்ன தானமும், அடியார் பூசையும் செய்யும், அங்கு நாம் வருவோம் பக்தனே!

### சிறுத்தொண்டர் வசனம்

அப்படியே மகா பாக்கியமய்யா சுவாமி!

### ராஜா விருத்தம்

திருஞான சம்பந்த மூர்த்திபாரும் சிறுத் தொண்டர்க்குப
தேசித் தேகப் பின்பு
குருஞான மிதுவென்றுளத்தில் கொண்டு கோதிலா சிறுத்
தொண்டர் தன்னைப் பார்த்து

அருள் ஞானம் பெற்றுடைய அய்யனே எனை அகலா திங்கிருந்
திந்த அரசு செங்கோல்
பெறவே நானும்மால் ஆனாதினால் என்னைப் பிரிந்திடா
திருப்பேனெனப் பேசென்றானே!

## ராஜா வசனம்

கேளுங்களைய்யா சிறுத்தொண்டனாரே! நீர் என்னைப் பிரியா திருந்ததினால், இந்த அரசாட்சியும் செங்கோலும் எனக்குக் கிடைத்தது; ஆகையால், இப்பவும் என்னைப் பிரியாமல் இந்த ஸ்தலத்தில் இருக்கிறேன் என்று, ஒரு உத்தாரம் சொல்லும் சிறுத் தொண்டனாரே!

## சிறுத் தொண்டர் விருத்தம்

வல்லியோர் பாகம் வைத்த வள்ளல் தன் கிருபையாலே,
வெல்லுதற் கருமையான வேந்தரை வெற்றி கொண்டு
தொல்லையாம் உலகையாண்டு சுகத்துடனிருந்தோ மின்னாள்
அல்லல்கள் தீர என்னை அறஞ்செய்ய அனுப்புவீரே!

## வசனம்

திருவருள் பெற்று வளர்ந்தோங்கிய மன்னவரே கேளும்! கடவுளாருடைய கிருபையினாலே, சத்துருக்களையெல்லாம் வென்று, இந்த நகரமும், மற்ற இராஜ்ஜியமும், ஆண்டோம். இப்போது எதுக்கு தருமம் செய்ய, உத்தாரம் தருமையா ராஜனே!

## ராஜா மந்திரி-தர்க்கத்தரு 11

ராகம்: தாளம்:

ராஜா : காரூரும் கடல்சூழ்ந்த காசினிதன்னை யாண்டு
கடவுள் அருளைப் பெற்ற மந்திரியே—என்னை
வேறாக விட்டாலிங்கு வேறாதரவேது சொல்
மேதினி தன்னிலேதான் மந்திரியே அய்யா.

மந்திரி: மேதினி தன்னையாண்டு மென்மேலும் புகழ் பூண்டு
நாதனருளைப் பெற்ற மன்னவனே—அரன்
பாதந்தொழுதடியார் பத்தி செலுத்த இன்று
ஓதுவீருமது வாக்கால் மன்னவனே அய்யா.

ராஜா : ஒதுவசிந்த நாடுமுள்ள திரவியமும்
நீர்தர வந்ததல்லால் மந்திரியே —இப்போ
பேதமாக வேறு பேறுபெற வென்றெண்ணியே
ஓதுமென்றாலென் செய்வேன் மந்திரியே!

மந்திரி: செய்வது வேறேதய்யா தொண்டர்க்குத் தொண்டர் நாதன்
மெய்யடியார் பூசை மன்னவனே —இன்று
செய்யென்று விடைதந்தால் ஐயனே திருச்செங் காட்டில்
வைதீக பூசை செய்வேன் மன்னவனே அய்யா.

ராஜா : பூசை செய்வ தேதுக்காய் புகலுவீர் ஒளி வீசும்
பாதிப்பிறையனையே மந்திரியே—நீரும்
நேசமுடனிங்கிருந்து நினைத்தால் வருவான் தானே
பேதமை ஏதய்யனே மந்திரியே அய்யா!

மந்திரி: பேதமில்லா தொரு புத்திரனையே வேண்டி
நாதனைப் பூசை செய்ய மன்னவனே அன்பர்
பாதகமல பூசை பண்ணினால் சுபுத்திரனாய்
பேத மறவே கிடைக்கும் மன்னவனே அய்யா.

ராஜா : பேதமறவே யொரு புத்திரனாலே யரன்
பாதம் பெறலாமோ சொல்லும் மந்திரியே—இந்த
சேதிக் காதரவாக செப்புவாய் ஒப்புடனே
நீதமுடைய வெந்தன் மந்திரியே அய்யா.

மந்திரி: நீதமுடனோர் பிள்ளை நேசமுடனே பெற்றால்
நாதனருள் பெறலாம் மன்னவனே—தர்ம
நீதி நூலோதுதையா மன்னவனே அய்யா.

## மந்திரி விருத்தம்

ராகம்: முகாரி

காதல்கொள் அரசே இந்தக் கருத்தினியேல் சொல்லாமல்
ஆதாமுடனுத்தாரம் அடியேனுக் களித்தாலிந்தப்
பூதலந்தனிலுமக்குப் புண்ணியம் பேறுமுண்டு
நீதன் சம்பந்தன் சொலபோல் நீர் தாரும் விடையெமக்கே.

## மந்திரி வசனம்

கேளுங்களையா காடர்கோனாகிய மகராஜனே! பேத மில்லாமல், திருஞான சம்பந்த மூர்த்தியார் சொல்போல், அடியேனுக்கு விடைதந்தால், அதனாலே உமக்குப் பலனுண் டாகும் மகாராஜனே!

## ராஜா விருத்தம்

**ராகம்: முகாரி**

பலனுண்டென்றுரையைப் போலே பரமனைக் கண்டாலந்த
தலமதில் எமக்கு மோக்ஷம் சங்கரன் தருவான் முத்தி
இலகிடு நிதி யெடுத்து இருநிலந் தனிலே யன்ன
பலன் பெறச் செய்யு மெந்தன் பவமறத் தொண்டனாரே!

## ராஜா வசனம்

கேளுங்களையா சிறுத்தொண்டனாரே! நீர் எந்தஸ்தலத்தி லிருந்து சிவபூஜையும் அரனடியார் பூசையும் செய்கின்றீரோ, அங்கே திரவியம் எடுத்துக் கொண்டு போய், அன்னதானமும்' அடியார் பூசையும், குறைவில்லாமல் செய்யும் அடிக்கடி அஞ்சலாள் வசமாய், உமக்கு வேண்டிய திரவியம் அனுப்பு கிறேன். அந்த அரனடியார் பூசையினாலே, சங்கரன் வெளிப் படும். உமக்கு மோக்ஷமாகுமிடத்திலே, அடியேனுக்கும் மோக்ஷம் தருவார். ஆதலால், எனக்குப் பலனுண்டேயல்லாமல் வேறல்ல, நீர் போய் வாரும் சிறுத் தொண்டனாரே!

**மந்திரி:** அப்படியே போய் வருகிறேனையா மகாராஜனே!

## மந்திரி-விருத்தம்

**ராகம்: கேதாரகௌளம்**

மன்னவர் வார்த்தை கேட்டு வருவதுபோல் என்னாளும்
என்னுடை வார்த்தை கோளாய் ஏவல் கட்டியனேயின்று
கன்னிகை வெண்காட்டு நங்கை காதலி தமையே இங்கு
என்னிடம் அழைத்துக்கொண்டு இச்க்ஷணம் வருகுவாயே!

## வசனம்

அகோ வாரும் பிள்ளையாய் கட்டியக்காரா! இன்னாள் வரை மன்னவன் வார்த்தையைக் கேட்டு வந்தது போலே,

என்னுடைய வார்த்தையைக் கேளும் பிள்ளாய்! இப்பவும், என்னுடைய, பிராணநாயகியான, வெண்காட்டு நங்கையை, நாம் ஆசார வாசலிலிருக்கிறோமென்றுகூறி, அழைத்துக் கொண்டு வாரும் பிள்ளாய் கட்டியக்காரா!

## கட்டியக்காரன் வசனம்

அப்படியே வரச்சொல்லுகிறேனையா சுவாமி.

## கட்டியக்காரன் விருத்தம்

**ராகம்: தன்னியாசி**

அன்னையே கடவுளான அரன் திருத்தொண்டர்க் கன்பாம்
சொர்ணமே கமலைபோல துலங்கிய சொல்லினாளே
மன்னவன் விடையே கொண்டு வாசலில் வந்திருந்து
உன்னையே அழைக்கச் சொன்னார் உண்மையாய் வருகுவீரே!

## வசனம்

சரணம் சரணமம்மா தாயே! அரன் திருத்தொண்டராகிய மந்திரியார், ராசாவின் விடை பெற்றுக் கொண்டு, ஆசார முகப்பிலே வந்திருந்து, உங்களை அழைத்து வரச்சொன்னாரம்மா தாயே!

## நங்கை விருத்தம்

**ராகம்: தோடி**

மதி முகமும் கதிர் திலத வதன மிதழ் குமிழ் நாசி வண்டென
இரண்டு சேல்கள்
எதிரெதிர் புரிந்த தெனவயில் கடல்வாள் அமுத நிகர்
இருவிழியும் வள்ளைக்காது
புதிய சங்கிளங் கமுகு கண்டம்வேய் தோளிலணி பொருப்பை
நிகர் தனம் வெருவியே
முதிய விடையிடை யொடியுமென மொழிதல் போல்
கச்சை முறையிடவும் நங்கை வந்தாள்.

## நங்கை தரு-2

**இராகம்: கல்யாணி** **தாளம்: ஆதி**

திருமாது போலவே வந்தாள்—சிங்காரமாக
திருமாது போலவே வந்தாள்.

1. நறுமலரணி கூந்தல் நாரியர்கள் புடைசூழ
ரஞ்சித மிஞ்சிய கிஞ்சுகக் குயிலென செஞ்சொலின்
மொழிபயில்
வஞ்சியர் துதி செய்ய [திருமாது....]

2. கொந்தளக் குழலாடவே - கொன்றை மாலையில் -
வந்து வண்டு கீதம் பாடவே- பந்து முலை மீறியாடவே -
மிக வருந்தி
சந்தொடு மிடை தள்ளாடவே பைந்தொடி இவட்கு
நிகர் இந்த உலகி ல்லை யென
சந்திர சேகரனும் தயவாகவே வந்தவளிவ ளென
சுந்தரி புகழ்ந்திட [திருமாது....]

3. இந்து போல் நுதலிலகவே! முண்டக மீதில்
சிந்தூரப் பிரபை துலங்கவே
நந்துபோல் கண்ட மிலங்கவே மேகலாபரணம்
அந்தர மீன் போல் துலங்கவே
சந்ததி யில்லாமல் மனம் சுஞ்சல மிகுந்து வாடி
சந்தத முந்தருமந் தயவாகவே
சந்திர சடாதரன் எந்தையை வணங்கிட [திருமாது]

4. பொற்சரிகைச் சேலை மின்னவே-இடையணிந்த
கச்சலொட்டியாணம் துன்னவே
கச்சை சிலம்பது மெல்லவே இசைந் தசைந்து
பக்ஷமுடன் துதி சொல்லவே
இச்சக மதில் எவரும் மெச்சிடு கின்றார் புகழால்
உச்சித சிரோமணி யச்சர மாதென மெச்சிட அன்பரை
அர்ச்சனை புரிந்திட [திருமாது]

## நங்கை விருத்தம்

ராகம்: ஆனந்தபைரவி

பூரண சந்திரன் போல புவியெலாம் புகழ்ந்து போற்றும்
தாரணியமைச்சர்க்கெல்லாம் தலைவனாம் பிராண நாதா
பூரணியாகச் சொல்லி போதவே யெனையழைத்த
காரணம் யீதென்றே நீர் கருத்தினை விளம்பு வீரே!

## நங்கை வசனம்

அகோ சரணம் சரணமய்யா சுவாமி என் பிராண நாயகா! அடியாளை அழைப்பித்த காரியம். இன்னதென்று திருவுளம் பற்ற வேணுமையா சுவாமி!

## மந்திரி விருத்தம்

**ராகம்: கீரவாணி**

குழல் மொழியாகி நல்ல கோகிலம் போல் நாதித்து
உமையரக் கூவு மெந்தன் ஒண்டொடியணங்கே கேளாய்
முழுமதி யொத்து வாழும் முகமலர் குவிவதேது
பழுதற மனதி லெண்ணம் பகருவீர் பாவையாரே!

## மந்திரி வசனம்

குயிலையும் யேய்ங் குழலையும் பழித்த சொல்லுடைய பெண்ணே! உன் முகம் பூரண சந்திரன் போல விளங்கியது, இப்போது குவித்திருக்கக் காரணம் ஏதடி பெண்ணே!

## மந்திரி தரு-13

**ராகம்: புன்னாகவராளி** **தாளம்: ஆதி**

ஏது வியாகூல மாதே அடியே பெண்ணே

1. ஏது வியாகூல மாதே ஓது வாயீதென்று சூதே.
பேதமை ஈதென்ன புத்தி—காதலியே கண்ணே பெண்ணே!

2. சஞ்சல முனக் கேனடியே பெண்ணே
சஞ்சல மான துந்த நெஞ்சமதிலே மிகுந்த
வஞ்ச மீதின்ன தென்று சொல்லிலஞ்சிய ரஞ்சித வஞ்சி!

3. சோம்பலாவ தென்னடி அடியே பெண்ணே
சோம்பலாகி ஏங்கி தீங்குளார் போல கலங்கி
பாங்கியே முகம் நலுங்கி யாம் படி வந்தது விளங்க.

4. சொல்லடி மடமானே அடியே பெண்ணே
சொல்லடி எண்ண மீதென் விளபடி யான் கேட்கயின்று
தள்ளடி வியாகூல மெல்லாம்-மெல்லடியார் பணிபெற.

5. வஞ்சியே மயங்காதே பெண்ணே!
வஞ்சியே மயங்காதே யரன் தன் செயலால் நங்கை மேலே
வஞ்சமிலாத வரசனுஞ் சுப விடையே தந்தார்!

6. கோப மேதினிச் சொல்லடி-அடியே பெண்ணே
கோப மேதினி வாடி-தேவனருள் தர வோடி
வாவென்றதினாலே நாடி பூவரசனுகந்தானடி

## நங்கை விருத்தம்

**ராகம்: காம்போதி**

கோப தாபத்தால் நெஞ்சம் குறையுமோ கோவே லோக
பாவனைக் காக நாமோர் பாலனைப் பெறாதிருலே
தாவரும் சிவலோகத்தில் சாரவும் தடையாமென்று
மேவரும் உலகர்க்காக மெலியுதென்னுள மென்றாளே!

## நங்கை வசனம்

சரணம் சரணமையா சுவாமி என் பிராண நாயகா! தேவரீர் கோபமேதென்று கேட்டீர்களே! நமக்கு ஒரு குழந்தை யிருந்தால், உலகத்துக் கேதுவாய் இருக்கும், பரலோகமும் கிடைக்கும். இல்லாவிட்டால், மோஷமில்லை என்ற வசனத்துக் காக, வியாகூலமே யல்லாது, வேறல்லவையா சுவாமி:

## மந்திரி விருத்தம்

**ராகம்: முகாரி**

கலை பல வறிந்தார் போல கைங்கர்யம் புரியும் வெய்ய
சிலை நிகர் புருவ மாதே சிந்தையில் கலக்கமெல்லாம்
விலகிடும் படியே மன்னன் விடைபெற்று வந்தேன் கண்டாய்
அலகிலாப் பவங்கள் நீங்க யாமறம் செங்குவோமே!

## மந்திரி வசனம்

கலைகள் அறிந்த பெரியோர்கள் போல, கைங்கர்யம் செய்யும் பக்குவமுடைய பெண்ணே! இனிமேல் அரசன் உத்தாரம் பெற்று வந்தேன். நாமும் தவம் செய்குவோம், மயங்க வேண்டாமடி பெண்ணே!

## நங்கை-தொண்டர்-தர்க்கத்தரு 14

**ராகம்: வராளி** **தாளம்: ஆதி**

**தொ:** மங்கை மாது முகம் வாடுவதேது உன் மனத்தே என்ன
வருந்தினையோ அதை ஈதென்று சொல்லுமிக்
கணத்தில்—இக்கணத்தில்

நங்:- வருந்தி நினைந்தது ஏதென்று கேட்டிடும் மன்னா
—முன்னம்
மதலைக்காக வென்ற தொன்றல்லால் வேறில்லை
திண்ணமிது—மன்னா.

தோ:- மதலைக்காக அரனடியார்க் கமுதி டில் பெண்ணே
—பிள்ளை
வாய்க்குமே மார்க்கண்டன்போல் கலை யறிவாள
னாயின்னே—நமக்கின்னே.

நங்:- கலை தெரி புலவனாயொரு மகவினை ஈன்றெடுத்தால்
—எந்தன்
கவலைகளறுமது சிவனுடையாகமம் படித்தால்
—அது படித்தால்.

தோ:- சிவனுடையாகமம் பலகலை தெரிந்திடு குழந்தை-அரன்
சீரடியார்க கமுதம் அளித்திடில் பெறுவாய் நீ
மகிழ்ந்தே—மனம் மகிழ்ந்தே.

நங்:- மகிழ்ந்திட வரனடியார் களடி தொழு மன்னா—நல்ல
மாதல யேதகை ஈதென்று சொல்லுவீர் நன்னா—
வெகு நன்னா.

## மந்திரி விருத்தம்

ராகம்: முகாரி

வண்ண மாமயிலே மின்னே வனிதையே மயங்க வேண்டாம்
மின்னலர் சடையனப்பன் மெல்லடி பணியு மன்பர்
தன்னையே பூசித்தன்னம் சதிருடன் படைத்தால் பிள்ளை
கன்னி நீ பெறுவாய் நெஞ்சம் கலங்கிடா திருந்திடாயே !

## மந்திரி வசனம்

அடி வாடி பெண்ணே! நீ மயங்க வேண்டாம்! திருஞான சம்பந்த மூர்த்தியார், எனக்கு அனுக்கிரம் செய்த, திருச்செங் கரடென்கிற தலத்திற்குப் போய், அன்னதானமும், அடியார் பூசையும், செய்குவோம் வாடி பெண்ணே!

## நங்கை வசனம்

அப்படியே போகிறது சரியே! என்னுடைய பாலகனை, சந்தன மானோடு சொல்லி, அவளையுமழைத்துக் கொண்டு போக வேணுமையா சுவாமி!

### மந்திரி வசனம்

அப்படியே அழைப்பிக்கிறோமடி பெண்ணே!

### மந்திரி வெண்பா

சொல்லு மொழி கேட்டன்பாய் தொண்டர் பணி செய்கின்ற
வல்லவனாங் கட்டியனே வார்த்தை கேள்-இல்லகத்தில்
தாதி யெனும் சந்தன மான்தன்னை விரைவுடனே
நீத முடன் அழைத்து வா நீ

### மந்திரி வசனம்

சொல்லியபடியே வேலை கேட்டு வரா நின்ற கட்டியக்காரா! நீ நம்முடைய தாதியாகிய, சந்தன நங்கையை, அழைத்து வாரும் பிள்ளாய் கட்டியக்காரா!

### கட்டியக்காரன் வசனம்

அப்படியே மகா பாக்கியமய்யா சுவாமி;

### விருத்தம் கட்டியக்காரன்

செந்திருவென்னத் தேவர் மாதருக் கதிக யூகத்
தந்திர வார்த்தை சொல்லும் சந்தன நங்கையாரே
உந்தனை சிறுத் தொண்டையர் ஒரு நொடி தனிலழைத்து
வந்திட்டா யென்றார் நீயும் வருவாய் விரைவில் தானே.

### கட்டியக்காரன் வசனம்

அகோ வாருமம்மா சந்தன நங்கையாரே! உங்களை சிறுத் தொண்டர் அழைத்து வரச் சொன்னாரம்மா தாயே!

### சந்தன நங்கை விருத்தம்

ஆல முண்டிடு வோன் போல அரனடி மறவாதேத்தி
சீலமாய் நடந்து வேலை செய்திடும் தாதியாளும்
வாலை மாதரையே போல மணி கலை துன்னச் சாற்றி
கோலமே பூண் பொன் போலக் கொஞ்சியே வருகின்றாளே!

## சந்தன நங்கை தரு-15

ராகம்:

தாளம்:

சிங்கார மாகவே வந்தாள்—சந்தன நங்கை
சிங்கார மாகவே வந்தாள்.

1. வங்காரக் கலை புனைந்து—தங்கப் பணியணிந்து
திங்கள் பிறை நுதலிலங்கத் திலதமிட்டு [சிங்கார]

2. வேலைச் சினந்து கயல் மீனுக் கிணங்கு கண்ணும்
வேதப் புலமைப் பண்ணை ஓதற் கிணங்கு பெண்ணாள்
[சிங்கார.... ]

3. வாலைப் பருவமுள்ள கோலச் சதிராள் மெல்ல
ஆலக் களனை யுள்ளத்தாலே நினைந்துசொல்ல
[சிங்கார....]

4. மாதர்க் கித முரைத்து போதச் சிறுவர் பத்தர்
வாஞ்சைக் கதிக பத்தியாஞ் சைவத்தினை நத்தி [சிங்கார ..]

5. கோதற்ற சிவநேசர் போதத்தில் விசுவாசி
வேதத்தின் றலை யுற்றோன் பாதத்தில் வெகுநேசி
[சிங்கார... ]

6. தண்டை சதங்கை கலீரென்றே கிறந்த காலி
கொண்டை நிறைந்த மலர்க் கொண்ட வலங்கார வல்லி
[சிங்கார....]

7. என்றெல்லோரும் புகழ் மன்றல் மாலைதிகழ்
கண்டார் மனம் மகிழவென்றே யழகுதிகழ [சிங்கார....]

8. வஞ்சிப் பருவ முள்ளாள் நெஞ்சத்திருளே யில்லாள்
செஞ்சொற்றமிழை மெல்ல கொஞ்சிப் பேசிய சொல்லாள்
[சிங்கார...]

9. அஞ்சனக் கழுத்தனைத் தஞ்ச மென்றுளத்தினில்
அஞ்சலென்ற பத்தினிக் கின் சொல் மகா உத்தமி
[சிங்கார...]

## சந்தன நங்கை விருத்தம

ராகம்; ஆனந்த பைரவி

வந்த சந்தன மான் தொண்டர் மலரடி தொழுது போற்றி
எந்தனை அழைத்த தேது இசைத்திடு மென்று கேட்க
பைந்தொடி சந்தன மானென்னும் பாங்கியே தவங்கள் செய்ய
உந்தனைக் கூட்டிச்செல்ல ஒருமையா யழைத் ததாமே!

### வசனம் சந்தன நங்கை

அகோ சரணம் சரணமையா சிறுத்தொண்டனாரே! அடியாளை அழைத்த காரியம், என்ன சொல்லுங்களையா சுவாமி!

### வசனம் தொண்டர்

ஆசீர் வாதம்! சுபமாய் அரனருள் பெற்றிருப்பாயாக! உன்னையழைத்த சேதி—திருச் செங் காடென்னும் தலத்துக்குப் போய், அன்னதானமும், அடியார் பூசையும் செய்யப் போகிற தற்கு, உன்னையழைத்ததடிப் பெண்ணே!

### விருத்தம் சந்தன நங்கை

கரவி னெஞ்சினர் காணாத காட்சியை சூட்சமாக
வரி வுபாய மீதல்லால் மற்றொன்றால் காணலாமோ
திறமுள்ள தலத்தின் கீர்த்தி செப்பினாலடியாள் கேட்டு
மறமதை யகற்றி யுந்தன் வழித் தொண்டு புரிகுவேனே!

### வசனம் சந்தன நங்கை

சரணம் சரணமையா சுவாமி ! வஞ்சக மனத்தால் காணக் கூடாத தெய்வத்தைக் காண, உபாய மிதுவே நல்லது. அந்தத் தலத்தின் பெருமையைச் சொன்னாலடியாள், மறமென்னும் பாவத்தை நீக்கி, தங்கள் வழித் தொண்டு செய்குவேனையா சுவாமி.

### தொண்டர் வசனம்

ஆனால் சொல்லுகிறேன் கேளடி பெண்ணே!

### மந்திரி தரு—16

ராகம்: மோகனம் தாளம்: ஜம்பை

அந்தஸ் தலத்தின் பெருமையைச் சொல்கிறேன்
சந்தன மானே நீ கேளாய்.

1. முந்த மக மேரை வில்லாய் வளைத்து
முப்புரந்தன்னை சிரித்தே யெரித்து

சுந்தர மாமதன் தன்னை விழித்து
சோமன் முடித்தப் பரமேசனிருக்கின்ற
[அந்தஸ்...]

2. சந்தனம் கற்பகம் சூழ்ந்த வனத்தினில்
சத்திய சாடர் கணேசன் – வசு
இந்திரன் மந்திரன் பாட்கரன் மாலயன்
இன்பமுடன் செய்தார் பூசை – மேலும்
சிந்து வரசனும் கேதகையும் பூசை
செய்து வாழ்ந்தார் சிவநேகர் – கேட்டு
வந்து வணங்கி வரம் பெற்ற மாநகர்
மங்கையே சந்தன நங்கையே கேளடி
[அந்தஸ்தல...]

3. மச்ச வராகமும் கூர்மமும் சிம்ம
வலதை யழித்திடும் நாதன் திருக்
கச்சி வளரும் ஏகாம்பர நாதன் கஞ்சன்
சிரங் கொய்த போதன்—அதில்
நிச்சயமாக இருப்ப தறிந்து நெடு
நாளாக நில மாது வாசம்
இச் க்ஷணமே பணிந் தேத்தியே நாம்
இடரைக் களை வோ மட மின்னே நீகேளாய்
[அந்தஸ்தல.. ]

4. அன்னங் குயிலு மயிலுடன் கிள்ளை அன்றிலருஞ்சிறைப் பறவை எல்லாம்
துன்னி நெருங்கிப் பகையின்றி வாழும், அச்சோலையிலே வாழும் பூவை—அது
முன்ன மயனியமன் காமனை வென்றிடு முக்கண்ணன் கீர்த்தியே பாவாய்—அது
சொன்ன தறிந்துமே சத்தரிஷி பூசை சூட்சமாய்
செய்துமே மோட்சமடைகின்றார் [அந்தஸ்]

## தொண்டர் வெண்பா

**ராகம்: சங்கராபரணம்**

தலத்தின் பெருமை யெல்லாம் சந்தன மானுக் குறைத்துப்
பலத்தைப் பெருக பரிந்து—சொலத்தகுந்த
அன்ன தானஞ் செய்ய அணங்கே நாமெல்லோரும்
இன்னகரம் விட்டே யேகுவோம்.

## தொண்டர் வசனம்

கேட்டியோ சந்தனமானே! அந்தஸ்தலத்தின் பெருமை யின்னமும் அனந்த முண்டென்று, பெரியோர் சொல்லி யிருப்பதினாலே, நாமெல்லோரும் போவோமடி பெண்ணே!

## சந்தன நங்கை விருத்தம்

இப்படிக் கீர்த்தி பெற்றோரிக்கின்ற தலஞ் செங்காடென்று
எப்படிச் சொல்லலாச் சென்றேந்திழை கேட்கத் தொண்டர்
மைப் பொலிகின்ற கண்ணிமாதே நீ கேட்கயானும்
சொற்பொருள் தன்னை நன்றாய்ச் சோர்வின்றி கேட்டிடாயே!

## சந்தன நங்கை வசனம்

இப்படிக் கீர்த்தி பெற்ற ஸ்தலத்திற்கு, செங்காடென்று எப்படிப் பேராச்சுதய்யா சுவாமி!

## தொண்டர் வசனம்

ஆனால் அதையும் சொல்கிறேன் கேளடி பெண்ணே!

## தொண்டர் - தரு 17

**ராகம்: மோகனம்** **தாளம்: ஆதி**

கேளடி சந்தன மானே – செங்காடானதை
கேளடி சந்தன மானே!

1. கேளடி செங்கா டானதை - வாழடி யதைக் கேட்டுநீ
ஆளடி பேரின்ப நாட்டை – மீளடி பவத்தை நீக்கி
[கேளடி ...]

2. முத்தி பெற சத்தியா சாடர் முன்னாளில் தவம்
மெத்தவே புரிய வானாடர ரசரிவர்
பத்தியை யறிய ராட்சதரத்தியே யனுப்ப வவளைக்
குத்தியே யரன் சூலத்தாலவள் செத்திடச் சோரி பெருக.
[கேளடி ...]

3. ரெத்த வண்ண வாய்கானானதால் – செங்காடி தென்று
கர்த்தனுரைத் தானே தானதாய் – அன்று தொட்டது

பெருத்த திருச் செங்காடென்று - உரைத் திருடி
தவங்கண்டு
பொறுத்த வரங்கேளேதென்று - கருத்துடன்
மொழிந்தாரன்று [கேளடி ....]

4. தவஞ் செய்யும் சத்தியா சாடர் சுக்கிரன் சித்தி
சிவன் தன்னைக் கேட்கவே நாட - கங்காதரரும்
பவந் தொலையத் தந்தோமென்று மெவன்தான்
நெல்லி இலை கொண்டு
பசுந் தன்னம் கொடுத்தானென்னும் அவன்தான்
நான் என்றது வை : —[கேளடி ....]

## சந்தன நங்கை விருத்தம்

திருநிறை தலச் சிறப்பைச் செப்பிடக் கேட்டு, எங்கள்
குறை வெல்லாமகன் றதையா! குலத்துள்ளார்க்
கிஷ்டத்தார்க்கும்
விரைவுடன் பயணம் சொல்லிவிட்டு நற்றினமே பார்த்து
சிறுவனைப் பெறவே வேண்டிச் செல்லுவோம் திருச்செங்காடே

## சந்தன நங்கை

தேவரீர் அந்த திருச்செங்காட்டு வளத்தைச் சொல்லக் கேட்டு எங்கள் குறையெல்லாம் தீர்த்தோமையா சுவாமி!

## தொண்டர்

நல்லது அப்படியே புறப்படுவோம் பெண்ணே!

## விருத்தம்

பட்டணத்துள் ளோர்க் கெல்லாம் பரிசன நட்பாய்ந்தோர்க்கும்
செட்டிகள் குடிகள் மற்ற சிறியவர் பெரியோர்க் கெல்லாம்
பொட்டென்ப் பயணஞ் சொல்லிப் புந்தியுள் மகிழ்ந்து கொண்டு
மட்டிலாத் தனத்தினோடு வந்தனர் திருச் செங்காடே.

## பொது தரு-18

**ராகம்: பைரவி** **தாளம்: ஆதி**

வந்தனர் நங்கையுடனே—திருச்செங்காட்டிற்கு
வந்தனர் நங்கையுடனே

1. தந்தை தாய் முதலான பந்து சனங்களானோர்
வந்து வழி விட்டுத் தானே பிந்திடச் செங்காட்டை நாடி
[வந்தனர் ....]

2. பட்டினத்துள்ள பேர்களும் பிரதானிகளும்
அட்டவணைக் காரர் களும்—கட்டளைப்படி நடந்து
இஷ்டமானோரை விடுத்து—கிட்டிய புலி யுரித்துக்
கட்டிய சிவனை நினைத்து [வந்தனர்....]

3. அத்துவாவரையும் விடுத்துச் சிவலோகத்தைப்
பற்றியே மோனவீடடுத்து
சுத்த ஞானி இவனென்ன—சத்திரம் கட்டியே யன்னம்
பத்தர் பரதேசி யுண்ணப் புத்திரனைப் பெற வெண்ணி
[வந்தனர் ....]

4. காஞ்சி நகரரசானும் மன்னனுடனே—வஞ்சி காமாட்சி
சதகம்
நெஞ்சமதிலே நினைந்து -மிஞ்சு திருச் செங்காடடுத்து
வஞ்சியை வாவென்றழைத்து சஞ்சிதந் தன்னைத் துரத்தி
[வந்தனர் ...]

ரு. கம்பை பொன் முகலியாறும்
பாலாறு வெள்ளாறும், பம்பை மணி கரணியாறும்
அன்பர் புகழ் பெண்ணையாறும், தெம்புடன் கடந்து ஏகி
அங்கங் கிருந்திளைப்பாறி—நம்பின தவத்தைக் கோரி
[வந்தனர் ....]

6. கங்கையுமரு கணிந்து வன்னியுந் தும்பை, திங்களும்
வில்வமும் புனைந்து
மங்கை யோரிடம் வைத்த சங்கரனை நினைந்து
பங்கயக் கை குவித்து துங்க அறம் செய நினைத்து
[வந்தனர் ...]

## விருத்தம்

வந்துமே திருச்செங்காட்டை வலஞ்சுற்றி நதிகளாடி
தந்தி யீஸ்வரனைப் போற்றி சத்திரங் கட்டிடமே பார்த்து
இந்து சேகரனிருக்கும் இடத்துக்குத் தென் மேற்காக
வந்து பார்த் தரிவை கேட்க வழுத்து வானிலத்தின் சீரே

## வசனம் தொண்டர்

அடி வாடி பெண்ணே என் பிராண நாயகியே ! நாமானால் காஞ்சீபுரம் விட்டு, நதிகளெல்லாம் கடந்து, திருசெங்காட்டுக்கு வந்து, நதிகளிலெல்லாம் ஸ்னானம் செய்து, கணபதீஸ் வரனையும் பணிந்து வந்து இடம் பார்த்தோமே அன்ன சத்திரம் கட்டுகிறதற்கு, இந்த ஆலயத்திற்குத் தென் மேற்கு கன்னி மூலையானதா லிது நல்லயிடமடி பெண்ணே !

## நங்கை வசனம்

ஆனால் இந்த இடத்தின் பெருமை எப்படி சுவாமி !

## தொண்டர் தரு—19

ராகம்—தோடி. தாளம்:- ஜம்பை

1. இவ்விடம் நல்லிடமே அறம் செய்ய
இவ்விடம் நல்லிடமே.
சைவ சமய முய்ய திவ்ய அன்ன தானம் செய்ய [இவ்விடம்....]

2. கங்கை பெருகியே எங்கும் பரவியே
சங்கரனடி யார் போல் எங்கும் பரவியதால்—[இவ்விடம்....]

3. தேவர் முனிவரோடு சித்தர் புலவர் கூடி
மூவருமரன் பூசை முறை முறை புரிதலால்—[இவ்விடம்....]

4. சந்தனம் கற்பக நந்தவனம் பொற்புடன்
இந்திர வனம் போல் வளர்ந்து மலர்தலால்
—[இவ்விடம்...]

5. பத்தர்கள் முத்தர்கள் பத்தியாய் நிறைதலால்
அத்துவித யோகியர் நித்திய மாயுறைதலால்
—[இவ்விடம்....]

6. மண் களிலதிகந் திருச் செங்காடெனுந்தல
கண் களி கூறவே பெண்களே நீர் பாரும்—[இவ்விடம்....]

7. தெய்வ மறையோரும் சைவருஞ் சூழ்தலால்
மைவருங் கண்டர் உறைவிட மானதால் [இவ்விடம்....]

## மந்திரி விருத்தம்

நல்விடமிது வென்றே தான் நங்கைக்குந் தாதியர்க்குஞ்
சொல்லியே துதித்துக்கொண்டு ககிர்த கட்டியனைக்கூவி
வல்லவராகுஞ் சிற்பர் வகை ஐந்து பேரைக்கூட்டி
இல்லிட மமைப்பதற்கு இச்சணம் வருகுவாயே!

## தொண்டர் வசனம்

கேட்டி யோடி பெண்ணே இந்த மண்ணின் பெருமையை

ச. நங்கை: ஆம் சுவாமி வெகு மேலான புண்ணிய பூமிதான் சுவாமி.

தொண்டர்: ஆகையால் இவ்விடத்திலே மடங்கட்டுவோமா?

ச. நங்கை: அப்படியே செய்வோமையா சுவாமி.

தொண்டர்: அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா.

கட்டியம்: ஏனையா சுவாமி.

தொண்டர்: நல்ல வேலை தெரிந்த, சிற்ப சாத்திரங்கைவல்லிய மான பேர்களாய், ஐந்து சாதிக்காரரையும், அதி சீக்கிரத்தில் அழைப்பியும் பிள்ளாய் கட்டியக் காரா!

கட்டியம்: அப்படியே மகா பாக்கியமையா சுவாமி.

## பொது விருத்தம்

மயநூலில் விசுவ நூலில் வல்லமை யுள்ள ரெல்லாம்
இயல்பாகக் கொணர்ந்தே னென்று இசைத்திடக் கேட்டுத் தொண்டர்
நயமிகுந்தரனன்பர்கள் நல்லன்னம் பொசிப்பதற்கு
நியமியு மென்று கூற நேமகம் செய்கின்றாரே!

## பொது வசனம்

இந்தப் பிரகாரம் கட்டியக்காரன், ஐந்து சிற்பரையும் கொண்டுவர, அவர்களைப் பார்த்து சத்திரங் கட்டச்சொல்லி உத்தரவு கொடுக்க, அவர்களும் நேமகம் செய்தது காண்க.

## விருத்தம் பொது

சத்திரம் விஸ்தாரமாய் மய நூல் சிற்ப சாஸ்திரத்தின்படி
கணிதர் சமைப்பீரென்று
உத்திரவு கொடுத்திடவே சிற்பர் கூடி உண்டாக்கி வைக்க
வதில் ஓமம் சாந்தி
சுத்தி செய்து புண்ணிய கவசம் செய்தே நான்கு சுருதி
நூற்படிக் கிரகப் பிரவேசமாகி
பத்தியுடன் ஞான ஆசான் சொல் போல் படைப்பதற்கு
மனைவியுடன் பணி செய்தாரே!

## வசனம்

சத்திரங் கட்டி கம்மாளர் வைக்க, அதில் ஓமம் சாந்தி செய்து கிரகப் பிரவேசமாகி, அன்னங் கறிகள் உண்டாக்கி வைத்துத் தன் மனைவியுடன் அடியார்களுக்கு அன்னம் படைத்து வேலை செய்தது காண்க

## தொண்டர் விருத்தம்

அன்ன சத்திரத்தில் வந்து அமுதுண்ண ஆண்டி யோகி
சன்னாசி தவசி யோகி சங்கமர் ஆகமத் தோர்
அன்னியர் ஏழை பேதை அனைவரும் அமுது கொள்ள
என்னிடத் தழைத்துக் கொண்டு இச்சணம் வருகுவாயே!

## தொண்டர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா, சந்நியாசிரியர் தவசியர், சைவர், யோகியர் சங்கமர், சோகியர், அனைவர்களும் அமுது கொள்ளும்படி முரசறைந்து அனுப்பி வையும் பிள்ளாய் கட்டியக்காரா.

## கட்டியம் வசனம்

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி.

## விருத்தம்

கட்டியன் சென்று நாடி கடுகியே யூருர் தோறும்
பட்டணம் சோலைகாவும் பலபல விடங்களெல்லாம்
தட்டியே பறை யறைந்து சகலருமிப் போதே தான்
எட்டியே வந்தீரென்ன இறைந்தான் கட்டியன் தானே!

## வசனம்

யாரடா வெட்டியான்: (வெட்டியான்: ஏனையா சுவாமி) நம்முடைய எசமான் அன்னதானம் செய்கிறதாலே-எந்தச் சமயத் தாரெந்த விதமாய் அன்னம் கேட்பாரோ அந்தப்படி அன்னம் போடுகிறோமென்று தமுக்குப் போடும் சாம்பானே!

## கட்டளைக் கலிப்பா

பால் வெண்ணீறும் பரிந்தக்க மாலையும் புனைந்தின்பந்
தழைக்க
ஆல முண்ட அரனடித் தொண்டரே காலமே வருவீர்கள்
கடுகியே!

## தரு-21

**ராகம்: புன்னாக வராளி** **தாளம்: ஜம்பை**

தம்பிரான் எல்லோரும் வாருங்கள் அமுதுண்ணவே!
வெம்பிய பசி தணிய-சம்பா அரிசிச் சமையல்
கும்பியே குழைந்திடாமல்-இன்பமாய்ச் சமைத்ததனை
[தம்பிரான்...]

அன்புடனே சிறுதொண்டரு மனைவியொடும்
அன்ன தானம் செய்யவே நாடி
சம்பிரமதாய் மடப்பள்ளி தன்னில் போகியரைத் தள்ளி
இன்பமான பேரை உள்ளிருத்திச் சமைத்தது கொள்ள
[தம்பிரான்....]

கொத்தவரை பூஷனி பீர்க்குப் புடலைப்பாகல்-குமட்டி
சுரை யவரைக் காய் கத்தரி கருணை பலா
கடலை துவரை யெல்லாம் குத்துவாளவரை யெல்லாம்
குணமாய்ச் சமையலுண்ண [தம்பிரான்...]

அம்புவியோர் மெச்சும் மந்திரி சிறுத் தொண்டையர்
அமுது படைக்க சமைத்தன்புடனே உண்பதன்றி
அமுது படிக்காயிலை இன்பமாய் கொடுக்க வாங்கி
இஷ்டலிங்க பூஜை செய்ய [தம்பிரான்...]

## பொது விருத்தம

தம்பிரான் வருக திங்கள் சடாதரனடியா ரெல்லாம்
இன்பமாய் வருக வென்ன இசைத்த கட்டியன் சொற்கேட்டு

நம்பிய ஸ்தலங்கள் தோறும் நண்ணியங் கிருந்தோ ரெல்லாம்
அன்பரில் அன்பரானோர் அன்ன சத்திரம் வந்தாரே!

## பொது வசனம்

"தம்பிரானே வருக வருக! திங்களணியரனடியாரே வருக!" என்று கட்டியக்காரன் முரசறைய, வனங்கள், சோலை, தண்ணீர்ப் பந்தல், இப்படிக்கொத்த இடங்களிலே இருந்த தவசி பரதேசிகள் வருகிற விதம் காண்க.

## விருத்தம்

சடைமுடி நீறுங் காவிச் சட்டைகள் புனைந்து கையில்
தடி திரு வோடு லிங்க சாதனரக்க மாலை
முடிகளன் கரங்கள் தொட்டு முதல்வன் அஞ்செழுத்தை
யுண்ணி
நெடியருங் குறியராக நிறைந்துமே வருகின்றாரே!

## தவசிகள் தரு-22

ராகம்: புன்னாகவராளி — தாளம்: ஐம்பை

1. தவசிகள் வந்தார் அமுதுண்ண தவசிகள் வந்தார்.
கௌசிகன் முதற் கொண்டு காணாத தவங் கண்டு
சிவ சமய மெய்யென்று தேவாரந் துதி கொண்டு
[தவசி...]

2. சங்கம ரூபம் புருபம் கங்காள பாவம் புனைந்து கொண்டு
செங்கையில் திருவோடு மிடக்கைப் புத்தகத்தோடு
தங்கு மாத்திரைக் கோலோடு மங்கை பாகனையே நாடும்
[தவசி..]

3. யாரடா அழைத்தார் பறை யறைந்து கூறடா வினித்தான்
அடியருக்குச் சோறிட்டுத் தவம் பெற தொண்டர்
தமை யழைத்து
கோரிட்ட தெவ்விடம் கூறடா வெனக் குதித்து [தவசி...]

4. சுந்தர வேடம் புனைந்திட்டு மந்திர பாடம் நினைந்திட்டு
சந்திர சடாதர சங்கரா வென்றெட்டு
மந்திரந்தனைத் தொட்டு மாலிகைக் கைக் கொண்டு
[தவசி....]

5. சோகியர் கூட்டம் பரதேசத்தராகிய ரீட்டம் மிகுந்திட
பாகீரதி நாட்டுப் பாஷை இந்துஸ்தானந் தொட்டு
போகியாத ணங்கை விட்டுப் போசனச் சாலையைக்
கிட்டி [தவசி ....]

## கட்டியக்காரன் விருத்தம்

ஆசிரியர் குலத்தில் தோன்றி அரசர் மந்திரியாய்ப் பின்பு
நாரி யோர் பாகனன்பில் நலந் திருத் தொண்டரானோய்
கூறியபடியே வேத குலத்தார் சைவத்தோர் சங்கர்
சேரவே நிறையாய் வந்தார் தேவரீர் பார்த்திடீரே !

## கட்டியக்காரன் வசனம்

சரணம் சரணமையா சுவாமி பிராமண குலத்திலுதயஞ் செய்து மந்திரியாகிய பின்னர், அரனடித் தொண்டராகிய எசமானே ! தேவரீர் சொன்னபடியே, பரதேசி மார்களெல்லோரும் வந்து நிறைந்திருக்கிறார்கள், பாருங்களையா சுவாமி!

## மந்திரி விருத்தம்

செகம்புகழ் தொண்டர் தங்கள் திருவடி தனையே நாளும்
அகமகிழ்வுடனே யாமும் அழலாடி யென்றே எண்ணி
சுகமுடனர்ச் சித்தேத்தித் துதித்திடில் நமது துன்பம்
மிகவிடர் செய்திடாது மெல்லியே பணிவோம் வாராய்:

## மந்திரி வசனம்

அடி வாடி பெண்ணே! வந்த பரதேசிமாரை கைலாச பதியே யென்று மனமும் வாக்கும் ஒருமையுடனே பணிந்தோமே யானால், நம்முடைய பழவினைகள் நீங்குமடி பெண்ணே!

## நங்கை வசனம்

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி.

## தொண்டர் தரு—23

ராகம்: தாளம்:

1. வஸ்துவென்றெண்ணி பக்தர்கள் தன்னை வணங்குவோம்
வா பெண்ணே—நல்ல
மைந்தனையே பெற சிந்தையிலே நினைந்தாலருள்
பெறலாமே!

2. அண்டர்கள் முதலோ ரெண்டிசைப் பாலோர் விண்டுவே முதலானோர்—அரன்
தொண்டர்கள் பெருமையை கண்டிலரருமையாய் ஒண்டொடியே கேளாய்.

3. வஞ்சியே மாதே நெஞ்சகமீதே சஞ்சல நினையாதே —அன்பர்
செஞ்சரணத்தையே நெஞ்சிலிருத்தியே வஞ்சனை யொழிப்போமே.

4. ஆதலினாலே மாதே மென்மேலே சீதளப் புனலாலே —அன்பர்
பாதமே பொழிந்து தாதலர் சொரிந்து பணிகுவோமினி —நாமே

5. சந்தன மணிந்து மந்திரம் நினைந்து சங்கரனடியார்க்கு— தூபம்
சாதித்துத் தீப நிவேதித்துக் கையால் ஆராதித்துத் தொழுவோமே!

6. பத்திரம் வில்வம் மெத்தவே சொரிவோம் பக்தர்களடி மீதே—நாம்
புத்திரன் பெறவே எத்திசை புகழ சித்தமுமகிழ்பெறவே.

## தொண்டர்—விருத்தம்

கட்டியக்காரா கேளாய் கன்னியும் நாமுமாக
இட்டமாயீ சனன் பரிரு சரணங்கள் பூசை
சட்டமாய்ச் செய் தோம் நீயும் சந்தன மானுமாக
பொட்டெனவே அமுதவர்கள் பொசித்திடப் படைப்பிப்பாயே!

## தொண்டர் வசனம்

அகோ வாரும்பிள்ளாய் கட்டியக் காரா ! நாம் அடியார்களுக்கு பூஜை செய்தோம். நீயும் சந்தன நங்கையும் அமுது காய்கறிகள் படையும் பிள்ளாய் !

### கட்டியக்காரன்

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி !

## மந்திரி விருத்தம்

முறைமுனிவோரே மற்ற மாதவரானோரே யான்
சிறியவனுங்கள் பாதம் தெண்டமே செய்தேன் - தேவர்
குருபரன் பூசைசெய்து கோபமில்லாமல் அன்னம்
குறைவர உண்பீர் நாங்கள் குழந்தையைப் பெறுக வென்றே!

## மந்திரி வசனம்

மறைமுனிவர் முதலாய் சகலருக்கும் தெண்டம் செய்கிறேன்! என் குறை யகல, குழந்தையைப் பெறவென்று ஆசீர்வதித்து, குருபூசை செய்து, கோபதாபமில்லாமல், திருப்தியுடனே, போஜனம் செய்யுங்கள். உங்கள் பாதம் நமஸ்காரம் செய்கின்றேன்!

## சம்பந்தர் விருத்தம்

தரை யிருளலக ஞான சைவ சீலங்க ளோங்க
மறையவர் சைவரான மாதவர் சூழ முத்து
நிறை சிவி கையினிலேறி நீறு மஞ் செழுத்து மோங்க
சிரமுத்துக் குச்சிலங்க திருஞான சம்பந்தர் வந்தார்:

## தரு-24

**ராகம்: மத்யமாவதி** **தாளம்: ஆதி**

திருஞான சம்பந்தர் வந்தார் - சிவனடியவர்
கடிமலரடி மிசை சொரிந்திட!

1. பரை யானாள் முலையுண்டு குறையா அருளைப் பூண்டு
மறையவர் அரகர மாதேவ வென்றிட —[திருஞான]
2. சத்தீஸ்வரனை மனம் நாடி மிகு சமணிருளகல வேதபரியந்
தழைக்கவே

பத்திப் பண்ணோசைகளைப் பாடி-நற்பலகலை தெரிதரு
மடியார்கள் புடைசூழ
எத்திசைக்கும் முரசு வைத்த சிறுத் தொண்டரை நத்தி
அவர்க்கு நல்ல
புத்திரன் பெற அருள [திருஞான....]

## விருத்தம் பொது

வந்தவர் தாளைப் போற்றி மங்கையுந் தானுமாக
சந்தமாரடி பூசித்துச் செஞ்சாலியனும் படைத்து

தன்றிருக் கரத்தினாலே தாவென்று பரிகலங்கள்
விந்தையாய் எடுக்க வேண்டி விரும்பியே வருகின்றாரே!

## தரு - 25 தொண்டர்

**இராகம்: அசாவேரி** **தாளம்: ஆதி**

பரிகலமே எனக்குத் தாங்களையா-பாலனைப் பெறுக
வென்று நீங்களையா

1. அறுசுவை யொன்றாகக் கூட்டி ஐந்து பிடி செய்து நாட்டி
ஆலமுண்டவரைச் சூட்டி ஐந்து பூத பலி யூட்டி
ஐயரே சம்பந்த மெய்யரே-ஐயா [பரிகலமே....]

2. புத்திரனில்லாமலே பூமிதனில் மென்மேலே
புண்ணியங்களிலே அன்னதானம் பெரிதானதாலே
பொருந்தச் செய்யும் தரும் பாக்கியம் நீங்கள்
போசன முண்க வெகு யோக்கியம் புங்கவரே-வைதீக
சங்கமரே!
[பரிகலமே...]

3. சுந்தர வேடம்பூண்டு எந்தைபோல் உருக்கொண்டு
அந்தமாய்ச் சிவயோகம் பூண்டு வந்த சம்பந்தரேயின்று
சோபமெல்லாம் அற நண்ணும் தாபமெல்லாந்தீர உண்ணும்
சுத்தமுடன் உண்ண-பத்திபெற-ஐயா. [பரிகலமே.]

4. உருத்துடன் கச்சி தன்னில் கருத்தாய் வந்தென்னை யுன்னி
சரித்திரங்கள் தனைச் சொன்னீர் பொருத்தமுடனே நண்ணி
உண்மையுடனுனக்குத் தொண்டே-மிகு
தன்மையாகவே யுணக்கண்டே-தேவருண்ட
அன்னந் தன்னில் உண்ண தொண்டனுக்கே ஐயா
[பரிகலமே...]

5. சங்கமர் கோஷாயிகள் லிங்கபூசை செய்வோர்கள்
தருமம் செய்த பலன்கள் வருமென்றதற்குத் தாங்கள்
சங்கத் திரளைச் கூட்டி யிங்குமே - பங்கயப் பதங்காட்டி
எங்குமே என் - சஞ்சலங்கள் தீர இன்சொலுடன்-ஐயா—
[பரிகலமே....]

## சபை விருத்தம் பொது

சம்பந்தர் தாளைப் போற்றிச் சஞ்சலம் தீரவின்று
தர்மஞ் செய்பலன் பலிக்கச் சந்ததியுண்டா மென்று
நம்மிறை பாலன் சொல்லியேகின பின்னும் அன்னம்
நிர்மிதப் படியே செய்து நிதகாலம் வருகின்றாரே

## நங்கை விருத்தம் பொது

**ராகம்: கேதார கௌளம்**

இப்படி நாள்கள் தோறும் எவர்களுக் கமுதிட்டன்பாய்
ஒப்புடனுப சரித்துஉண்கு முன் பரிகலங்கள்
செப்பமாய் எடுத்துண்டந்த சிவனடியா ரன்பாலே
சொற்படி கெற்பங் கொண்டு சுகமுடன் வருகின்றாளே!

## வசனம்

இந்தப் பிரகாரம், பரதேசி மார்களுக்கு அன்னமிட்டு, பரிகலம் எடுத்துண்ட பலத்தினாலே, கெர்ப்பமாகி வருகிற விதம் காண்க.

## தரு - 26

**ராகம்:** **தாளம்:**

வந்தாளே கெர்ப்பத் துடனே – வெண்காட்டு நங்கை
விந்தையாக கெர்ப்ப மானாள் சொந்த சன மகிழ
செந்தாமரை முகங்கள் தேகமெல்லாம் வெளுத்து
[வந்தாளே . ]

2. செப்பு முலைகள் கருத்து அரிதாகிய சிற்றிடை வயிறு பெருத்து
இப்புவி மாதர் பொறுத்து–கைலாகுதர–ஏக்கமும் தூச்சமுறுத்து
நைப்புள்ள பால்கற்கண்டு நாரியர் கொடுக்க வுண்டு
மெய்ப்புடனுறுதி கொண்டு—மெல்ல மெல்ல நடந்து கொண்டு
[வந்தாளே.... ]

3. திங்களொரு பத்துமே சென்று மனதுக்கான தித்திப்புப் புளிக் கசப்புண்டு
தங்கு மசக்கைக்கு அளவின்று ·பையத் தள்ளாடி தனி மூச்சு சோபமுங் கொண்டு

துங்க மளந் தள்ளாடி சுந்தரேசரைக் கொண்டாடி
மங்கையருடன் கூடி மளது வெவ்வேறாய் நாடி
[வந்தாளே....]

4. அன்னம் பாலது செல்லாமல் மொழிதளர்ந்து அந்தரங்கம் பொய் சொல்லாமல்
மன்ன னுரை வேறில்லாமல் வெண்காட்டு நங்கை மாதர் பொறுப்பில்லாமல்
என்னமோ ஒரு வகையாய் இருக்குதெனத் தோகையாய்
மின்னிடையார் மேல் பகையாய் விளம்பிய மெத்த தகையாய் [வந்தாளே....]

## பத்தியம்

என்னடியம்மணி என்னமோ தோணுது இருவிழி செவிகளும் இருண்டு மேகாணுது
கன்னமும் தோள்களும் கன கடுப்பேறுது கைகளும் அடிவயிறும் கன வலியேறுது
அன்னையும் இல்லையே ஆண்டவன் சோதனை அங்கமெல் லாம் வலியாகுதென் சொல்லுவேன்
மன்னவன் தொண்டர்க்கு வரிசையதாகவே வரச்சொல்லிச் சொல்லடி வலி தாளுதில்லையே!

## வசனம்

அடிவாடி பெண்ணே சந்தன நங்கையே! என் சரீர மிருக்கிறது, சுவாதீனமில்லை. கெர்ப்ப வேதனை அதிகமா யிருக்கிறது. தொண்டனாருக்கு என் துயரத்தைச் சொல்லடி அம்மா!

## சந்தன நங்கை வசனம்

அப்படியே சொலுகிறேனம்மா தாயே!

## சந்தன நங்கை விருத்தம்

ஐய மொன்றில்லா வேத அதீதனை யுணர்ந்து சைவம்
மெய்யென மறை யோர்க்கெல்லாம் வெள்ளி போல் விளங்குந் தேவே
ஐயனே உமது தாரம் அங்கம் புண்ணாகுதென்று
மையலாய் வயிற்றில் பிண்டம் வருத்தத்தை யறிகுவீரே!

### சந்தன நங்கை வசனம்

சரணம் சரணமையா சுவாமி! உம்முடைய பெண்ஜாதி வயிறு வேதனைப் படுகிறாள், மருத்துவச்சியை அழைப்பியுங் களையா சுவாமி!

### தொண்டர் வசனம்

நல்லதடி சந்தனமானே! மருத்துவக் கிழவியை அழைப் பிக்கிறோமடி பெண்ணே!

### தொண்டர் விருத்தம்

ஆசிரைப் பணிகள் கேட்டு அடியவர்க் கேவல் செய்யும்
நேசமாங் கட்டியக்கார நிபுணனே சொல்லக் கேளாய்
வாசமாய் எமது தாரம் வயிற்றினில் பிண்டம் நீங்க
மேசிடும் மருத்துவச்சிப் பெண்தனை யழைப்பிப்பாயே!

### தொண்டர் வசனம்

அகோ வாரும பிள்ளாய் கட்டியக்காரா! நம்முடைய பெண்சாதி வயிறு வலிப்படுகிறாளென்று, மருத்துவக் கிழவியை அழைப்பிவையும் பிள்ளாய் கட்டியக் காரா!

### கட்டியக்காரன் விருத்தம்

மருத்துவம் பார்த்து நல்ல மங்கையர் வருத்தம் நீக்கும்
கருத்தினையுடைய மூப்பில் கை கண்ட மருத்துவச்சி!
சிறுத் தொண்டர் மனைவியாரும் செல்வரைப் பெறவே நொந்து
வருத்தங்கள் நீக்க நீயும் வருகுவாய் சுருக்கில் தானே!

### கட்டியக்காரன் வசனம்

அடிவாடி மருத்துவச்சி! எங்கள் சிறுதொண்ட நாயனார் பெண்ஜாதி வயிறு வலிப்பதால் அதிசீக்கிரத்தில் அழைத்து வரச் சொன்னாரடி யம்மா.

### மருத்துவச்சி வருகிற விருத்தம்

ராகம்: தோடி

கடல் நுரை போலக் கூந்தல் கசிந்த சீழ்க் கண்ணு மூக்கும்
வடி செவி தளர்ந்த பல்லும் வாய்நீரும் வரவுமில்லாத

உடல் வளைந்து தடி கை கொண்டு உலகினில் மருத்துவம் பார்க்க
மடமை கொள் வசனத்தோடு மருத்துவக் கிழவி வந்தாள்:

தரு—27

ராகம்: தாளம்:

1. மருத்துவக் கிழவி வந்தாள் மாதர் வருத்தம் நீக்கும்
மாதென்று மெனக்கு நிகர் ஏதென்று
பொருத்த மாருடம் பார்த்தேன் பெறுவதாண் பிள்ளை யென்று
பேசியே கை வீசியே [மருத்துவ....]

2. சுரைப் பிஞ்சு வற்றல் போலத் தொப்பை முலையுடைய சுமையாள்....
பெரிய அம்மையாள் தலைமாது முடத் தெங்கின் சாயல் போல் கழுத்தினான்
சாணுள்ளே கூனுமேனி யாள்—தடிக்கம்பிலும் கைகால்கள் தங்காமல்
நடுக்கிடும் தன்மையாள் ஒட்டடைப் பெண்மையாள் [மருத்துவக்...]

3. வையகத் தேடுபட்ட வாழக் கூழக்கலப்பைபோல வருந்தியே
நடைதிருந்தியே—மெய்யும் திரைந்த மேனி வெடவெட வெனக்காகம்
போல விளம்பியே சத்தம் வளம் பெற
இத்தலத்துள்ளோர் எந்தனால் பிள்ளை பெற்றோர்
எத்தனை என்றுரைத்துமே [மருத்துவ....]

4. சிறுத் தொண்டர் துயர் தீர்ப்பேனானென்று சொல்லிச் சிரித்துமே
கூந்தல் விரித்துமே—வந்தாள் வெண்காட்டு நங்கை
வருத்தங்கள் தீர்ப்பேனிப்போ மங்கையே அஞ்சாதே நங்கையே

## மருத்துவக்கிழவி விருத்தம்

மருத்துவக் கிழவி வந்து மங்கையே அஞ்சாதே உந்தன்
வருத்தங்கள் தீர்ப்பேனீயுமயங்கிட வேண்டா மென்றே
உரைத்திட நங்கை யாரும் உறுதி கொண்டருகிருக்க
கருத் துயர மதிகமாகிக் கலங்கியே புலம்புவாளே!

## மருத்துவக் கிழவி வசனம்

அடிமங்கையே வெண்காட்டு நங்கையே அஞ்சாதேயடி யம்மா.

## வெண்காட்டு நங்கை வசனம்

அடி மருத்துவச்சி, அடி சந்தன மானே! என்னருகினில் இருங்களடீ - என் வருத்தம் பொறுக்கப்படவில்லை - என்னா செய்வேனடி பெண்ணே!

## தரு-28

ராகம்: தாளம்:

1. என்னா செய்து வேனடி மானே பெண்ணே
இந்த வேதனை தனக்கு நானே—பெண்ணே/
மின்னே மின்னரசே மேனி வேருவை கொண்டுளம்
சோருது பாரிதற்கு [என்னா....]

2. தலையு நெரிக் கண்வலி காணுதே எனக்கு
தாகவிடாய் மிகத் தோணுதே
குலையிலே எரிவது ஆனதே திரேகம் கொதித்திடும்
சுரத்தாலே நாணுதே [என்னா....]

3. அங்கமெல்லாம் புண்ணாய் நோகுதே யம்மா
அடிவயிறு குத்தல் ஆகுதே எனக்கு
மங்கையரே நடைவாடுதே கரு மரரேறுதே
மனம் வீறேறுதடீ [என்னா...]

4. கொங்கை பசந்து முகஞ் சோருதே - அடிகொண்டு
வெள்ளுறியது மீறுதே
மங்கையரே மடமாதே யென்னுட வருத்தங்கள் தீர்க்கவே
ஒருத்தருமில்லையே [என்னா...]

## நங்கை விருத்தம்

ராகம்: முகாரி

வருத்தங்கள் மிகுந்தெனக்கு வாட்டுது துயரம் தீர்க்க
ஒருத்தரு மல்லையே ஐயோ ஒண்டொடி மாதே பக்கம்
இருத்தி இவ்வருத்தம் நீங்க இன்பமாய் வசனத்தாலே
திருத்தியே குழந்தை பூமி சாதகம் செய்குவீரே!

## வசனம்

அடிபெண்ணே சந்தன நங்கையே, அடி மருத்துவச்சி என்னை இறுத்தி இந்தத் துயரம் நீர்க்க உங்களால் ஆக வில்லையே என்னா செய்வேணடியம்மா?

## தரு-29

ராகம்: தாளம்:

1. அம்மம்மாரே நான் என் செய்வேனடி
ஆச்சிமாரே நான் என் செய்வேனடி
வம்மென்று உனைப்பெடுக்கு செம்மறத் துள்ளே குழப்பி
சும்மா யிராதே நீங்கள் பொம்மையைப் பிடியுங்கடி
[அம்மம்....]

2. அடிக்கடி விசை கொண்டு கிளப்புதே உள்ளே
அழுத்தியே அரை யெல்லாம் துளைக்குதே—பெண்ணே
ஒருத்தரும் இல்லை இந்த வருத்தங்கள் தீர்க்கவென்று
கர்த்தன் சிறுத் தொண்டருக் கென் கரித்திரங்களைச்
சொல்லவே [அம்மம்...]

3. பொறுக்கப் போமோ அடி மானே பெண்ணே
பொறுக்கப் போமோ ஒகோ போகுதே என்றுயிர்
ஒறுக்கு தில்லையே இந்த நறுக்கு வலி பொறுக்க [அம்மம்...]

4. சுற்றிப் பிடியுங்கடி பற்றி யணையுங் கடி
ஏற்றி எனைத் தொட்டியில் வைத் தாட்டடியே ஓகோ
குருத்து விரியுதடி கூ கூ கூ
அறுத்தது போல ஆ–ஆ– ஆ
வருத்தி யுயிர் போகுதே .......... [அம்மம்மாரே]

5. குழந்தை பிறந்ததுகை கும்பிட்டுத் தலை கீழே
விழுந்தது சிரசுதயம் வெளியில் புறப்பட்டுதடி
அம்மம்மாரே நான் பிழைத்தேனடி–ஆச்சிமாரே
நான் பிழைத்தேனடி

## விருத்தம்

குழந்தை தான் பிறந்த போதே குவலயம் புகழ வேற்றிப்
பழம் பொருள் தனையே வாழ்த்தி பக்தர்கள் பதத்தை ஏற்றி
தளர்ந்தவர்க் கெல்லாம் சொர்ணம் சர்க்கரை வழங்கித் தானம்
பழந்தரு சுவை போல் கண்ணால் பார்த்துமே மகிழ்கின்றாரே!

## பொது வசனம்

குழந்தை பிறந்தவுடனே, கண்ணினால் பார்த்து, சந்தோஷத்துடனே, சங்கரனை வாழ்த்தி, பிராம்மணர்களுக்கும் மற்றுமுள்ள பேர்களுக்கும், சொர்ணதானம், சர்க்கரை தானம், பல தானங்களைச் செய்தார்.

## தொண்டர் விருத்தம்

பேசிய வார்த்தை தன்னைப் பேணுங் கட்டியனே கேளாய்
ஈசனார் அருளாலே ஈன்றதோர் மைந்தனுக்கு
நேசமாய் நாமகரணம் நேமிக்க மறையோர் தம்மை
வாசமாய் நமது பக்கம் வருக நீ அழைப்பிப் பாயே!

## தொண்டர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா! நம்முடைய குழந்தைக்கு, நாமகரணமிட்டு, சாதகங்கணிக்க, சோதிடரை அனுப்பி வையும் பிள்ளாய் கட்டியக்காரா!

## கட்டியக்காரன் வசனம்

அப்படியே அழைத்துக் கொண்டு வருகிறேனையா சுவாமி!

## கட்டளைக் கலிப்பா

**ராகம்: தோடி** **தாளம்: ஜம்பை**

அய்யமாரே! அருமையாளரே! அண்ணலே! எங்கள் அருமைச்
சிறுத் தொண்டர்-தையலாள் பெற்ற தனயர்க்குச் சாதகம்
சம்பிரமத்துடன் தானே கணிதங்கள் செய்யவே வரச்
சொன்னார்கள் சீக்கிரம்.
தேவரீர் வரவேணும் நமஸ்காரம் செய்கிறேன்
உங்கள் சீடர்களோடுமே சிறுத் தொண்டர்மனை சீக்கிரம்
வாருமே

## கட்டியக்காரன் வசனம்

அகோ சரணம் சரணமையா சிவ சன்மாவாகிய சுவாமி சோதிடரே! சிறுத் தொண்டனார்க்கு, குழந்தை பிறந்த சாதகம் பார்ப்பதற்கு, தேவரீரை அழைத்து வரச் சொன்னார்களையா சுவாமி.

## சோசியர் விருத்தம்

சதுர் மறை அங்க மாறும் சைவமே முதலாயுள்ள
பதினெண் புராணங்க ளோடு பல்கலை யாகமங்கள்
இதமுடனறிந்து சோதிட விதிகளிதங்கள் செய்யும்
அதிவிதி கணித சாஸ்திரி அன்புடன் வருகின்றாரே!

## தரு-30

**ராகம்: பந்து வராளி** **தாளம்: ஜம்பை**

1. சோசியர் வந்தனரே-கணித-சோசியர் வந்தனரே!
மாசிலா வேதங்கள் படித்தும்—ஆறங்கமெலாமாராய்ந்
தெடுத்தும்
பூசுரர் என்ற பேர் படைத்துக் கையில் புத்தகம்
பஞ்சாங்கம் பிடித்து
[சோசியர்...]

2. ஆகம சாஸ்திர கலைக்ஞான யோகமும் சூத்திரமும் மிகுந்த
நாகர் பாஷையும் தெரிந்து அதில் நாலாறு மந்திர மறிந்து
சங்கை அனந்த மாய்த் தெரிந்து சிவ சன்மா எனப் பெயர்
பகர்ந்து [சோசியர்....]

3. மந்திர சாஸ்திரமும் தெரிந்து தந்திர கோகர்ண மறிந்து
சிந்தையிலெண்ணிய துரைத்து நல்ல செல்வர்க்கு
சாதகங் குறித்து
வந்த மறையோரை அழைத்து மாமறையாசீர் வாதங்
கொடுத்து [சோசியர்....]

4. சோம னிடையிலங்க முன்னூல் ஓமென மார்பிலிலங்க
சிவந்த தாமரை மாமணி காதில் பஞ்சவடருத்ராட்சஞ்
சிரசில் நாமகள் வாழும் நாப்புறத்தில் மந்திரங்கள் நவின்று
காயத்ரியை விரித்து [சோசியர்...]

## சோசியர் வசனம்

ஸ்ரீ முக்தி பஞ்சாக்கர முதல்வனைப் பணியும் திருத்தொண்டனாரே! நமஸ்காரம்

## தொண்டர் வசனம்

அப்படியே நமஸ்காரம் சோசியரே. நம்முடைய குழந்தைக்கு சாதகம் பார்த்து பெயரிட வேணும் சோசியரே!

## விருத்தம்

வந்த சோசியர் அன்பாக வரை கொண்டு ராசி பார்த்து
தந்திரக் கிரக நாட்கள் சார்ந்திடும் திதியும் யோக
அந்தமாங் கரணத்தோடு ஐந்தங்க மோரரை பார்த்து
இந்த சாதகனுக்கான பலனெல்லாம் இசைப்பேன் தானே!

### வசனம்

அகோ வாரும் பிள்ளாய் கட்டியக் காரா! சிறுத்தொண்டனாருக்குக்குழந்தை பிறந்த சாதகம் பார்ப்பதற்கு, பலகை பல்பம் கொண்டு வாரும் பிள்ளாய்!

### சோதிடர் தரு—31

**ராகம்: சங்கராபரணம்** **தாளம்: ஐம்பை**

1. சிறுத் தொண்டரே கேளும்—சாதகபலன்
அருள்க் கொண்டு மிக வாழும்
கரைக் கண்டனருள் நன்று இருக்கின்றதால் இன்று
பிறக்கின்ற மகன் என்றும் இருக்கின்ற திலன் கண்டாயே
[சிறுத்]

### வசனம்

கேளும் சிறுத்தொண்டனாரே! இன்று பிறந்த பிள்ளைக்கு, கைலாசபதி கிருபை இருப்பதினாலே, என்றும் இறக்காமல், சாரூபத்தில் இருப்பான் தொண்டனாரே!

2 ஜென்மத்தில் நாலேழிலே பத்திலரசன்
சிறப்புற்றிருக்க வூழிலை—என்பது போல
பொன்னவன் நாலிலே பூர்த்தியாய் இருப்பதாலே
இம்மையிலிவனாலே எல்லாம் செயம் மென்மேலே.

### வசனம்

இன்னமும் கேளும் சிறுத்தொண்டனாரே! ஜென்ம லக்கினத்திலாவது அல்லது நாலாமிடம் ஏழாமிடம், பத்தாமிடம் இப்பேர்ப்பட்ட கேந்திர ஸ்தானங்களில், அரசனாகிய வியாழ பகவான் இருந்தால், அவர்கள் சிரஞ்சீவியாய் இருப்பாரென்று கணித நூலில் சொல்லியபடி, இந்தச்

சாதனுக்கு நாலாமிடத்திலே வியாழ பகவான் ஆட்சி பெற்றிருப்பதினாலே இவனாலே நீங்கள் அனைவரும் பேறு பெறுவீர்கள் தொண்டனாரே!

2. நாலில் ஒன்றில் புதனும் பொன்னோடு புகராலோனிருந்தால்
சுதனுக் காயிரமென்று
நூலோருரைத்தபடி நுவலுவேன் வாக்கியப்படி
பாலனுக்கும் அப்படி பார்த்தேன் கணிதப்படி
—[சிறுத்தொண்ட

வசனம்

இன்னமுங் கேளும் சிறுத் தொண்டனாரே! ஜென்ம லக்கினத்திலாவது, அல்லது நாலாமிடத்திலாவது, சுக்கிரன், புதன், ராஜா சந்திரன் இவர்கள் இருந்தால், ஆயிரம் வய்தென்று வாக்கிய கணித நூலில் சொல்லியபடி, இந்த சாதகனுக்கு நாலாமிடத்தில் சுக்கிரன் புதன் வியாழன் சந்திரனிருப்பதினாலே யாதொரு கலக்கமுமில்லாமல் சுகபுத்திரனாய் இருப்பான் தொண்டனாரே!

4. ஒன்றேழில் பருதி செவ்வாய் சனியிராகு நின்றிடில்
குருதி கௌவ மறிப்பனென்று எண்ணர் வாக்கியம் போலே
நின்றதினால் வாளாலே—மண்ணிலிறந் தன்னாளே
நண்ணுவான் பழமை போலே —[சிறுத் தொண்ட....]

வசனம்

இன்னமுங் கேளும் சிறுத்தொண்டனாரே! லக்கினத்திலாவது அல்லது ஏழாமிடத்திலாவது, செய்வாய், சூரியன் சனி இராகு இருந்தால், வாளினால் அறுப்புண்டு இறப்பானென்று எண்ணர் வாக்கியமாகிய கணித கீதையில் சொல்லியிருந்த படிபோலே, இந்த சாதகனுக்கு ஏழாமிடத்திலே, செவ்வாய் சூரியன் சனி இராகு இருப்பதினாலே வாளாயுதத்தினாலே அறுப்புண்டு, மறுபடியும் அரனருளினாலே பழைய படியே சுய உருவைப் பெற்றிருப்பான் தொண்டனாரே!

5. சிவனருளாலே வந்த சேயிக்கு சீராள னென்று மேன்மேலே
தருமப் பெயரை வைத்து சகலர்க்கும் பூரி வஸ்திரம்
நிருமிதப் படி நித்தியம் நீ செய்வாய் மனம் வைத்து
—[சிறுத்]

## விருத்தம்

பாலன் சாதகத்தை பார்க்கில் பரமனுன்னிடமே வந்து
கோரிய வரங்கள் நன்றாய் கொடுப்பார் போல் இருக்குதய்ய
கால கண்டனையன் பத்திக் கூறானாயிருப்பான் பின்னும்
யேலவே வாளாலற்று யிருப்பதும் நன்றே காணே.

## வசனம்

இன்னமும் கேளும் சிறுத்தொண்டனாரே! சிவனுடைய கிருபையினாலே பிறந்த பிள்ளைக்கு 'சீராளன்' என்று நாமகரண மிட்டு சகல பேருக்கும் பூரி வஸ்திரங் கொடுத்து விரை தானம் செய்யும் தொண்டனாரே!

## தொண்டர் வசனம்

அகோ வாரும்பிள்ளாய் கட்டியக்காரா! சோசியருக்கு பூரி வஸ்திரங் கொடுத்து அனுப்பும் பிள்ளாய் கட்டியக்காரா.

## கட்டியக்காரன் வசனம்

அப்படியே கொடுத்தனுப்புகிறேனையா சுவாமி

## விருத்தம்

திருவுறை மாரன் போலே சீராளனென் றெல்லோரும்
ஒரு மொழியாகச் சொல்லு மோதையும் முவரி போல
வரும் பெரு மமதை பொங்க மார்யினில் வயிற்றில் தாங்கி
தருமனாய மகனே என்று தாலாட்டத் தொடங்கினாளே!

## தரு - 32

**ராகம் : கானடா** **தாளம் : ஆதி**

ராரி ராராரோ ராரிரரோ.

1. பாரி லன்ன தானத்தால் வந்துதித்த
பாலனே கண் வளராய் [ராரி ராரோ....]

2. மாத்தியர் தன் குலத்தில் வந்துதித்த
மந்திரி சிறுத் தொண்டர்க்கு வந்துதித்த
கோத்திரம் விளங்க வந்த நான்பெற்ற
குழந்தையே கண் வளராய் [ராரி ராரோ....

3. சாற்றிய மாமறையில் ஆராய்ந்து
தர்மஞ் செய்த பலத்தால் வந்துதித்த
நாற்றிசையோர் போற்ற வந்த நுளும்
நாயகா கண்வளராய் [ராரி ராரோ]

4. நெஞ்சங் கலங்கி யிந்த உலகத்தில் நின்றலைந் தோமடா முன்
அஞ்ச லென்றெங்களையே காக்க வந்த ஐயனே கண் வளராய்
[ராரி ராரோ]

5. பிள்ளையில்லா மலடா யிருந்து - நாங்கள் - பெருந்தவம் செய்தவெங்கள்
உள்ளமெலாங் குளிர வந்தருளு முத்தமா கண்வளராய்
[ராரி ராரோ]

6. பாலன் பெறவேண்டி பரதேசி பரிகலத் தாலே யின்று
மால் போல் வடிவு கொண்டு வந்துதித்த மைந்தனே கண்வளராய்
[ராரி ராரோ]

## விருத்தம்

ராகம் : காம்போதி

தாலாட்டி எடுத்து நீர்கள் தானாட்டித் தொட்டிலேற்றி
சீராட்டிக் கணவரோடு சிறுவனைப் புகழ்ந்து கொண்டு
காலாட்டிக் கைகளாட்டி கன்னி சந்தன மான் கூடி
தாலாட்டி மகிழ்ந்து தங்கள் தனயனை யாட்டினாரே!

## கொச்சகம்

ராகம் : அரிகாம்போதி

1. கங்கை பரவும் புவியான் காடவர் கோன் மந்திரியார்
தன் குலமே யாளவந்த தனயனே கண் வளரீர்.

2. திங்களணியுஞ் சடையார் சீரடியார் தன்னருளால்
இங்கென் வயிற்றுதித்த இன்பமே கண் வளரீர்.

3. அங்கை மழு மானேந்தும் அத்தனருளா லெமக்கு
திங்களொளி போலுதித்த சீராளா கண் வளரீர்.

## கட்டளைக் கலிப்பா

வெங் கய முரித்த கித்தர் மெல்லடியன்பர் பாதம்
நங்கையும் தொண்டர் போற்ற நற்றவப் பயத்தால் வந்த
தன் குழவியையே யந்த சந்தன மானிடத்தில்
இங்கிதை வனர்ப்பா யென்று ஈந்திட வளர்க்கின்றாளே!

## பொது வசனம்

கரியை உரித்த கடவுளருடைய கிருபையினாலே பிறந்த குழந்தையை, சந்தன நங்கை யினிடத்திலே ஒப்புவிக்க, அவளும் அந்தக் குழந்தையை வளர்த்தது காண்க.

## கட்டளைக் லிப்பா

ராகம்: தோடி தாளம்: ஜம்பை

சங்கரனருளாளீன்ற சேயிக்குத் தாயும், தந்தையும்
சந்தன மானிடம் உன்கையிற் பிள்ளைக் கோரைந்தாண்டா
னதால், ஓதவைப்பதற் குண்மையுடனீயும் இங்கு
தோழர்களோடு இணக்கமாய் எம்மிடம் ஆழையென்று
இசைக்குமுன் நங்கையே எந்த நாயனே என்றந்த
நங்கை செல்வனையே வர நண்ணினாள்.

## நங்கை வசனம்

அடி சந்தன நங்கையே குழந்தைக்கு வயது ஐந்து ஆனதால் ஓத வைக்க வேண்டிய படியினாலே அலங்கரித்து அழைத்து வாடி பெண்ணே.

## சந்தன நங்கை வசனம்

அப்படியே மகா பாக்கியமம்மா தாயே.

## சீராளன் விருத்தம்

நதிமதியு மருகுடனே கடுக்கை தும்பை நாக மெருக் கூமத்தம்
புனைந்த ஈசன்
துதியதனால் செய்த தர்மம் துலங்க இந்து தோன்றுதல் போல்
சீராளன் தோழரோடு
அதி விரத சுரதலய குயில்போல் பேசி ஆடை ஆபரணங்கள்
அணிந்து பூர்ண
மதியிது வென்றுலகிலுள்ளோரேத்தக் கொஞ்சி வந்தான்
சீராளன் மனமகிழ்ந்துதானே

## தரு-33

ராகம்: மத்திமாவதி தாளம்: ஆதி

சிங்காரமாகவே வந்தான்—செல்வச் சீராளன்

1. வங்காரச் சுட்டி தன்னில் மாமணியொளி மின்ன
செங்கதிர் பிரபை யென்ன செல்வச்சிறப்பு மன்ன
[சிங்கார....]

2. முத்துத்துரா கிருஷ்ண கொண்டையும்-ஒண்டி ரேக்குடன்
உற்ற சென்டோடு வெண்டயம்-சிரசு தன்னில்
ஒற்றைப் பிறையும் சொலிக்க வைத்த கிமுக்கா கலிக்கி
சுற்றியே முடிதுலக்கி நத்தி எல்லோரும் களிக்க
[சிங்கார...]

3. பீதாம்பரப் யட்டோடு புஜகிருதுக் கேதுவாய்
முகதாரிக்கீடு படவொன்றாக
காதார் மென் முருகொடு கோதிலாக் கடுக்கனாட
தாதார் பூமாலையாட மோதிய வண்டுகள் பாட
[சிங்கார...]

4. கண்ட சரங்கள் மின்னவே மாணிக்க மணி
குன்றாத ஒளி மின்னவே மோகன மாலை
மண்டிய புயத் திலங்க கண்டனக் கலசம் விளங்க
பண்டு மதன் வடிவிங்கே கொண்டு வந்தான் போல் துலங்க
[சிங்கார....]

5. தண்டை சதங்கை கொஞ்சவே தகதகென விண்டிசை
சிலம்பு மிஞ்சவே
பூர்ணசந்திரன் போல எண்டிசையு மிருளஞ்ச
இன்சொல் கிளி போல்கொஞ்ச
தண்டரள மாலை துஞ்ச தந்தை தாய் மகிழ்ந்து கொஞ்ச
[சிங்கார...]

6. அங்கி நிசாரு மணிந்து—அரை ஞாணுடன்
அரையிடு சதங்கை புனைந்து—அபரஞ்சிவஸ்த்ரம்
சிங்காரமாகக் கட்டி சிறுவர்கள் தன்னைக்கூட்டி
எங்கும் புகழை காட்டி ஈசன் பாதத்தை பாராட்டி
[சிங்கார...]

## விருத்தம்

**ராகம் - ஆனந்தபைரவி**

வந்தன்னை தந்தை தாளில் வணங்கியே துதித்து நின்ற
மைந்தனைத் தழுவி வாழ்த்தி மன மகிழ்ந்திருக்கப் பாலன்
தந்திரமாகத் தோழர் தன்னுடன் கூடிக் கொண்டு
விந்தையாய் விளையாட்டாட விருப்பமாய் வருகின்றானே!

## வசனம்

தாயே நமஸ்காரம்! தந்தையே நமஸ்காரம்! அம்மா நான் குழந்தைகளோடு விளையாடி வருகிறேனம்மா தாயே!

## நங்கை வசனம்

அப்படியே விளையாடி வாடா மகனே சீராளா.

## தரு-27

**ராகம்: மோகனம்** **தாளம்: ஜம்பை**

விளையாடுவோம் வாரீர்—தோழர்களே
விளையாடுவோம் வாரீர்—

1. இளையாமல் களையாமல் இருந்த இடத்திருந்து
உளையாமல் சதுரங்கம் ஒழுங்குடனே நாம் பார்த்து-[விளை]
2. பந்தடித்துக் கொண்டு பதறித் திரியாமல்
மந்தையிலோடிக் கால் மடங்கி விழுகாமல் [விளை]
3. கொக்கரித்துக் கூவி குதித்துத் திரியாமல்
கைக்குள் சூஸ்த்திரமாகக் கறங்கு பிடித்துநாம் [விளை]
4. ஆனை குதிரை மாடு ஆடு மரமேடு
தானதி லேறி ஓடித் தவித்துத் திரியாமல் [விளை]
5. வண்டியிலேறிக் கொண்டு மமதை நாம் நாடி நின்று
திண்டு முண்டுகள் செய்யாமல் சிவகதை தனையோதி
[விளை]

## விருத்தம்

இப்படி விளையாட்டெய்தி இருந்திடுங் குழந்தை தன்னை
மைப்பொலி கன்னியோடு மன்னனும் மனமகிழ்ந்து பார்த்து
செப்பிலா வேதமோத சிறுவனைப் பள்ளிக்கூடம்
வைப்பதற்கு ணர்ந்து நல்ல உபாத்தியை அழையென்றாரே.

## தொண்டர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா! நமது மைந்தனாகிய சீராளனை, பள்ளிக்கூடத்தில் வைப்பதற்கு, கற்று உணர்ந்த உபாத்தியாயரை, எந்த ஊரிலிருந்தாலும், அழைத்து வாரும் பிள்ளாய் கட்டியக்காரா!

## கட்டியக்காரன்

அப்படியே அழைத்துக்கொண்டு வருகிறேனையா சுவாமி!

## கட்டியக்காரன்—வெண்பா

சிறுத் தொண்டர் நங்கையுமே செப்பிய மாற்றங் கேட்டு
கருத் தொன்றிப் பேரறிவு கற்றோரைக் – குறித்தன்றிக்
காணாரை விட்டகன்று கட்டியனனா டெங்கும்
வேணோரைத் தேடினான் மேல்—

## வசனம்

சிறுத் தொண்டனாரும் நங்கையாரும் சொல்லியபடி யானும் வெகு தூரங்களெல்லாம் தேடினேன். இந்த ஊரிலேயாவது நன்றாய் படித்தபேர்களைக் கண்டால் சொல்லுங்கள் பட்டினத்திலுள்ளவர்களே!

## தரு - கட்டியக்காரன் 35

**ராகம்: மோகனம்** **தாளம்: ஆதி**

1. கண்டதுண்டோ சனங்காள் கற்றோர்கள் தம்மை
அண்டபிண்ட சராசரம் யாவும் அகற்றப் பணிப்ப
உண்ட நாயகன் பூசித்த கண்டனை யுணர்ந்த பேரை
[கண்டதுண்....]

2. சித்துருவ சித்துருவமாய்த் திருநடஞ் செய்
சின்மய நிசத் தொருவனை–கற்றுணர்ந் தறிவி னுள்ளே
கண்டுகொண்டானந்தங் கொள்ள முற்று முணர்ந்து மெல்ல
முடிவிலா நூலணர்ந் தோரை [கண்டதுண்....]

3. நாலுமறை ஆறு சாத்திரம் பதினெண் புராணம்
மேலுங்கலை ஞான சூத்திரம் சாலவே யறிந்துணர்ந்து
பாலகன் போல திரிந்து வேலவன் துணையென்றோர்ந்து
மாநில மறிந்த பேரை [கண்டதுண்....]

4, ஐந்திலக்கண மாராய்ந்து நாலுகவியுமறிந்து
நாலு வாக்கியமும் தெரிந்து சந்திர சடாதர தற்பரன்
தனை நினைந்து
மந்திரந்தனைப் புனைந்து மாதவம் மிகுந்துளோரை
[கண்டதுண்...]

5. ஓதிய வாக்குப் பலிதராய் சைவப்பொருளை
ஆதியென்றறிந்துளோரும் மாதவமுளத் திருத்தி
மங்கையர் மயக்ககற்றி பூதியின் பொடி தரித்து
புத்தகக் கரத்தோர் தம்மை [கண்டதுண்....]

## பொது விருத்தம்

இப்படியே சிலவிடங்கள் தேடிக்காணா
தின்பமுறும் திருமருக லெனுமூதூர்
ஒப்புடைய சிவஞான உபாத்தியாய
ரொருவரைக் கண்டன்புடனே ஒருமையாக
தர்ப்பரை யிலா வசனமுடனே தொண்டர் தன்னிடமே வருக
வெனச்சாற்றலோடும்
அப்படியே வருகுவ னீயஞ் சேலென்றன்புடனே தேசிகனும்
வருகின்றாரே.

## வசனம்

வெகு இடங்களெல்லாம் தேடிப் பார்த்து திருமருகலென்னு மூரிலே சிவஞான தேசிகனைக் கண்டான் கண்டு சிறுத் தொண்ட நாயனார் குழந்தையைப் பள்ளிக் கூடத்தில் வைப்ப தற்கு உங்களை அழைத்து வரச் சொன்னாரென்று சொல்ல, அப்படியே வருகிறோமென்று சொல்லி உபாத்தியாயர் வருவது காண்க.

## உபாத்தியர் விருத்தம்

வைதீக வடியாரென்ன வையக மறிய வாரைக்
கொய்துடையுடனே நீறுங் குறை விலாப் புண்டரங்கள்
மெய்திகழ்ந்திட வணிந்து விமலனை மறவாதேத்திச்
செய் செப மாலையோடு சிவஞான தேசிகன் வந்தாரே!

## தரு-36

ராகம்: கல்யாணி தாளம்: ஐம்பை

1. வாத்தியார் வந்தனரே – பள்ளியோத - வாத்தியர்
வந்தனரே!

மாத்தியர் தன்குல கோத்திரம் விளங்கப் பல
சாத்திரத் தொடு நல்ல வேத்திரங் கையில் கொண்டு
சந்தியா காலமும் சிவனைத் துதித்து [வாத்தியார்....]

2. கற்றுணர்ந்த நல்லோர்க்கு பத்தனெனவே சொல்லி
கமலக் கண்ணனைப் போல விமலன் பாதத்தைப் புல்லி
சித்த விருத்தி எனும் தீமை வேரைக் கொல்லி
சிந்தா மணியான கந்தன் பேரைச் சொல்லி
சிவனே சிவனே என்று தியானிந்து [வாத்தியார்....]

3. புத்திரருக்கு வித்தை மெத்த வருத்தி வைப்பேன்
போதனை யிலென்னைப் போல் வேதனு நிகரொப்பான்
தத்துவ நூலெல்லாம் மெத்தவே போதிப்பேன்
சர்வ கலைகளெல்லாம் நிருவாகமாய்க் சாதிப்பேன்
சைவமே மெய்யென்று சொல்லி [வாத்தியார்....]

4. செய்யுந் தவத்தில் வந்த சீராளன் தனக்கு நான்
செந்தமிழோடு கிரந்தமும் ஓதுவேன்
ஐயமில்லாமல் பதினெண் பாஷை யறிவிப்பேன்
ஆனாலும் சைவரை அதிகமாகத் துதிப்பேன்
ஆறு மாமுகனே துணை யென் றெண்ணி [வாத்தியார்...]

## விருத்தம்

மாத்தியர் குலத்தில் தோன்றி வைதீக மார்க்க முற்று
ஆத்தியைச் சூடு மீசன் அருட்டொண்டனாரே எம்மை
வேத்திரக் கரத்தோன் கூப்ப, வந்தனன் விடையேதென்ன
தோத்திரத்தோடு சொல்லித் தொண்டரைத் துதிசெய்தாரே!

## வசனம்

அகோ வாருங்களையா சிறுத்தொண்டனாரே உங்கள் ஏவளாளன் வந்து கூப்பிட யாம் வந்தோம். என்னை அழைப்பித்த காரியம் இன்னதென்று தெரிவிக்க வேணும் சிறுத்தொண்டனாரே!

## தொண்டர் விருத்தம்

கலைபல வறிந்து பாலர்க் கக்ஷர ஞானமெல்லாம்
நலமு டனுறை செய்கின்ற நல்லுபாத்தி யாயரே நீர்
திலக வான் போலே வந்த சேயினுக் கக்ஷரம் பயிற்றி
நலமுடன் வைப்பீர் உங்கள் நற்குழந்தையைப் போலின்றே

### தொண்டர் வசனம்

அகோ வாரும் உபாத்தியாயரே! நம்முடைய குழந்தைக்கு அக்ஷர ஞானங்கள் வரும்படி செய்யுங்களையா உபாத்தியாயரே!

### உபாத்தியாயர்

அப்படியே செய்விக்கின்றேனையா சிறுத் தொண்டனாரே!

### விருத்தம்

வேழ மாமுகனைப் போற்றி வெள்ளை மேனியனை வாழ்த்தி
வாலையாம் வளரும் கந்தன் மலரடி சென்னிசூட்டி
ஏலவே அரி ஓமென்று ஏற்றியே ஓதவைத்து
கோலமாய் அட்சரங்கள் காட்டி குழந்தைக்கு அறிவித்தாரே!

### வசனம்

"குழந்தாய் வாடா! வேழமுகனை எண்ணி குட்டிக்கொள், ஸரஸ்வதியைக் கும்பிடு வேலவனைத் தெண்டம் பண்ணு, ஹரி ஓம் என்று சொல்", என அக்ஷர ஞானம் செய்வித்தார்.

### பத்தியம்

ராகம் : **ஆனந்தபைரவி**

சீர்மேவு கலைவாணி மகிழவே கல்யாணம் செய்து
சிறுவர்கள் சூழ சிந்து வெனவே

வார்மேவு தவில் முரசு நாக சுர மேளங்கள்
மத்தள தாள மொடு மண்டல முழங்க

தார்மேவு புய மலர் மாலை மணி சூட்டியே தந்தை தாய்
குருதாளை சரணமடைந்தே

பார்மேவு திருமருகல் பதிதனையே நாடி
பண்ணவர்கள் பெரியோர்கள் பரவியே சூழ

காராருங் கண்டர்தனை நினைந்தன்பாலே
கலைமகளைத் துதித்தேத்திக் கனிந்துபடி
பேரார் பொத்தக மொடு நாராசமேந்தி
பிரியமுடன் சீராளன் புகழ்ந்து வந்தான்.

### தரு-37

ராகம்: காம்போதி　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

1. பள்ளியோத பாலருடன் பரிந்து நடந் தொயிலாய்
தெள்ளிய விண்மணி போல சீராளன் வந்தான்.
2. சுந்தரமாய் பணிபூண்டு விந்தையாகவே—நடந்து
சந்திரோதயம் போல் சீராளன் சம்பிரமாய் வந்தான்.
3. நெற்றியில் வெண்ணீறணிந்து ஒற்றைக் கொம்பனைப் பணிந்து
வெற்றிசேர் கல்வி கண்டோத விரைவுடன் வந்தான்.
4. தண்டை கிலம்பு கொஞ்ச தாளில் சதங்கை கெஞ்ச
மண்டலம் புகழ் சீராளன் மகிழ்ந்துமே வந்தான்.
5. மத்தள தாள வேய்ங்குழல் சுற்றியே வலங்கள் சூழ
பத்தியாகப் பள்ளியோத பாலனும் வந்தான்.
6. தந்தை தாய்ப் பெரியோர்கள் தாளைப் பணிந்து மெல்ல
விந்தையாகக் கல்வியோத விரைவுடன் வந்தான்.
7. பொஸ்தகங் கையிலெடுத்து வெற்றி நாராசம் பிடித்து
சித்தி பெருகவே யோத சீராளன் வந்தான்.

### பொது கலித்துறை

ராகம்: சங்கராபரணம்

திருவேரகத் திலிருப் போனருளைத் தினம் நினைந்து
குருவே துணை யென்றறிவோம் நமஸ் தெனக்கூறிப் பன்னூல்
உருவேறத் தொண்டர் மகன் கலைக்ஞானங்கள் ஓதிநிதம்
மருவேயும் கந்த மெனவே பன்னூல் கலை வாசிப்பனே.

### பொது வசனம்

சீராளனானவன், திருமருகலெனும் ஸ்தலத்தில் சிவஞான தேசிகரென்னும் உபாத்தியாயரிடத்திலே, சகல கலைகளும் வாசித்து வருவது காண்க.

### விருத்தம்

பள்ளியில் பாலகனோத பரதேசிக் கன்னம் ஈந்து
வள்ளலைப் பூசை செய்து வருகின்ற நாளில் ஈசன்
உள்ளத்தை அறிய வேண்டியுன்னியே ங்லை மீது
பிள்ளை வெண்பிறை தரித்த பெம்மானு மெண்ணி னாரே!

## வசனம்

பள்ளிக் கூடத்திலே பிள்ளை வாசித்து வர, சிறுத் தொண்டர் பரதேசிகளுக் கன்னமும் பரமேஸ்வரன் பூஜையும் தினகாலம் வழுவாமல் நடத்திக் கொண்டு வரும்போது, கர்த் தாவினுடைய மனத்திலே, சிறுத்தொண்டருடைய பக்தியை அறிய வேணு மென்று, கைலாயத்தில் சிம்மாசனத்தில் பரமேஸ் வரன் எழுந்தருளியது காண்க.

## சுவாமி விருத்தம்

கங்கையும் தும்பை சூடி கன்னியோர் பாகமாகி
செங்கையில் மழுமானேந்தி திரிசூல பாணியாகி
எங்குள உயிரைக் காக்க இமையவர்க் கஞ்சலென்று
செங்கையில் விரதம் தொட்டு கிவனுமே கொலுவில் வந்தார்.

## தரு—38

ராகம்: முகாரி தாளம்: ஜம்பை

அரனார் கொலுவில் வந்தார்—அவனி சோதனை காண
அமரர்கள் புடை சூழவே
கரமார் மழுமானிடப் புறமேயொரு மான் கூட
கங்கைச் சடையில் வைத்த திங்கள் பிறை துலங்க [அர....]

தண்டி பானு கம்பன் குண்டோதரன் கும்பன்
சந்திரனிழைத்த சங்க நாத மிகுந்து கத்த
விண்டிசை நாரதர் தும்புரு பாட டேனகை போல் மாதர்
நடனமாட
பால லோசனர் பராக்கு பராக்கென்ன—பண்ணிசையும் நந்தி
தண்ணுமை முந்த மேலோர் சயாவென மாலோன் பளா வென
மென்மலரடியவர் பொன்மலர் தூவ. [அர...]

சுத்தி நவகண்ட முற்ற நகரெல்லாம்—சோதித்துக்
குமரிக் கண்டமீதில் நல்ல பக்தர்களுண்டென்று
பரையுடன் விண்டின்று—பக்தியறிகுவம் நாம்
பாவை நீ பாரென்று [அர....]

தருமத்திலே வதிகமான தன்ன தானந் தன்னைக் குரித்திந்த
மண்ணுலகில் மேலான அருமறையாளருக்கு அமுதிட்டும்
அன்புள்ள
அரனடியவர் பூசை அனுதினம் செய்வதறிய

பூலோகிலுள்ள பேர்களிலே நல்ல புண்ணியஸ்த னென்று
நாரதர் சொல்ல வாமியுடன் சிறுத்தொண்டர் மகத்துவத்தைச்
சொல்லி மறைமுடிவி னிலன்பருளங் குடியிருக்கின்ற [அர...]

## விருத்தம்

கொலுவினில் அரனார் வந்து குவலயமதி லுள்ளோர்கள்
நிலைமை நாரதனார் சொல்ல நீல வல்லியு மேதென்ன
பலன்களிலதிகமான தன்னத்தின்பலன் மேலென்று
நிலவணிச் சடையோன் சொல்ல நிமலியும் கேட்கின்றாளே

## வசனம்

இப்படி அரனார் கைலாயத்தில் கொலுவிருக்கும்போது, பூமியிலுண்டாகிய சனங்கள் செய்யும் பாவ புண்ணியங்கள் விசாரித்திருக்கும் போது, நாரதனார், கிறுத்தொண்டர் புகழைச் சொல்ல, உமையவள் அப்படிப் புகழ்பெற்றவர் யாரென்று கேட்க, அன்னதானமே மேலானதென்று சொல்ல அப்படி அன்னதானமே மேலாஎ தாலந்த தருமம் யாருலகத்திலே செய்கின்றார்களென்று கேட்க அரனார் சொல்லுகிறார்.

## விருத்தம்

விரும்பிய படியே சித்தி முத்திகள் பெறுவோரிந்த
பெரும் புவனத்தில் சம்பு தீவினில் குமரிக் கண்டத்
தரும் பிறப் பந்தனாளன் அவன் திருச்செங்காட்டன்னம்
விரும்பியபடி படைப்பேனெனக் கொடி விதிக்கின்றானே!

## இறைவர் வசனம்

வாரும் பெண்ணே இமயவல்லி! பூலோகத்திலே, செம்பு தீவிலே, குமரிக்கண்டத்திலே, சோழநாட்டில் திருச்செங்காடென்று ஒரு திவ்யஸ்தலமுண்டு அந்தஸ்தலத்திலே பரஞ்சோதிப் பண்டிதராகிய சிறுத்தொண்டர், யார் எப்படி அன்னங் கேட்கிறார்களோ அந்தப்படி அன்னம் படைக்குறோமென்று, அன்னக்கொடி கட்டி, தருமஞ் செய்கிறானடி பெண்ணே!

## உமை வசனம்

கேட்கின்ற படியே அன்னம் படைப்பவர் கிடையாதிந்த
நாட்கண்டதில்லைத் தேவரீர் நவின்றது மெய்யே யானால்
ஏற்கின்றார் வேடம் பூண்டு இதய சோதனைகள் பார்த்து
ஆட்கொள்ள வேணுமெந்தன் ஆதியே சரணந்தானே!

### வசனம்

அப்படி கேட்கப்பட்ட பிரகாரம் அன்னம் படைக்கிறபேர் எந்த உலகத்திலுமில்லை. அப்படி இருந்தால், அவனிடத்திலே உருத் தெரியாமல் போய், சோதனைபார்த்து, ஆட்கொள்ள வேணும் கடவுளே!

### சுவாமி விருத்தம்

நல்லது பெண்ணே இந்த நாழிக்குப் பரதேசிகள்
எல்லையில் அவன் கண்ணுக்கு இல்லாமல் ஓட்டிவிட்டு
பல்லவந் தெரிந்திடாமல் பரதேசி வடிவம் பூண்டு
வல்லியே அறிந்து வாரேன் மாதே இங்கிருந்திடாயே!

### வசனம்

இந்த க்ஷணமே பூலோகத்திற்குப் போய், இன்ன வடிவ மென்றறிவதற்கு அருமையான, உருவெடுத்து அவனைச் சோதித்து முத்தி கொடுக்க போய் வருகிறேனடி பெண்ணே!!

### விருத்தம்

அம்பிகை தனையனுப்பி அவனியில் திருச்செங்காடு
என்பதில் தருமஞ் செய்யும் எந்தையை மனஞ் சோதிக்க
தம்பிரான் தவசியோகி சங்கமர் தாதர் யாரும்
எங்கணும் கண்டிடாமல் இருக்க வென் றெண்ணினாரே!

### வசனம்

உமையவளை வைத்து, சுவாமி, பரதேசிமாரைக் காணாமல் போகும்படி செய்தார்.

### தொண்டர் விருத்தம்

என்னமோ பெண்ணே வெண்காட்டு ஏந்திழையாளே கேளாய்
இன்னிலம் தன்னி லாண்டி மார்களிலெவர்களேனும்
அன்னமுண்டிட வரவுங் காணேன் அரவமும் அவர்கள் கூட்டம்
இன்னிட மிருப்ப ரென்று இசைத்திடக் காண்கிலேனே.

### வசனம்

அகோ வாரும் பெண்ணே வெண்காட்டு நங்கையே! பரதேசிகளை எங்கும் காணோமே என்ன செய்வேனடி பெண்ணே

## தொண்டர் வெண்பா

கட்டியனே ஏது பரதேசிகளைக் காண்கிலதால்
தட்டிப் பறை யறைந்து சகலரையும் — எட்டி
வருக வென வழைத்து வள்ளலன்பர்க் கன்னந்
தருகுவை நீ — இக்ஷணமே தான்.

## தொண்டர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா பரதேசிகளைக் காணாத படியினாலே ஊர்கள்தோறும் பறையறைந்து சகலமான பேரும் வரும்படி அழைத்து அன்னம் படையும் பிள்ளாய் கட்டியக்காரா.

## கட்டியக்காரன்

அப்படியே மகாபாக்கியமையா சுவாமி!

## கட்டளைக் கலிப்பா

பால் வெண்ணீறும் பார்த்தக்க மாலையும்
சாலவே புனைந் தின்பந் தழைத்திடும்
ஆலமுண்ட அரனடித் தொண்டரே
காலமே வருகுவீர்கள் கடுகியே!

## வசனம்

வெண்பொடி பூசி, அக்க மாலையைத் தரித்து, ஆலமுண்ட கடவுளன்பரான பேர்களே, இக் காலமே வருவீர்! வருவீர்களையா சுவாமி!

## விருத்தம்

கட்டியன் சென்று நாடிக் கடுகியே ஊர்கள் தோறும்
பட்டணம் சோலை காவும் பலப்பல இடங்களெல்லாம்
தட்டியே பறையறைந்து சகலரும் இப்போதே தான்
எட்டியே வருவிரென்று இசைத்தனன் இன்பமாக

## தரு-39

பரதேசி மாரைக் கண்டதுண்டோ அன்னமுண்கவே

1. பரதேசி மாரைக் கண்டதுண் டோ,
   வரதனை யானந்த விரதனையே யந்த
   குருதனைப் போற்றும் விரதர்களான [பரதேசி...]

பஞ்சாட்சரங்களைச் செபிப்பார்— அஞ்ஞான இருளை
மிஞ்சாமலோரைந்தையும் துசிப்பார்—தேவாரஞ்சொல்லி
சஞ்சித காமியம் அஞ்சிடவே மாயம்
மிஞ்சிடவே நயந்தின் சொல்லரான [பரதேசி...]

2. காவியுங் கலையிதழ் புனைந்திருப்பார்—அக்கமாலையை
மேவியே சிரமுகத்தில் தரிப்பார்—ஆனந்த பார்வை
கூவியே சுற்றிலும் தாவிய அன்பர்கள் மேவியே
நெறுங்கிடும் ஒவியமான [பரதேசி....]

3. தண்டங் கரத்தின் மேலே விளங்கும்–காதினிற் செம்பொன்
குண்டலக் கவச மணிந்திலங்கும் – மாத்திரைக் கோலும்
குண்டிகையும் கரங்கொண்டுடனே சிர
முண்டக நீறணிகின்ற மெய்ஞ்ஞான [பரதேசி]

## கட்டியக் காரன் விருத்தம்

ஐயனே அன்பர் பூசை அடைவுடன் செய்து சைவ
தெய்வ நாயகனைப் போற்றும் சிறுத்தொண்ட நாயனாரே
வையகத் தாண்டி மாரை மாயமாய்க் காணேன் என்ன
செய்குவேனையா வுந்தன் திருவடி சரணந்தானே!

## வசனம்

ஐயனே! சைவத் தெய்வ நாயகனை வணங்கும் சிறுத் தொண்டனாரே! எங்குந் தேடிப் பார்த்தேன் ஒரு சோகி சங்கமரையும் காணேனையா சுவாமி!

## தொண்டர் விருத்தம்

கங்குலைக் கடிந்திருண்டு கதித்துச் சைவலமுநாண
துங்க மல்லிகையுமுல்லைச் சுரவொழுகிய மென் கூந்தல்
மங்கையே ஏவலாளன் மாதவர் தன்னைத் தேடி
எங்கினும் காணோமென்று இசைத்ததற் கென் செய்வேனே!

## வசனம்

இருளையும், சைவலத்தையும் பழித்து, மல்லிகை முல்லையின் தேனொழுகு கூந்தலையுடைய பெண்ணே! கட்டியக்காரன் அடியார்களை எங்குந் தேடியும் காணோமென்று சொன்னதினாலே என்ன செய்வேனடி பெண்ணே!

## தரு—40 (a)

ராகம்: தாளம்:

என்ன நான் செய்குவ னன்னமே - பரதேசிகள்
எங்கினும் காணா தாலின்னமே!

1. மின்னியசடா வியான் - உன்னியே எனைச் சோதித்தால்
இன்னிலந்தனிலாரைத்தான் பின்னமாய்ச் சொல்லலாங்
குற்றம்
[என்ன]

2. மாதவர்க்கு வஞ்சம் செய்திலேன் - மறை வலோர்க்கு
ஏதும் அபசாரம் செய்திலேன் - ஈதல்லாமலே
ஏது குற்றமுஞ் செய்கில்லை - நீதி தப்பிகுடிகளை
வாதனைக்குள்ளாக்குஞ்சொல்லை-காதிலே உரைக்கிலேனே
[என்ன]

3. சைவரைப் பழித்துரைத் தேனோ - உபதேசித்த
ஐயர் சொல் மறுத்துரைத்தேனோ - மெஞ்ஞானிமாரை
வையும் பேருடன் சேர்ந்தேனோ—பொய்யதாய் வாய்மை
செய்தேனோ ஐயமிடுமுன்னுண்டேனோ
தெய்வ சோதனைகள் தானோ. [என்ன நான்]

4. சங்கமர் சைவரைப் பழித்துக் கன்னிப் பருவத்
தையலர்கள் தன்னை யழித்து - அன்னை பிதாவை
அங்கம் பதறச் செய்தேனோ—இங்கொருநீதிமையேனை
சங்கரன் சோதனை ஏனோ—இங்கெனைச் சோதித்தாரா
னால்
[என்ன நான்]

5. வேத பாராயணஞ் செய்வோரும்—திருமுறை
ஓதிய தமிழிசை மெய்யரும்—சோகியர் கூட்டம்
வீதியெங்கும் திரிவோரை—கோதிலா நீரணிவோரை
மாதவரி லொருவரை யாவதறிகிலேனே. [என்ன நான்]

6. சத்திர வாசல் கொள்ளாமல் அனந்தம் பேர்கள்
நித்திய முண்டார்கள் தள்ளாமல்—அவர்களெல்லாம்
எத்தலத்திலொளிந்தாரோ—குற்றமென்று பழித்தாரோ
பத்தர் வேறே குறித்தாரோ அத்தனுமே மறைத்தாரோ
[என்ன நான்]

## விருத்தம்

வரிபடர்ந்திடங் கொண்டோங்கி வடிகணைக் கண்ணாய்காலன்
மறிபட உதைத்தோன் செய்த வஞ்சம் போல் காணுதென்ன
புரிகுவ மிதனுக் கென்று போதவே மயங்கி வாடி
தெரிவையே சொல்வாயென்ன தேவியுமுரை செய்வாளே!

## வசனம்

செவ்வரி படர்ந்து அகலமாயிருக்கின்ற, அம்பு போல ஒத்த கண்ணுடைய பெண்ணே! கால சம்ஹாரக் கடவுள் வஞ்சம் போல் தோணுது இதனுக்கு என்ன செய்வேனடி பெண்ணே!

## விருத்தம்

புத்தி யூகத்தில் சித்தி புகழினில் கீர்த்தியன்பர்
பக்தியில்மிகுந்த எந்தன் பிராண நாயகனே கேளீர்
சத்திரங்கட்டி யன்ன தானமும் தொண்டர் பூசை
பக்தி செய்வோரே குற்றம் பார்த்திலீர் உமதிடத்தே!

## நங்கை வசனம்

புத்தியிலும், யூகத்திலும், சித்தியிலும் மிகுந்த என் பிராண நாயகா! அன்ன சத்திரங்கட்டி, தொண்டர் பூசை செய்கிற பேர்களுக்கு, இந்த ராச வடிவாகிய கோலங்களு மதிடத்திலிருக்கின்றதே, இதை யொழித்து, தொண்டர் வடிவம் பூண்டு கொள்ளத் தெரியவில்லையே, என் பிராண நாயகா.

## தரு – 41 தர்க்கம்

ராகம்: சங்கராபரணம் தாளம்: ஆதி

**தொண்டர்:** தெரிகிலீரென்றுரைத்த தென்ன — வெண்காட்டு நங்காய்
செய்தருமங் குற்றங்களென்ன — வெண்காட்டு நங்காய்

**நங்கை:** குற்றமுள்ள வாறறிகிலீர் தர்மஞ் செய்யும்
கோல மீதென்றே தெரிகிலீர் — தர்மம் செய்யும்

**தொ:** தெரிந்தல்லோ தவங் களனந்தம் செய்தன்பர்பூசை
செய்ய மேன்மை என்று நினைந்தோம்
அன்பர் பூசை

நங்: நினைந்ததில் குற்றங்குறையுண்டோ — நமது கோலா
நேர்மையாக நிற்பது நன்றோ — நமது கோலம்

தொ: நன்றல்லாக் கோலங்களேதின்று நம திடத்தில்
நாரியே குற்றங்களே தின்று — நமதிடத்தில்

நங்: ஓதுவது மாதர்க் கழகோ கொழுநர் புத்தி
உண்மையாக நிற்பதழகோ, கொழுநர் புத்தி

தொ: உண்மையான மாதர்கள் புத்தி கணவனுக்கு
உற்றதுரைப் பதுவே சித்தி—கணவனுக்கு

நங்: சித்திபெற வேணுமென்றல்லோ தேவரிடத்தில்
சிலது குற்றம் தன்னைக் கண்டல்லோ தேவரிடத்தில்

தொ: கண்டகுற்றம் மீதென்று சொல்வாய் - தர்மம் தழைக்க
காதல் கொண்ட கன்னியே வல்லி — தர்மம் தழைக்க

நங்: வல்லி யென்றுரைக்கும் பிராணேசா மந்திரி கோலம்
மாற்றியே என்னுடனே பேசாய் மந்திரிகோலம்

தொ: பேசுவது நன்று காண் பெண்ணே தொண்டர் வேடம்
போடுவேன் பெருமையாய் இன்னே
தொண்டர் வேடம்

## தொண்டர் விருத்தம்

ராகம்:- முகாரி

மயிலையும் கடலை வேலை வண்டையும் பழித்த கண்ணாய்
குயில் மொழி மாதே தொண்டர் கோலமே பூண்பேன் பூண்டால்
அயில் கரத் துண்ணல் தந்தை அடியாரைக் காணலாமென்
றொயில் பயில் வேடம் நீங்கி உத்தம வேடம் பூண்டார்.

## வசனம்

மயிலையாகிய மச்சத்தையும், கடலையும், வேலாயுதத்தையும் பழித்த கண்ணுடைய பெண்ணே! நீ சொன்ன வார்த்தை மெத்த நன்றாச்சுது, இந்த மந்திரி வேடத்தை நீக்கி, தொண்டர் வடிவம் பூண்டு கொள்கிறேனடி பெண்ணே!

## நங்கை வசனம்

அப்படியே தொண்டர் வடிவம் பூண்டு, அன்பரைத் தேடினால் அடியார்களைக் காணலாமையா சுவாமி!

# சிறுத்தொண்டர் நாடகம்

## இரண்டாம் பாகம்

## தொண்டர் விருத்தம்

ராகம்: தோடி

மடியுடையும் நீறணிந்து அக்கமாலை மார்பினில் தோள் கரங் காதில் வயங்கப் பூட்டி

நெடிய முடியணி சிரசில் பஞ்சக் கொத்து விங்க சாதன மார்பில் யோகப்பட்டை

படிமுழுதுந் தாங்கியதோர் சேடன்றன்னைப் பறித்துக் குண்டலஞ் சாற்றும் பான்மை போல

வடிவு கொண்ட குண்டலங் காதிலங்க வேடம் மகிழ்ந்தணிந்தன்பரைத் தேடி வருகின்றனாரே

### தரு - 42

ராகம்:- நாதநாமக் கிரியை தாளம்: ஜம்பை

1. எங்குந் தேடியும் சங்கமர் சோகிகளிருப்பரைக் காணேன் ஈசனே
   கங்குல் பகலாக சங்கமுழக்கிய கண்ணுதலைப் புகழ்ந்தாடியே
   கவிபாடியே! கும்பல் கூடியே - மன்றுளாடியோனடி தேடிய பேர்களை [எங்கும் தேடி]

2. மூவரோதிய பாடலாகிய தேவாரங்களைப் படித்தே—நல்ல
   பாகுசிந்து களிப்புடன் கொச்சகம் ஆவலய் பாடி முடித்தே
   நிற்கும் அத்தரை - சிவபத்தரை - மகா முத்தர்களானோர் கள் இத்தருவாயிலே — [எங்கும்]

3. கடைத் தெருவிலும் சந்திலு மேலான மடப்பள்ளி கொள்ளாதிருப்பரே
   எந்த இடத்தில் யாதொரு தடத்திலாவது நடத்தை பேதித்திருப்பரோ
   எந்த நாட்டிலும் - எவர் வீட்டிலும் - உயர் காட்டிலுமலை மேட்டிலாவது [எங்கும்....]

4. பூசுரர் வீதியும் ராசர்கள் வீதியும் ஆசில் வணிகர் தம் வீதியும்—சிவ
   நேசராம் சூஸ்திரர் அனேகராய்க் கூடி வாசஞ் செய்யுமிட மாதியில்
   அரனேசரை—சிவதாசரை — தலவாசரையாவது போசன முண்கவே! [எங்கும்]

5. உத்தர தக்ஷண கிழக்குமேற்கெங்கும் சுற்றி வருவோரைக்
கேட்டதில்
ஒரு உத்தரமாவது பத்தரைக் கண்டோ மென்றுரைப்
பரைக் காணோன் நாட்டதில்
என்ன தாக்ஷியோ—குன் அரக்ஷியோ—லோகரேச்சதாய்
சொல்ல வாச்சுது அடடா
[எங்கும்]

6. காசி ராமேஸ்வர வாசிகள் போவதில் பேசிய சத்தங்
களாவது
கேட்டு போஜனஞ் செய்வோமென்றாலும் ஒருவர் சொல்
ஆசையாய்ப்போச்சுதே காவதம்
தேடிப் பார்த்துமே திருக்கூத்தனார் அன்பர்
காதிலேயுமோர்வார்த்தையைக் கேட்கிலேன்
[எங்கும்]

## தொண்டர் விருத்தம்

**ராகம்: சாவேரி**

பொன்பூத்த கடுக்கை தும்பை கரந்தை வில்வம் பூண் முடியா
யென் செய்வேன் பூமி தன்னில்
மன் போற்றும் மதியுரைக்கும் மந்திரியாகி வாழ்ந்த நகர்தனை
நீத்துன் மலர்த்தாள் போற்றி
அன்பேற்றிப் பணிந்தன்பர் பூசையா லோர் ஆண்மகவும்
பெற்றேன் நின்னருளாலின்று
என்பூத்த நீரணிந்த வன்பரைக் காணமல் என்செய்வேனெனக்
கீழ்பாலேகினானே!

## தொண்டர் வசனம்

அரகரா, கொன்றையும், தும்பையும், கரந்தையும், வில்வமும் முடியில் தரித்தருளிய சிவனே! நான் பூமியாளும் அரசர்க்குக் கண்ணான மந்திரி தலைமையும் விட்டு, இவ்விடத்திலே சிவபூசையும், அன்பர் பூசையும் செய்த பலத்தினாலே, ஓர் ஆண் புத்திரனையும் பெற்றேன். இப்போது அன்பரை எங்கும் காணாமல் தேடியலைந்து வாடினேன், இனி கிழக்குதிசையிலாவது என் கண்ணில் அடியாரைக் காணும்படி கிருபை செய்வாய் கணபதிசா!

## தொண்டர் தரு 43

**இராகம்: நாதநாமகிரியை** **தாளம்: ஆதி**

1. சிவனே நான் என்ன பிழை செய்தேனோ பரதேசிகள்
தெரியாமல் போன தென்ன - தோஷமோ சிவமே
2. புவனந் தனிலனந்தம் புண்ணியந்தனில் மிகுத்த
பொலி வென்றன்ன தானஞ் செய் போதமோ சிவமே
3. தவனேசரி ரிருக்கின்ற சாலைகுகை முதற் கொண்டு
தாரீந்தாராய்ந் தறியேனே சங்கரனே—சிவனே
4. ககனக் குளிகை யாலே காடுமலை புகுந்து
காணா தொளித்த தென்ன காரணமோ சிவமே
5. கோவில் குளக்கரையும்—தண்ணீர் பந்தல் துறையும்
கொள்ளா திருந்தோ ரெங்கே போவாரோ சிவமே.
6. சாவடி சத்திரங்கள் தண்ணீர்வாவி குளங்கள்
தாங்கா திருந்தோ ரெங்கு சார்ந்தாரோ சிவமே!
7. மலை நுழை குகை சோலை வனங்கள் பர்னக சாலை
ஆசனத்தைப் போட்டெங்கு மறைந்தாரோ—சிவமே
8. கலை தரித் தாடு மீசன் கழல் பணி பெரியோரை
காணேனே இதுவென்ன காரணமோ சிவமே!
9. அலைதலைத் துயில்வோனும் அயனும் காணாத
பரமேசனருளல்லால் வேறாகுமோ சிவமே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: ஹரி காம்போதி**

பரவை தன் வாசல் தூது பாவலர்க் காகச் சென்ற
அரவணி நீலகண்ட ஐயன் சோதனை யென்றெண்ணி
விரைவுடன் தெற்கு நோக்கி மிகு களை தாபத்தோடு
சிரமிசை கரங்குவித்து தேடினான் வாடினானே!

## தொண்டர் வசனம்

அரஹரா, பரவை வீட்டிற்குத் தூதுபோன கடவுளே! அரவு விடத்தைக் கண்டத்திலே தரித்திருக்கா நின்றவரே! நான் உள்ளூரிலேயும், கீழ்த்திசையிலேயும், தேடி, உன்

அன்பரைக் காணாமல், தெற்குத் திசையிலே வந்தேன். இங்கேயாவது ஒரு பரதேசிகளைக் காணும்படி கிருபை செய்ய வேணும் கடவுளே!

## தொண்டர் தரு 44

**ராகம்:** **தாளம்:**

சங்கரா - அரவணியுங்கரா - கபாலனே

1. மங்கையோர் பாகத்தில் அங்கம் விளங்கிய துதுகனே
2. கைலையாளங்கனே மகா தேவனே யானேதும் பாவம் புரிந்திலேன்
3. நாதனே சகலர்க்கும் நீ தனே திருநடப் பாதனே நீர் செய்த சோதனை தானே!
4. ஏதினி அடியாரை மேதினி தனிலே நான் பாதபூசை செய்ய பாதகம் செய்தேனோ!
5. மாநில நகரெல்லா னானலைந் - தடியாரை யே னலங்கள் பெற நான் காணுவேனோ.
6. வானரங்களோடே நான் தொடர் வேனலுடன் கடுங் கானகமிதிலே
7. கண்டிலேன் ஒரு தொண்டர்கள் தமை இன்றலையாத விடங்களில் தேடியும்
8. கொண்டல் சூழ் கிரிகளில் சென்று தேடியுங் காணேன் அண்டர் நாதருட பண்டையடியாரை
9. என் செய்வேன் கவலைகள் மிஞ்சுதே அரஹரா நெஞ்சக மீதுள வஞ்சந்தனை யொழி.
10. உன் செயலன்றி என் செய லில்லையே தஞ்ச மென்ற என்னை அஞ்சலென்றே காப்பாய்
11. ஈசனே அன்யருக்கு நேசனே - அன்னதான பூசாபலன் பெற தேசிகனைக் காட்டாய்.
12. தெற்கிலே தேடியும் சிக்கிலர் பரதேசி எக்காலமோ வந்து சிக்குவரோ காணேன்.

## தொண்டர் விருத்தம்

ராகம்: ஹரிகாம்போதி

சிறந்திடும் கரந்தை மத்தம் திருமுடி சூடுமன்பர்
அரந்தைகள் கெடவே மன்றுள் ஆடிபபரனே ஓலம்
பரந்தெழு நஞ்சையுண்ட பரமனே ஓல மின்றென்
தரந்தைகள் அகல மேற்கோர் தவசியைக் காட்டிடாயே!

## வசனம்

அரகரா மகாதேவா சிரத்திலே கரந்தையும் ஊமத்தமும் சூடிய பரமேஸ்வரனே, அன்று, தில்லையிலே அன்பர் துன்பம் நீங்கும்படி, திரு நடனம் செய்த பாதாம்புயனே ஓலம்-திரு நீலகண்டனே அபயம். இந்த மேற்குத்திசையிலாவது ஒரு சோகிகள், சங்கமர், பரதேசிகளை என் கண் முன்னே வரும்படி கிருபை செய்வாய் ஈஸ்வரா!

## தொண்டர் தரு-46

ராகம்: எதுகுல காம்போதி தாளம்: ஆதி

1. கன்னியர் படையுடனே கலை தொடுத்த மதனைக்
கண்ணால் எரித்த அண்ணா
2. மின்னிய சடாடவியாய் - என்னையலையும் படியாப்
விதித்தா யென்னை— மிதித்தாய்
3. திசைதிசையாய்ச் சென்று நாடிதேடியும் பரதேசியைத்
தெரியேன் ஒன்றும் அறியேன்
4. வசையினுக்குடலெடுத்து வையகத்தோரென்னை ஏச
வைத்தாய் ஓ அத்தா
5. தெற்குடன் கிழக்கில் பரதேசிகளைக் காணேன் என்ன
செய்குவேன் யாரை வைகுவேன்
6. அக்கரா வணிந்த ஈசன் அடியேனை சிவமே சோதித்தாரோ
அறியேன் ஒன்றுந் தெரியேன்
7. என்ன செய்வேன் ஜெகதீசா இன்னிலத்திலாண்டிமார்கள்
இல்லையே என் முன் வல்லையே
8. மண்ணுலகில் சோகியர்கள் தன்னை மறைத்தது என்ன
மாயம் ஈ தென்னவு பாயம்

9. காடுமலையும் குகையும் தேடி அலைந்தேனே எங்கும்
காணேன் ஈதென்ன வீணே!

10. நாடக மன்றுளாடிய நாதனே நான் செய்த தர்மம்
நத்தியே ஒரு பத்தர்கள்.

11. வருக வென்றருள் புரிவாய் த்ரி யம்பகனே யோகா
வாழ்வே — அருள்தேவே!

12. பெருகிய புனல் முடியாய் வருக அன்பரை நொடியில்
பேசாய் செகதீசா

## தொண்டர் விருத்தம்

**ராகம்: சாவேரி**

ஆலால முண்ட திருக்கண்டா தொண்டர் அவனியிலே
மறைந்திருந் தறிய வேண்டி
ஓலோல மென்றுனக்கே தெண்டம் செய்து ஓடினேன் மூன்று
திசையுமலைந்துவாடி
ஏலாமலே அலையும் எளியேன் முன்னம் ஏதமிலா சோகி
சங்கமர்களெல்லாம்
சீலாகமம் பேசி வருகச் செய்வா யென்று வடதிசைத்தேடி
திகைக்கின்றானே!

## வசனம்

ஆதியே! முன்னாளையிலே, சமுத்திரத்திலே எழுந்த நஞ்சை யுண்ட திரு நீலகண்டனே! பரதேசிகளைக் காணாமல், மூன்று திசையிலுந்தேடி, அலைந்து, வாடி, அகப்படாமல் வட திசையிலே வந்தேன். இப்போவானால், எனக்கு இளைப்பும், களைப்பும், தாகமும், பொறுக்கமுடியுதில்லை. இனிமேலாவது அடியார்களாகிய உன் திருத்தொண்டரை, என் கண்ணிலே காணும்படி, கிருபை செய்ய வேணுமையா சுவாமி!

## தொண்டர் தரு-46

**ராகம்:** **தாளம்: ஜம்பை**

1. சங்கரனே சிவனே—அரனே மங்கள சுந்தரனே
அன்னம் உண்க ஒரு பரம் எங்கினும் காணாமல்
அங்கம் உருகுதே சங்கமரைத் தேடி [சங்க... ]

2. காவி உடையிடையும் சென்னி மேவும் சடைமுடியும்
நீறு தாவிய மெய்யர்கள் கூவிய மையர்கள்
மேவியே சூழ்ந்திடும் தேவரைக் காண்கிலேன் [சங்க...]

3. மரவுரி ஆடைகளும் மொழியால் திருகிய பாடைகளும்–பேசி
சிரமிசை குஞ்சி–விரைவுடன் மிஞ்சி
தரைமிசைத் துஞ்சி—வருவோரைக் காண்கிலேன் [சங்க...]

4. கட்டும் புலித்தோலும் இடையில் நொட்டகரக்கோலும்—
நடையும் எட்டியே என்றன்னே கிட்டி வந்து நீற்றை
இட்டிடு மென்றவர் கிட்டாமல் போயினார் [சங்க...]

5. குண்டிகைக் கையர்களும் கஞ்சுகங் கொண்டிடு மெய்யர்
களும்–பகல்
ஒருபொழுதுண்டியருஞ் சில தொண்டர்களும் களக்
கண்டியரைக் காணேன் எண்டிசையுந்தேடி [சங்க....]

6. அக்கமாலை புனைந்து அரனடி சிக்காமலே நினைந்து
— லாடர்கள்
பக்கமதில் வந்து சொற்கமுதாயீந்து
முக்கியமாய்ப் பேசுவோரைக் காணுவேனோ [சங்க]

7. அஞ்செழுத்து ஓதுவோரும் திருமுறைப் பஞ்சாத்தாதியரும்
நிறைந்து கஞ்சக் கருவி யோடின் சொல் பெருகிய
செஞ்சொற் புலவரையுஞ் சக்கண் காணேனே.

8. கிழக்கொடு தெற்கு மேற்கும் தவசிகள் புழக்கமதைப் பார்க்க
தேடிக் களைப்புடன் தாகமிளைப் பாகுதே ஓ கோ!
அழற் கண்ணனே கால் பிழைக்கும் படியே நீ [சங்க]

## பொது விருத்தம்

ராகம்: முகாரி

கிழக்கொடு குடகு தெற்கு கீறிலா வடக்கினோடு
புழக்கமாய்த் தேடும் போது புங்கமர் சங்கமரைக் காணா
இளைப்பொடு கவலை கொண்டு இருநிலந் தன்னிலே தான்
விழக் கவிழ்ந்தயர்வாய் மூர்ச்சை மெய் மறந்துயிக்கின்றாரே.

## பொது வசனம்

இப்படியாக நாலு திசையுந் தேடிக் களைத்து, மூர்ச்சை யாகி, நித்திரை போகிற போது, சிறுத் தொண்டர் கனவு கண்டாரென்பது காண்க:-

## வெ. நங்கை விருத்தம்

**ராகம்: முகாரி**

பரதேசி மாரைத் தேடும் பத்தாவை வரக் காணோமே!
நரைமேவு மலர் மென்கூந்தல் நாரியே சந்தன மானே
குறை வேதும் செய் தில்லாத கொழுனரோ டாண்டி மாரை
வரவே நான் காணேன் என்ன மாயமோ அறிகிலேனே!

### வசனம்

அடி வாடி பெண்ணே சந்தன நங்கையே! என் பிராண நாயகர், பரதேசி மார்களைத் தேடிப் போனவர், இன்னமும் வரக் காணோமே, என்ன மாயமோ, தெரியவில்லை, இதனுக் கென்னா செய்வேனடி பெண்ணே!

### நங்கை தரு-47

**ராகம்: தோடி.** **தாளம்: ஜம்பை**

என்னா செய்குவேனாகே என் சாமியை இன்னும் வரவும் காணேனே

1. அன்னமுண்கவே தொண்டர் தன்னையழைத்தே யின்று
அன்னமே வருவேனென்ற மன்னனைக் காணாமலின்று
[என்னா....]
2. கந்த மிகுந்த தாரோர் சோகியைத் தேடி
எந்த நகரம் சேர்ந்தாரோ- சந்தன மானே
சந்திர சேகர நந்தெமைச் சோதிக்க வந்த தல்லால்
யாரை நொந்தால் வருமோ வேறே! [என்னா...]
3. புன்னை யருகு புனைந்து-விடையுகந்து கன்னியோர் பாலமர்ந்து...
எங்கினும் தானாய்—மண்ணுள உயிர்க் கெல்லாம்
அன்னை போலிருக் கின்றோன்—தன்னடியாரைத் தேடும்
மன்னன் வரக் காணேன் [என்னா....]
4. உண்ண உதவாதன்னமே—உலர்ந்ததினால்—தின்ன ஒவ்வா தின்னமே
அமுதான—பெண்ணே பரமானியம்- தண்ணீர் போல் பனியாய்ச்
சின்னா பின்னாமாகியும் இன்னும் வராதத நியாயம்
[என்னா....]

5. பொரியல் தீயில் சுண்டலும் வடை தோசை கறியுடன்
பால் கிண்டலும்
அறிய தாலே-உருசை தெரியாதிது-வரிசையோ அரன் சூது
பரிசனமாவது- தெரிசனங் காணா தாலே! [என்னா....]

6. நானும் தொடர்ந்து போனேனோ-போனால் துயரம்
தானே விலகுமே தேனே - பெண்ணேயினி
ஆன தென்னாலுண்டோ - மானே தெரியாதின்று
ஞான மூர்த்தி தன் தொண்டர் ஆனோர் வாராதலின்று

## நங்கை விருத்தம்

ராகம்: தோடி

பெண்ணிலே பிறந்தலுத்த பேதமைகளகல யெந்தன்
பிராணநாதர்
உண்ணிலே யொழிப்ப மெனக்கோரிய தோர் தவந்தினுக்குத்
திங்கில்லாமல்
இந்நிலே நாளையிலேயாகிலும் சங்கமர்கள் தொண்டரெல்லாம்
கூடி
பண்ணிலே இசைபாடிப் பாலன்ன முண்பதைக் கண்ணிலே
காண்பேனோ பாவையாரே

## வசனம்

அடி பெண்ணே சந்தன நங்கையே! இந்தப் பெண் ஜென்ம மொழிப்பதற்கேதுவாயென்னயாகன் கோரின தவம் நிறை வேறப் பரதேசிமார்கள் அன்ன முண்பதை என் கண்ணினாலே காணுவேனோடி பெண்ணே!

## சந்தன நங்கை வசனம்

அடியம்மா! நீமயங்காதே! நான் சொல்வதைக் கேளடி அம்மா!

## சந்தன நங்கை தரு-48

ராகம்: தாளம்:

ச. நங். மாது நீயிது கேள் நீயொரு வார்த்தை மயங்கா
தடியாள் சொல்லை.

போதமிதென்று கொள்ளுவாய்.

வெ. நங்: கொள்ளுவதானடியார் கோலங்கள் கண்ணாலே
காணுவதுள்ள தேயுரை யுமுண்மையே!

ச. நங்: உண்மையாய் அரனருளை உண்டென மனதிலுண்ணி
தன்மை கொள் கவலை நீங்கவே!

வெ. நங்: நீங்கு மென் மணாளன் தன்னை நேராய்க் கண்டாலன்பர்
வாங்குமே துயரம் சொல்லுவாய்.

ச. நங். சொல்லுவதேது சோகியர் தொண்டரைத் தேடியேகியே
மல்லலன்புயன் வருகுவார்.

வெ. நங்: வருகுவ தின்னாள் தாமிதமானதாலரனடியார்
திருகு செய்த தெங்கொளித்தார்களோ!

ச. நங்: ஒளித்த தவன் செயலே ஒண்டொடி வெண் காட்டு நங்காய்
செழித்திடக் கிருபை பெறுவோம்

வெ. நங்: கிருபை செய்தால் நமக்குக் கிடைக்குமோ
விருதா வாயேன் வீம்பு பேசுகிறாய்.

ச. நங்: பேசுவ தரன் செயலே பேதை நீயறியாதிதை
ஆசுதீர வாய்மை இது உண்மையே!

வெ. நங்: உண்மையானால் அடியார்கள் ஒளித்தோடிப் போவார்களோ
பெண் மதியென் பதாய்ப் பேசுறாய்.

ச. நங்: பேசி யன்பரை மறைத்துப் பெண்ணே நம்மனஞ் சோதித்து
ஈசனருள் செய் நிமித்தமே!

வெ. நங்: அருள் செய்யக் கபால மூர்த்தி அணுகுவதானால் மணாளன்
வருகுவ தீதென்ன தாமிதம்

ச. நங்: தாமதம் சிவனாலன்றி தையலே வேறில்லை கண்டீர்
நேமுக ஈசன் வருவார்.

## பொது சபை விருத்தம்

இப்படி வெண்காட்டு நங்கை இதயமுமகிழ்ந்து நன்றாய்ச்
செப்பிடச் சந்தன நன்மாதும் சிவனிவர் மனம் சோதிக்க
மைப்பொலி கண்டனன்றேவன் வடிவத்தை யொளித்து வீர
திப்பிய உருவங் கொண்டு சிவனுமே வருகின்றாரே!

### வசனம்

இப்படி வெண்காட்டு நங்கை மயங்கி, கிலேசமடைய சந்தன நங்கை தைரியம் சொல்ல, அந்தச் சமயத்திலே பரமேஸ்வரன், கங்காள வேடமாக, வருகிற விதம் காண்க.

### சுவாமி விருத்தம்

கங்கையும் மதியராவுங் கடுக்கையும் தும்பை சூடும்
சங்கரன் வேடமாறி கங்காளருருவம் பூண்டு
சங்கு சேகண்டி நாதம் சாகர மென வொலிக்க
கங்காளர் உருவமாக கைலாசர் வருகின்றாரே!

### தரு-49

**ராகம்: மத்தியமாவதி** **தாளம்: ஜம்பை**

கங்காளர் வந்தாரே ஜெகதீச சங்கம ரூபமதாய்

1. செங்கை தனிலே திருவோடெடுத்து—சீரார் திருச் செங் காட்டையடுத்து
துங்க மழுமான் தன்னை விடுத்து
சுருதிப்படி யறத்தைக் கருதிச் செய்வோரிடத்தில்
[கங்காளர்]

2. கொன்றை மதியமும் தும்பையும் கங்கையுமறைத்து—அதில்
கோலமாய் சந்திரனிரவிபோல் பிறை தரித்து
வெண்டலை மாலையலங்காரமாகவே கழுத்தில் தொங்க
விட்டது வானக மீனதுபோல் கதிர் விரித்து
முண்டக மீதழல் கண்ணை மறைத்து முன்கையில்
நாக கங்கணம் தரித்து
குண்டிகையும் பிரம்பும் கையில் குறித்து
கோலக் கரி யுரித்த சூலத்தையும் தரித்து
[கங்காளர் ....]

3. நெற்றியிலே திருப் புண்டரம் பூத்து நீறிலங்க—அதில்
திலவெரி போல சந்தனப் பொட்டது துலங்க—சென்னி

சுற்றிய செஞ்சடைக் கற்றை மீன் பூத்துக் குலுங்க
—வாக்கில்
சொலிக்கு மற்புத மொலிக்கு நற்பொருள் விளங்க—காதில்
பற்றிய நாகக் குண்டலமிலங்க
பன்மணிருத் ராக்ஷ கண்டம் துலங்க
குற்றமில்லா முன்னூல் மார்பி லிலங்கக்
கோலப் பார்வையை மாற்றி—வீரச்சங்கமந் தோற்ற
[கங்காளர்....]

4. கோதிலாச் செச்சையும் மார்பில் விளங்கிடப் பூட்டி—
அதைக்
கோர்த்திட வெண்பணக் கயிறென வடமாட்டி—எங்கும்
ஓதிய மந்திரம் திருமுறை வாசகங்காட்டி—எங்கும்
ஓவியமாகிய காவி உடை யிடை சூட்டி
ஏதிலார்க் கின்பந் தரும் பதங் காட்டி
எமனை யுதைத்த பத மணியாட்டி
ஆதி வயிரவ ரென்னும் பேர் சூட்டி
அன்பர் வினையைத் தீர்க்க இன்பப் பார்வையாய்ப்
பார்த்து
[கங்காளர்....]

## கங. விருத்தம்

வந்த கங்காளர் வீதி மருங்கினில் சார்ந்து சிந்து
சந்தோஷமாகப் பாடி சங்கு சேகண்டி கொட்டி
பந்தாடும் பாலர் மூத்தோர் பாவையரெவரையுமே பார்த்து
விந்தையாய் யமுது கேட்டு வீதியில் வருகின்றாரே!

## தரு-50

ராகம்: காம்போதி தாளம்: ஜம்பை

செந்திரு வென்னச் செழித்திடுவீர்கள் - தேடியமுதிட்ட பேர்கள்
1. சந்திர சூடாமணி பதந்தேடும் - தம்பிரார்க் கன்புடனே
யன்னம் போடும்
சாருபம் வந்துமைக் கூடும் [செந்திரு]

2. பசித்தோருக் கன்ன மிடுவார் களுண்டோ
பாலரே அவ்வீடு காட்டு வீரின்று
பாச மகன்றிடுங் கண்டாய் [செந்திரு]

3. காசி ராமேஸ்வரம் போய்ப் பல காலே
கதறி விழாமல் கனிந் தன்பர் காலே
கண்டால் வரும் பலன் மேலே [செந்திரு]

4. பந்தாடல் செய்திடும் பாலரே யன்னம்
படைப்பவர் வீடவர் பேரின்ன தென்ன
பகருவீர் பாக்கிய மன்ன [செந்திரு]

5. பத்தர்கள் சித்தர்பரதேசிமாரை-பாவித்தவர்கள் பதந்
தொழுவோரை
பாக்கியம் பெற்றிடு வாரே [செந்திரு]

6. ஆண்டிப் பரதேசிமாரன்ன முண்ண - அன்பாய்ப்
படைத்திடுவீர்களிணங்க
அரனடி காணுமே கண் கள் [செந்திரு]

7. பூமிதனிலுள்ள புண்ணியமோடு புகழுமுண்டாகவே
போதவே நாடு
பூத னாதனையே தேடு [செந்திரு]

8. கங்கை போல் வாழ்வு கற்றிடு வாரை கங்காதரன்
போலே வந்தாண்டிமாரை
காத்தமுதிட்டிடும் பேரை [செந்திரு]

## கங்காளர் விருத்தம்

**ராகம்: காம்போதி**

திருவீதி தோறும் கூடி சித்தின விளையாட்டாடி
வரும் சிறு பிள்ளாயன்னம் வழங்கிடுவார் களாரோ
ஒருவருங் காணேன் கண்டால் உரைசெய்யு மென்று அன்பாய்க்
குருபரன் கேட்கப் பாலர் கூறுவார் விவரமாக.

## வசனம்

திரு வீதியிலே பலவிதமாய் விளையாடும் சிறு குழந்தைமார்களே ! இந்த ஊரிலே பரதேசிமார்களுக்கு, அன்பாய், அன்னம் படைக்கும் பேருண்டோ சொல்லும் பாலர்களே.

## பாலர் விருத்தம்

கங்கை வேணியன் போல் வந்து கங்காள மேந்தி யன்பாய்
எங்கள் முன் வந்து நின்று இட்டுண்ணும் வீடே தென்றீர்
கங்கணக் கரத்தாய் முன்னம் காணுது மடமும் வீடும்
அங்குநீர் போவீராகில் அமுதிடுவார்கள் தானே!

### பாலர் வசனம்

கங்கைசூடிய, ஜெகதீசன்போல் வேடம் பூண்ட, கங்காள பரமேஸ்வரனே! அதோதோணுது அன்னக்கொடி, அதுதான் சிறுத்தொண்டர் மடம், அதற்குப் போனால் ஈஸ்வரனுக்குச் செய்கிற உபசாரம் போல் செய்து, அன்னமிடுவார்களையா சுவாமி!

### பொது விருத்தம்

பாலர்கள் சொல்லக் கேட்டு பர்மனும் சிறுத் தொண்டையன்
சீலமாயன்னம் போடும் திரு மட மனுகு முன்னே
ஏலவார் குழலீரான இளங்கொடி கண்டு பாதம்
சாலவே புகழ்ந்து பாடி சரணமே செய்கின்றாளே!

### வசனம்

பாலர்கள் சொன்ன அடையாளப் படிக்கு சிறுத்தொண்டர் மடம்தேடி வருகின்ற போது - வெண்காட்டு நங்கையார் சென்று தம்பிரானே ஜெகதீசா வென்று பஞ்சாங்கமாய் வணங்கித் தோத்திரம் செய்தது காண்க.

### நங்கை விருத்தம்

வந்த கங்காளர் தன்னை மங்கை கண்குளிரக் கண்டு
எந்தையே மறைகள் மாலோனய னறியாதுகந்த
முந்தவே கொண்டகோல முதல்வனே என வணங்கி
புந்தியு மகிழ்ந்து போற்றிப் புகழ்ந்து தோத்திரஞ் செய்தாளே!

### நங்கை வசனம்

சரணம் சரணமையா சுவாமி! வேதமும், அயனும் மாலும் காணாத கோலங் கொண்ட, கைலாசபதி போல் வந்த, கங்காள நாதரே என் கண்குளிர வந்த தெய்வமே! சரணம் சரணமையா சுவாமி.

### நங்கை தரு-51

**ராகம்: ஹரிகாம்போதி** **தாளம்: ஆதி**

மங்கையோர் பாகர் போலவே
வந்தனையோகா – அரஹர [மங்கை]

1. சங்கரி பணிகின்ற பொற்பாத — தாண்டவமூர்த்தி
குருமூர்த்தி — அருள்கீர்த்தி — அரஹர [மங்கை]
2. ஏதந்தெரியா ஏழை எங்களை யாள்கவென் றெண்ணி
இங்கு நண்ணி — வந்த புண்யா — அரஹர [மங்கை]
3. சங்கமர் பரதேசியைத்தேடும் சுவாமி வருமுன்னே
வந்த கண்ணே — எந்தனண்ணா அரஹர [மங்கை]
4. வானவர் முனிவோரும் நாரும் மகிழமன்றாடி
இன்று நாடி தொண்டர் தேடி அரஹர [மங்கை]
5. கைலையாளி வடிவை நீக்கிச் சங்காள ரூபமாய்
வந்த சோமா — எந்தன் நேமா—அரஹர [மங்கை]
6. விண்டும் அயனும் கண்டிடாத வேதண்டபாணி
கங்கை வேணி சங்கபாணி—அரஹர [மங்கை]
7. ஆறு தலத்தில் ஆறுதலை கொண்டாடி நின்றோனே
இன்று நானே தொண்டர் தானே— அரஹர [மங்கை]

## நங்கை விருத்தம்

**ராகம்: நீலாம்புரி**

மலை சிலையாக்கிய வானவனெனவே வந்தோனே
நிலை பெறு முனிவர் மனமது தெளிய நின்றோனே.
கலை தெரி புலவ னென முனம் தருமி கண்காண
புலமை கொள் பொருளே உமதிட ஊர் பேர் புகல்வாயே!

## நங்கை வசனம்

சிவசிவா, மலையை வில்லாக்கியும், ஜனகாதிபர்க் கருளியும், தருமிக்காக புலவனாகி நின்றவர் போல, ஏழை கண் காண வந்த தெய்வமே, உங்களுடைய ஊரும் பேரும் அடியாளறியும்படி, திருவுளம் பற்ற வேணுமையா சுவாமி.

## சுங்கரளர் விருத்தம்

**ராகம்: தோடி**

சுந்தர மதிமுக இந்திரை வடிவென வந்தடி தொழுகின்ற மாதே கேள்
மந்தர கிரிதரன் தந்தியை யுரிபரன் எந்தமையாள்பவன் மகதேவன்

வந்துறை நகரது அந்த வளம் பதி எந்தனுடைய வீடதுவாகும்
பைந்தொடியே கேள் சுந்தர வைரவர் என்றெமை யங்குளர்
பகர்வாரே!

தரு-52

இராகம் : யதுகுல காம்போதி தாளம்: ஆதி

1. தையலேகேளும் என்னூரும் பேரும் சாற்றுவேனாளும்
தையலே நீ கேளும் தமியேனிருந்து வாழும்
வையமுத்திராபதி வளரும் நாடெங்கள் பதி [தையலே]

2. தாரமோ ரெண்டு மூத்தாட்பகுப் பிள்ளை தானுமே ரெண்டு
அவர்களிடம் சோறிட வேணு மென்றேன் தோகை
ஏசினாள் என்றே
யாரிடு வாரினி யென்று அன்னையே வந்தேன் கண்டாய்
[தையலே]

3. எங்கும் சோதியாய் முச்சுடரொளி தங்கும் வீதியாய் -
அதிலுள்ளோர்கள்
கங்கை வேணியனைக் கால மூன்றுந் தானே
தங்கும் படியே யெனைத் தவங்கள் புரிவார் காணே!
[தையலே]

4. ஏற்றமுடனென் பேருங் கங்காளரென்று புகல் வார்கள் -
அன்னியர் சிலர்
கூற்றை யுதைத்தோரென்று கூறுவாரனேக ரென்றும்
மூர்த்தியுடையாரென்று மொழிவார் வைரவ ரென்றும்
[தையலே]

5. வானவர் நாளும் அவரவர் தானுமே வாழும்
முனிவோர்கள்
மோன முணர்ந்த தனி ஞான மறிந்தோரினி
தானவரு முறையுமா நகர மாகுமே [தையலே]

6. சித்தர் கூட்டமும் - சிவகணஞ் சுற்று நாட்டமும் இருப்பர்
சிலர்
கற்றையஞ் சடையரைக் கழல் பணிந்திடுவோரே
நத்தியே மறையோரும் நண்ணி வாழ்ந்திடும் ஊரே
[தையலே]

7. திக்குப் பாலர்கள் வசு தேசு மிக்க நாகர்கள்
பஞ்சாங்கமோடு
ஒக்கும் கிரகங்கள் திக்கெல்லாம் வாழுமெங்கள்
சொர்க்கமது என்பார்கள் துதித்து நல்ல அன்பர்கள்
[தையலே]

8. இப்படிக் கீர்த்தி பெற்ற ஊருக் கொப்புடன் மூர்த்தி
கங்காள ரென்று
எப்புவியோரும் புகழும் அப்பனிச்சடையன் வாழும்
அப்பதி நமதுகாண் மைப் பொலி கன்னியே கேள்
[தையலே]

## வசனம்

அகோ வாருமம்மா தாயே, எங்களூரோ உத்திராபதி தேசம், பேரோ வைரவ ரென்றும், மூர்த்தி என்றும் உடைய வரென்றும், கங்காள ரென்றும் சொல்வார்களம்மா தாயே!

## கங்காளர் விருத்தம்

நங்கையே மாதே எந்தன் நாடுமென்பேரும் சொன்னேன்
இங்குமென் வயிர்ப்பசிக்கு இனிமையா யன்ன மீந்தால்
உங்கள் கோத்திரத்தோடெங்கள் உமாபதி நகரஞ் சேர்வீர்
இங்கு தாமித மில்லாமல் எமதிளைப் பாற்று வீரே!

## கங்காளர் வசனம்

அகோ வாருமம்மா தாயே என்னுடைய ஊரும் பேரும் சொன்னேன் இனிமேலாவது எனது பசி தணியும்படி அன்னமிட வேணுமம்மா தாயே!

## நங்கை வசனம்

அப்படியே அன்னம் படைக்கிறேனையா சுவாமி.

## கட்டளைக் கலிப்பா

ராகம்: தோடி தாளம்: ஜம்பை

இந்து நேர் நுதலுமிலக வதில் இரவி வந்ததிலே யிசைந்த
தெனும்படி
சிந்தூரக் கிரண வொளி விசிடும் தேனே சந்தன மானே ஓர்
வார்த்தைகேள்

எந்தை போலுருவாகிய சங்கமர் இளைப்பகற்றிட இன்பமதாக நீ
செந்தளிர்க் கரத்தா லன்னமுங் கறியுஞ் சீக்கிரங் கொண்டு
வாயென் சிநேகியே.

## நங்கை வசனம்

சந்திரனைப் போன்ற முகத்தில், சூரியனைப்போல் சிந்தூர மிலங்கிய சந்தன நங்கையே, ஈசனைப்போல் வந்த பரதேசியாருக்கு அன்னமிட, அதிசீக்கிரத்தில் அமுது கொண்டு வாடி பெண்ணே!

## தரு-53

ராகம்: தாளம்:

1. அமுது கொண்டாடி சந்தனமானே—அமுது கொண்டாடி
2. அமுது கொண்டாடி நீ அன்று மன்றுளாடி
நமது குடியை நாடி நாதன் வந்ததாலோடி [அமுது]
3. முனிவர்கட் கரிதான முதல்வனருளினாலே
இனி நாம் கரையேற ஈசன் போல வந்தார்க்கு [அமுது]
4. மங்கை பாகன் போல வடிவு கொண்ட சீலன்
நங்கை நமக் கனு கூலன் நாதனுண் கவே சால [அமுது]
5. நீல கண்டரைப் போல நீரணிந்திலங்க மேலும்
கால வயிரவ ரென்னும் கங்காளரமுதுண்ண [அமுது]
6. பாற் கடலமைத்திடும் பரமன் போல் தழைத்திடு
வோர்க் கன்னம் படைத்திட உலகெல்லாம் செழித்திட
[அமுது]
7. சிரமாலை யணிந்திட்டுத்திரி சூலங் கரந்தொட்டு
பரம சொருபமாய் வந்தார் பசியார தீவிரமாய் [அமுது]

## சந்தன நங்கை வசனம்

அப்படியே அமுது கொண்டு வருகிறேனம்மா தாயே!

## சந்தன நங்கை விருத்தம்

தாமரை தனிலே கொட்டிக் குவளை யாம்பலுமே தாவி
காமுறு களி முகத்துக் கன்னியே அன்னம் யாவும்
நேமகம் செய் தேனின்று நிமலன் போல் வந்த தேவர்
தாமுமே யமுது கொள்ள சடுதியில் படைத்திடீரே!

### சந்தன நங்கை வசனம்

சரணம் சரணம்மா தாயே! தாங்கள் சொன்னபடியே சகல அன்னபானாதிகளெல்லாம் கொண்டு வந்திருக்கிறேனம்மா தாயே!

### வெண்காட்டு நங்கை வசனம்

இருக்கட்டும், படைப்போமடி பெண்ணே!

### நங்கை விருத்தம்

திங்களைப் புனலூமத்தை சிறந்திடும் அருகு வில்வம்
மங்கையை விடையை நீத்து மாதவருருவ மேற்று
எங்களை யாள்க வெண்ணி எழுந்தருள் பரமேயின்று
மங்களமாக அன்னம் மகிழ்ந்து வந்துண்ணுவீரே!

### வசனம்

சந்திரன், கங்கை, உமை முதலிய சின்னங்களை மறைத்து, குருவாக வந்த, கங்காள பரமேஸ்வரன் போல் வந்த பரதேசி மாரே! தேவரீர் அமுதுண்ண எழுந்தருளுமையா சுவாமி.

### சுவாமி நங்கைதரு தர்க்கம்-54

ராகம்: தாளம்:

நங்கை: கங்காளரே யெழுந்தருளன்ன முடனே நல்ல
கறிகாய் பலகார வகை உண்டு பாரும்
எங்கள் குல தெய்வம்போல வந்த நாதனே—

கங்காளர்: நங்கை யிதோ எந்தனுக்கு பசிவாதை தணிய
நல்லன்னம் கறி காய் படை நலமீதே!
உங்கள் குல தெய்வ மென்று சொன்ன தாயே—

நங்கை: சங்கம ரெனவே வந்த தம்பிரானே அன்னம்
எங்கே யிடுவார் களென்ற எம்பிரானே
உண்க விழைந் தெழுந்திரும் உண்மையாக

கங்காளர்: ஆடவருடனே வைத்து அன்னம் படைத்தால்
அரனருளுண்டாகுமே யன்பாயடுத்தே
நாடியே தாமுண்டிடவே நன்றாயினித்தான்.

நங்கை: ஏது நான் செய்ததர்ம பலத்தாலே — சுவாமி
இங்கு வந்தீரென் கணவன் தவத்தாலே
கோதிலா வன்ன தானப் பலன் குறையாமலே.

கங்காளர்: குறைவிலாமலுண் பேறுந்தன் கொழுனனோடும் வைத்தே
கொள்ள வளித்தால் உண்பேனான் உள்ளபடியே
நரைமலர் மென் கூந்தலான நங்கை நாடியே.

நங்கை: அருள் பெற பரதேசிக் கன்னம் படைத்த பலத்தால்
அரன் போல வந்த தால் எங்கள் குறை தீர்ந்தோம்
பெருமையாய் நீருண்டால் நல்ல பேறைப் பெறுவோம்

கங்காளர்: அன்ன முண்ப தாடவர்களில்லாவகத்தில் —உண்டால்
இன்னிலத்தில் மகாபாவம் எய்து மிகுத்தே
சொன்ன வாகமமறிவாய் தோகை பகுத்தே

## சுவாமி விருத்தம்

ராகம்: முகாரி

மின்னல் போல் இடையும் சொல்லில் வீணையைப் பழித்த மாதே
உன்னுடைய கணவனோடு உண்பதல்லாமல் வேறே
அன்னியனாக யாலும் அமுதுண்டால் பாவமென்று
சொன்ன வாசகமுங் கண்டாய் நீ தோகையீர் அறிகுவீரே!

## கங்காளர் வசனம்

அகோ வாரும் வெண்காட்டு நங்கை எனும் என் தாயே! நீ மகா அன்புடனே அன்னம் படைப்பாய், அதற்குக் குறைவில்லை. ஆனாலும் புருஷனில்லாத வீட்டில் போஜன முண்டால் மகா பாவம். ஆதலால் ஈசான்ய பாகம் கணபதீச் சுரத்தில் ஆத்திமரத்தடியிலிருக்கிறோம். உன் புருஷன் வந்தால் எமதிடத்திற்கு வரச்சொல்லுமம்மா தாயே!

## கங்காளர் விருத்தம்

ராகம்: மோகனம்

நங்கையை அனுப்பிக் கொண்டு நாதனும் மன மகிழ்ந்து
புங்கமாயடி சிவக்கப் பூதல மதில் நடந்து

துங்கமாய் ஆத்தி நீழல் சுகமுடனிருக்க நண்ணி
எங்கள் நாயக னாரன்பாய் எழுந்தனர் மறைமுழங்க

## சுவாமி தரு - 55

ராகம்: மோகனம் தாளம்: ஆதி

1. ஆத்தியடிக்கு நடந்தார் - கங்காள மூர்த்தி
ஆத்தியடிக்கு நடந்தார்
மூர்த்திக் கமலனரி போற்றியறியாக் குறி
சாற்றும் சிவனாமுரு மாற்றி மறையிலுறை
தானவ னதியாம் மோனவ நீதி சேர்
கானக மலர் அறமான நிழலிலோர் [ஆத்தி]

2. சிறுத் தொண்டர் மனம் சோதிக்க கங்காளர்
உருக் கண்டு நங்கை துதிக்க - வந்த மூர்த்தி
மருக் கொன்றை மந்தாரம் தாரும்
தருக் கொண்ட வனந்தோறும்
இருக் கின்ற மலர் பூத்து சிறக்கின்ற நிழல் பார்த்து
ஏழுலகும் புகழாளி பவாளி ஊழ்வினையும் கெட தூளித
பூஜித [ஆத்தி]

3. பட்ட மரங்கள் துளிர்த்து கொழுந்தோடிலை
விட்டுக் கொம்புகள் தழைத்து புஷ்பித்திருக்க
வெட்டிவேர் மரு புன்னை நெட்டிலவோடு கொன்னை
மொட்டவிழ் மலர்கள் துன்ன இட்டபந்தலாக மின்ன
ஈசரை யடியர்கள் நேசரை எதிர்கொண்டு
பாசரைக் காணல் போல் ஆசறுவனமதில் [ஆத்தி]

4. மெய்யில் வெண் பொடி துலங்க அக்கமாலைகள்
கை தோள் மார் சிரமிலங்க—குண்டலமொடு
வெய்யவ னொளியென்ன பையரவ மணி மின்ன
வைய மயக்க மென்னும் மையலகற்றச் சொன்ன
வாசவனாதியாம் ஈசனே சோதியாம்
நேசனை வனந் தோறும் பேசும் பூவை மகிழ [ஆத்தி]

## தொண்டர் விருத்தம்

ராகம்: முகாரி

ஆத்தியினிழற் கீழீசன் அமர்ந்தபின் அயர்ந்த தொண்டர்
தோத்திய சோபம் நீங்கி தொண்டர் நாயகனை வாழ்த்தி
தோத்திரம் செய்து தங்கள் துணைவியை இல்லிற் கண்டு
நாற்றிசை தனிலு மன்பர் தனைக் காணேன் நங்கை யென்றார்.

### வசனம்

அகோ வாரும் பெண்ணே! நான் நான்கு திசையிலுந்தேடி ஒரு பரதேசிகளையும் காணாமல், மயங்கி சோபமாகி கீழே விழுந்து, மயக்கம் தெளிந்து, வந்தேனடி பெண்ணே!

### நங்கை விருத்தம்

**ராகம்: முகாரி**

கணவனை வணங்கி மாது கைலையாளியன் போல் வந்து
இணையில்லா உருவங் கொண்டு எந்தனை யன்னம் கேட்க
துணைவனே உண்ணென்றே யான் துணைக்கரம் குவிக்க ஐயர்
மணவாள னன்றி யுண்ணோம் என உரைத்தகல் கின்றாரே!

### நங்கை வசனம்

அகோ சரணம் சரணமையா சுவாமி என் பிராண நாயகா தேவரீர், பெரியோர்களைத் தேடிப் போனபிறகு, அடியாள் வியாகூலமாய் இருக்கும் போது, கைலாசபதியைப் போல் ஒரு பெரியவர் வந்தார் நான் அவரை வணங்கி அன்ன முண்கச் சொன்னேன், அதற்கவர் சொன்னது புருஷன் இல்லாத வீட்டில் உண்ணோமென்று போனார்களையா சுவாமி.

### தொண்டர் விருத்தம்

**ராகம்: மோஹனம்**

நங்கை இவ்வாறு கூற நாடியே சிறுத்தொண்டையன்
திங்கள் வேணியன்றன் கூற்றைத் தெரிய வென்னாலுண்டாமோ
மங்கையே உன் போலின் சொல் வயங்கிடா மாதர் தம்மை
எங்குமே யறிகிலோமே யாமிதற் கென்செய்வேனே!

### வசனம்

அடிவாடி பெண்ணே! உன்னைப் போல் பொல்லாத ஸ்திரீயை இந்த வையகத்தில் காணேனடி பெண்ணே!

### தரு-56 தொண்டர் நங்கை தர்க்கம்

**ராகம்:** **தாளம்:**

**தொண்டர்:** என்னடி பெண்ணே வஞ்சம்-இப்படிச்செய்தாயுன் நெஞ்சம்
இரும்படி அல்லடி பெண்குறும்படி நீ சொல்லுமின் சொல்

கங்கை: வஞ்ச நெஞ்சினாளென்று-அஞ்சவே சொன்னீர்கள் சுவாமி
கஞ்சன் மால் காணாத சோதி தன்செயலென்றறி யாமலே

தொண்டர்: எண்ணமே துன்னுடைய இதயங் கல்லானதாலே
இங்கு வந்த சங்கமர் எங்கடைந்தாரே அறியோன்
வண்ண மயிலே குயிலே அண்ணல் சென்ற தறியேனே

கங்கை: அறியோமென்றேயுரைத்தீர் ஐமுகன் போலே வந்து
அன்னம் படையுமென்று என்னை வினவிக் கேட்ட
பெரியோனேகிய பாதை பேசுவேன் சமமதாக

தொண்டர்: பேசுவா யெந்தனுடைய பிராண நாயகியே மானே
பேதமை மாதர்க் கழகென் றோதியது நிசந்தானே
ஈசன் போல் வந்த சங்கமர் எங்கடைந்தாரோ வியம்பாய்

கங்கை: சொல்லுவேன் கேளும் சமமாய் சுந்தர கங்காள நாதர்
சோப தாபமறவே பாகமாய முதுண்ண
வல்லியுன் மணாளன் வந்தால் சொல்லென்று அகன்றாரையா

தொண்டர்: அகன்றவ ரெங்கடைந்தாரோ அன்னமே பெண்ணே மானே
ஆகமப் பொருளாகும் யோகிபோல வந்த ஐயர்
சகந்தனி லிருப்பிட மீ தென்றதாகிலும் சொல்வாய் மானே!

கங்கை: உரைப்பேன் திரு ஆத்தி நிழல் தன்னில் பத்மாசனத்தில்
உண்மையாகிய சிவ ராஜாங்க யோகத்தில்
இருப்பிடம் நீயும் உன் கணவர்க் கியம்பென்றார் காண்சுவாமி

## நங்கை விருத்தம்

ராகம்: முகாரி

பிறந்திறந்துழலு மாயைப் பெரு வெள்ள நீங்கியின்பந்
தருங் குரு னாத னாத்தி தன்னடி யிருப்பேனுந்தன்
அறந் தழைக் கொழுநர் யந்தால் அறைகு வாய் என்றுரைத்துக்
குருந்தடி இருந்தோன் போல் வான் உரைத்தனன்
குறைவில்லாதான்

## நங்கை வசனம்

அகோ சரணம் சரணமையா சுவாமி! பிறந்திறந்துழலா நின்ற பாவ சமுத்திரத்தை நீக்கி, மோக்ஷ விடு தரும்படியாக உம்மைப் போலொத்த, மாணிக்க வாசகரை அடிமை கொண்டவரைப் போலொத்த, கங்காள வடிவானவர், ஆத்தி மரத்தின் நிழலில் இருக்கின்றோம், உன் புருஷன் வந்தால் வரச்செல் லென்று போனார்களையா சுவாமி:

## தொண்டர் விருத்தம்

ராகம்: சாவேரி

வஞ்சி இவ்வாறுரைத்திடவே சிறுத் தொண்டையன்
மாதவனா யெழுந்த கங்காளனார்க்கே
தஞ்சமென்று கரங் கூப்பி அஞ்செழுத்தை யோர்ந்து
சைவ சமய முதலாய்ச் சமய கோடிக்கு
அஞ்சலென்று ஆதரித்தவர்கள் காணக் கோலமாகி
யருளுதவுங் கைலாச வாசா
உன் செய லென் செயலாய்க் காட்டாய் உந்தன் உருவமதைக்
கண்ணாலே காண நானே!

## வசனம்

அரஹரா! மகாதேவனாயெழுந்தருளிய மூர்த்தியே அஞ்சல்—அஞ்சல் சைவமுதல் சகல சமயங்களுக்கும் தானாயெழுந்தருளிய மூர்த்தியே சரணம் உன் உருவத்தை நான் காணும்படி கிருபை செய்ய வேணுமையா சுவாமி.

## தரு-57

ராகம்:

தாளம்:

1. திங்கள் பிறையணிந்த கங்காளரே உனை நான்
தேடி எத்திசையும் காணகிலேன்.

2. எங்கள் குல தெய்வம் போல் இங்கெழுந்தருளினோர்
எந்த அகத்தடைந்தாரோ.

3. எத்திசையிலும் தேடி முத்தரைக் காணகிலேனே
எவரகத் தன்ன முண்டாரோ

4. பித்தனென்றுரை நாதர் பத்தர் தனையே தேடும்
பேதை இவனெனநகன் றாரோ

5. நாலு திசையுந்தேடி ஓடியோடி வாடி
நான் காணேன் உன் அடியாரை

6. ஆலமமுது கொண்ட நீலகண்டனே சுவாமி
அடியேனை யாள வருவாய்

7. அண்டருடன் வேத விண்டுவுங் கண்டிடாத
ஆரணமீ திருந் தோனே

8. தொண்டர் தமையே தேடிக் கொண்டலைந்து வாடுமென்
துயரந்தனை யகற்றுவாய்

9. விஞ்சையா லறியொண்ணாத வஞ்சிக்கொடியைப் பாக
மேவியே கொடுத்த தேவனே!

10. தஞ்சமென்ற டைந்தோரை அஞ்சலென்றேயருளும்
சங்கரனே சம்புவே

11. விண்ணவர் முனிவோரும் நண்ணுதற் கரிதான
விமல சச்சிதானந்தனே

12. எண்ணப்படியே புண்ணியம் பண்ணத் துணிந்தெண்ணிய
எளியேனையாள்வா யினியே!

13. எங்குந் தேடினேன் காணேன் சங்கரன் அருள் தானே
இந்த ஆத்தியில் கண்டேனே

14. பங்கயன் சிரங் கொய்த கங்காதரனே தேவே
பரமனே என்னை யாள்வாயே!

## தொண்டர் விருத்தம்

திருமேவுகின்றதோர் கைலைவாழ்வோ, திரிபுரங்கள் எரித்த
திரியம்பகனோ தேவர்
குருநாதனோ அன்றால நீழல் குலக்கொழுந்தோ வழுதியுட
கோதைக்காக
வரு மாலவாயில் சுந்தரனோ தாருகா வனமாதர் வலதழிக்க
வந்தான் போலாத்தி
தரு நீழலமர்ந்தருளும் பொருளே வீரசங்கம வேடம் பூண்டோய்
சரணந் தானே!

## வசனம்

சுவாமி! தேவரீர் கைலாசபதியோ! அல்லது திரிபுரம் சம்மாரம் செய்தவரோ அல்லது ஆல நீழலில் எழுந்தருளிய மூர்த்தியோ, அல்லது பாண்டியன் மகளுக்காக சுந்தரமூர்த்தி வடிவாக வந்தவரோ அல்லது தாருகா வனமதர் கற்பழிக்க வந்த நீலகண்டரைப்போல, இந்த ஆத்தி மரத்து நிழலிலே வீராகம சங்கம ருபமாக வந்த மூர்த்தியே, சரணம் சரணமையா சுவாமி!

## தரு-58

**ராகம்: கல்யாணி** **தாளம்: ஜம்பை**

1. ஐயனே கைலாச வாசன் போல் ஆத்தி நிழலுறை நேசனே!
வெய்ய தீவினை விலக்கியாண்டிடும் வேதநாதன் போல்
வேடம் பூண்டதோர் [ஐயனே ....]
2. வஞ்ச நெஞ்சினர்க் கின்சொல் பேசியே
வறுமை நீக்கிட வேண்டியே
கஞ்சன் மாலவர்க் கரிய ஜோதிபோல்
காக்ஷி தர வந்த கர்த்தனே [ஐயனே...]
3. அண்டர் முனிவர்கள் நின்று போற்றிட
மன்றுளாடிய சோதிபோல்
இன்று யானும்மைக் கண்டு கொள்ள விங்
கெழுந்து வந்தருளீசனே [ஐயனே....]
4. வேத மங்கள புராண ஆகம மேவுங்கலைகள் தானாகிய
பூதலத்துயிர்க் குயிரதாய் வளர் பூரணா எனைக் காத்
திடாய் [ஐயனே...]

## சுவாமி பத்தியம்

**ராகம்: ஆனந்தபைரவி**

மாணிக்க வாசகன் கண்ணப்பன் சுந்தரன் வளர் நாவுக் கரசு
முன்வந்துற்றார்ப் போல்
பேணிப் பார்த் திருவாத்தி யமர்ந் தோய் என்று
பேசிய பத்தனே பேரும் ஊரும்
தோணத்தா னந்தமக் கருமையைச் சொல்லி லுன்மனத்
துள்ள துயரம் யாவும்
காணத்தானருக்கனை மஞ்சுநீங்கும் கதைபோல போகுமே
கவலையாவும்
ஆணிப் பார்த்தாராய்ந்து சொல்வாயாகில் ஊணைத்
தானருந்தி உமை பாகர்க்கென்று
பூணிக்கையாகவே பொசிக்க வாரேன் வீணில் பேசாமல் நீ
விளம்புவாயே!

## கங்காளர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய் பத்தனே! உன்னைப் பார்த்தால் மாணிக்க வாசகன், கண்ணப்பன், சுந்தரன், திருநாவுக்கரசன் என்ற என் அன்பரைப் போல் காணுது. உன்னுடைய ஊரும் பேரும் சொன்னால், நீர் கோரிக்கை செய்தது போலே வந்து போசனம் பண்ணி பார்வதி பரமேஸ்வரனுக்கு பிரீதி பண்ணுவோம் பிள்ளாய் பத்தனே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: நீலாம்புரி**

ஒரு பொருளாகி நின்று முலகுயிராயமர்ந்து
முறை முறை யாவுமாகி யுரைவோன் போல்
வருபரதேசியே யான் வாழ்நகரான ஊரும் மருவிய பேரு
மீதென்றறை வேனே
குருவடிவாகி மன்றுள் குலவிய நாதா உந்தன் குழவியே
யானினைந்தேன் குறைதீர
மருவிய பேதை சிந்தை மயலறவே பகர்ந்த
வரவினை நீயுமென்று அறிவாயே!

## தொண்டர் வசனம்

ஒரு பொருளாகியும், உலகாகியும், உயிருக்குயிராகியும், உற்றார் உறமுறையாயுறைபவன் போல வந்த மூர்த்தியே! என்னுடைய ஊரும் பேரும் இன்னதிது வென்று சொல்லுவேன் கேளுங்களையா சுவாமி!

## தொண்டர் தரு-59

ராகம்: தாளம்:

1. எந்தனுடைய ஊரும் பேரே தென்றே கூறும்
என்றெந்தனையே கேட்டீர்.
2. காஞ்சிபுரவரசன் காடவர் கோனெனக் கதிகார மதுவீய்ந்து
3. மந்திரித் தலைமை பூண்டு வையகந்தனையாண்டு வருகின்ற
நாளிலின்று
4. அரனடியவன் றன்னைப் பணி வாங்க லாகா தென்றடியேன்
மேல் பயமாகி
5. ராசன் நினைந்திடவும் பேசு மகவில்லாத
நானுமிசைந்திடவும்
6. தையலுடனே யானும் மெய்யன் திருச் செங்காட்டில்
தவசிகட் கன்னமிட
7. அரனடியவர் பரிகலங்களெடுத் துண்டதாலரனுடைய
செயலினால்
8. பாலன் பிறந்துமே பள்ளியோதி வருமுன் பரதேசிதனைக்
காணாமல்
9. நான்கு திசையும் தேடி நானுங்களைத்து வாடி நங்கை
சொல் தவறாதோடி
10. வந்துங்களையே கண்டேன் எந்தன் வளவிலின்றே வாருங்
களன்ன முண்க
11. எந்தன் குறையகல வந்தருளு மேலோய் சிந்தை துயா
மகலவே!

## தொண்டர் - சந்த விருத்தம்

ராகம்: தோடி

ஒருவனே என்னையாளுடை உத்தமா குருவெனும் வடிவாகிய
கொற்றவா
சிறிய வனுடை ஊர் பேரும் செப்பினேன் வருக நீரமுதுண்டிட
வள்ளலே

## வசனம்

அகோ சரணம் சரணமையா சுவாமி! அடியேனுடைய வரும் பேரும் சொன்னேன் இனிமேலாவது எழுந்தருளுமையா சுவாமி.

## கங்காளர் சந்த விருத்தம்

**ராகம்: தோடி**

பங்கய லோசனின் குருவாகிய பண்பென வடிதொழும்
பத்தாகேள்
கங்கை சூழ் உலகினில் எங்கினும் உனைப்போல கற்றவர்
அறிந்திலேன் உற்றோனே
இங்கென்னை அமுதுண்ண செங்கைகள் கூப்பியே எழுந்தரு
ளென்றனை வருந்தாதே
புங்கமாயன்னங் கறி யுண் பல காரமு மிங்கின்ன தின்ன
வெனப் புகல் வாயே

## வசனம்

மகா விஷ்ணுவைப் போலே மிகுந்த பக்தியுடைய அன்பனே! நீர் அமுதுண்ணக் கூப்பிடுகிறீரே, உமதகந்திலே அன்னங்கறி இன்னதிதுவென்று சொல்லவேணும் பிள்ளாய் பத்தனே!

## தொண்டர் வசனம்

அப்படியே சொல்லுகிறேன் கேளுங்களய்ய சுவாமி.

## தொண்டர் தரு - 60

**ராகம்: ஆஹிரி** **தாளம் : ஜம்பை**

1. கறிகாய் வகை சொல்லுவேன் கங்காளநாதா
கறிகாய் வகை சொல்லுவேன்
அரிநான் முகனுக்கும் அரிதாகிய அன்பர்க்கும்
பிரியமதாய்ச் சமைத்த பெருமை தனையுமக்கு [கறிகாய்]

2. கடலைப் பருப்புமிட்டு புடலங்காயும் பொறியலிட்டு
திடமாக பூஷணிக்காய் தித்திப்புடனேபுளி புளிப்
புடனே சுண்டல் செய்து உண்பதற் கிசைவான [கறிகாய்]

3. பாகற்காய் பச்சடியும்—பரங்கிக்காய் கூட்டுக்கறியாக்கி
தாகமாய்ப் பயித்தங்காய் தாளித்துப் பொடித்தூவி
நாகா பரணன் தொண்டர் [illegible]மாயுண்டிடச் செய்த
[கறிகாய்]

4. கத்தரிக்காய் பருப்புடனே புளியிட்ட கறியும் விருப்புடனே
கொத்தவரைப் பொடித் தூவிக் கொண்டல் தேங்காய்த் திருகி
உற்ற வெண்டிக்காய் தாளித்து உண்பதற்கிசைவாய் சமைத்த
[கறிகாய்]

5. கருணைக் கிழங்கு தாளித்து முருங்கைக்காயும் புளிக்கறி சமைத்து
அருமையாயவரைக்காய் அன்பாகப் பொடித் தூவி
உருசையான வெள்ளிரி உண்பதற்கி சைவாய்ச் சமைத்த
[கறிகாய்]

## தொண்டர் விருத்தம்

**ராகம்: மோகனம்**

இவ்வகைக் கறிகளெல்லாம் இதமுடன் சமையல் செய்து
திவ்விய அன்னமோடு சீனி கற்கண்டால் பாகு
செவ்வையாய்ப் பரமானியங்கள் அதிரசம் செழிப்பாய்ச்செய்து
ஒவ்விடம் புசிப்பதற்கு உண்மையாய் எழுந்திடீரே!

## தொண்டர் வசனம்

சரணம் சரணமையா சுவாமி கங்காள பரமேஸ்வரராய் எழுந்தருளிய மூர்த்தியே! இப்படிக்கொத்த கறிகாய்வகை சகலமும் சமைத்ததைப் பொசிப்பதற்கு எழுந்தருளுமையா சுவாமி.

## கங்காளர் விருத்தம்

**ராகம்: ஹரிகாம்போதி**

நல்லது தொண்டனாரே நவின்ற இக்கறிக ளெல்லாம்
சொல்லிய போதே நாமும் தொடாத புன்கறியைச் சொன்னாய்
அல்லது வேறேதேனும் அருமையாய் உபசரித்து
நல்லவுணுதவு வாரையிந் நாட்டினில் காணேன் நானே.

## கங்காளர் வசனம்

அகோவாரும் பிள்ளாய் சிறுத்தொண்டனாரே! எங்களுடைய தேசத்திலே இந்தக் கறியினுடைய பேரைச் சொன்னவர்களைக் கூட தொடார்களாக்கும். ஆகையால் இந்தக் கறிகளெல்லாம் உண்காத பதார்த்தம் பிள்ளாய் சிறுத்தொண்டனாரே.

## தொண்டர் வசனம்

ஆனால் அப்படியே உண்காத கறிகளைத் தள்ளி உண்ணும் கறிகளைச் சொல்லுங்களையா சுவாமி!

## கங்காளர் வசனம்

சொல்லுகிறேன் கேளும் பிள்ளாய் பத்தனே!

## கங்காளர் தரு - 61

ராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

1. இந்தக் கறிகளெல்லாம் எத்தன் நாட்டிலுள்ளோர்க்கு
ஏச்சாமே, உண்டால் பேச்சாமே தொண்டா
அந்தரன் விபூதிப்பையே இந்த பூஷணிக் காயே
அறிவாயே இதைத் தெரிவாயே பத்தா [இந்த]

2. பரங்கிக் காயே உமையாள் ஸ்தனங்கள் என்றறிவாயே!
பயித்தங்காய் விரலாக வகுத்ததைத் தெரிவாயே!
முருங்கைக்காய் சடையாகும் அரன்கால் கிண்கிணியாக
முற்றுமே கத்தரிக்காய் மாகுற்றபென்றுரைப்பார்கள்
[இந்த]

3. பாகற்காய் ருத்ராக்ஷ மாகச்சொல்வார் பக்ஷமாய்ப்
பகரிலவரை வாளாய்க் கூறி வருவார் கேளாய்
நாகாபரணம் புடலங்காய் ஆகாதென்பாரிதை
நாடாரே தொண்டர் தேடாரே பத்தா [இந்த]

4. கருணைக் கிழங்கு சிவன் கருணையாகும் பத்தனே
கண்டாயோ இதை நன்றாக நீயும்
கிரண மெனு மறிவின் திரணமாகுமே வெண்டி
தீண்டாரே இதை வேண்டாரே கண்டாய் [இந்த]

## கங்காளர் விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

பரங்கிக்காய் தொண்டா பார்வதி கலசம், பாகற்காயக்க
மாலிகையாம்,
பரமனாரணியும் பூதியின் கோவில் பார்த்தையே பூஷணிப்
பழமே,
வரங்களைக் கொடுக்கும் கருணை என்பார்கள் வாளம்பாயுத
மிகு அவரை
வாகை மாலிகையாம் நாகமாம் புடலை, வளர்சடை
முருங்கையின் காயாம்,
உரங்கொளுமெமனை உதைத்த பாதத்தில் உதித்திடுங்
கிண்கிணிக் கத்தரிக்காய்
உலகினில் பயித்தங்காய் விரலென்று உண்டிடார் தொண்டர்
கண்டாய்
பரங்களை நினைக்கும் பத்தனே ருத்திராபதி வளர் மனிதர்
போலிந்தப்
பாரிலுண்டாமோ கண்டிலே னன்பர் அனங்கறி படைப்பவர்
தாமே!

## கங்காளர் வசனம்

கேளும் பிள்ளாய் பத்தனே! பரங்கிக்காய் பார்வதி கலசம், பாகற்காய் ருத்ராக்ஷமாலையாகும். பூஷணிக்காய் விபூதிப்பையாகும், கத்தரிக்காய் அரனுடைய பாதத்திலணியும் வீரகண்டாமணியாகும், பயித்தங்காய் கைவிரலாகும், முருங்கைக்காய் திருச்சடையாகும், புடலையோ அரனணியும் நாகாபரணமாகும். வெண்டிக்காய் அக்கினிக் கொழுந்தாகும், அவரையோ வாளாயுதமாகும், கொத்தவரை அம்பாகும், கருணையோ வரங்களைக் கொடுக்கும் கருணைக் கிழங்கு, ஆகையால் இந்தக் கறி வகைகளைச் சொன்னவர்களைக்கூட எங்கள் தேசத்தில் தொடார்களாக்கும், என் மனம் போலே நல்லன்னம் படைப்பவர்களை, இந்த ஊரிலே கண்ணாலே கூட காண்பதற்கு அரிதாகப் போனபடியினாலே இனிமேல் எங்கள் தேசம் போய் போசனம் புசிக்க வேணுமே யல்லாது வேறில்லை சிறுத்தொண்டனாரே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: காம்போதி**

கஞ்சன் மாலறியாச் சோதிக் கழலினை விரும்புமன்பர்
செஞ்சரணங்கள் தன்னைச் சிரசினில் சூடும் நாயேன்
முன் செய்யுந் தவத்தால் வந்த முதல்வனா யுறைந்த நாதா
உன் செயலது போல் உண்ண உதவுவேன் கறிகள் தானே!

## தொண்டர் வசனம்

தேவரும், மாலயன்முதல் அறியாச் சோதிசுயம்பினை விரும்பும் பத்தர்கள் அடியைப் பரவும், நாயேன் பூர்வீகத்திலே செய்த சிவபணிவிடையினாலே ஈஸ்வரனைப்போலே எழுந்தருளிய மூர்த்தியே! உங்களுடைய மனம் போலே கறியமுது படைக்கிறேன். உங்கள் உத்திராபதி தேச வழக்கத்தைச் சொல்ல வேணுமையா சுவாமி!

## சங்கமர் வெண்பா

**ராகம்: சங்கராபரணம்**

தேச வழக்கமும் என சித்த நினைப்பல்லாது
பேசுவது மொன்றே பிசகல்ல — நேசமுடன்
உண்பது போலே யெமக்கு உதவுவது திண்ண மெனில்
அன்பனே சொல் வாயறிந்து.

## வசனம்

அகோ வாரும் பிள்ளாய் பத்தனே! எங்கள் தேச வழக்கம் மனதில் நினைப்பதும் வாயினால் சொல்வதும் ஒன்றேயல்லாது வேறல்ல. என் மனம் போலே நல்லன்னம் படைக்கிறேனென்று சொன்னீரே அது நிசம்தானா சொல்லும் பிள்ளாய் சிறுத்தொண்டனாரே.

## தொண்டர் வசனம்

அப்படியே நிசந்தானையா சுவாமி!

## சுவாமி தொண்டர் தர்க்கம் - தரு - 62

**ராகம்: சஹானா** **தாளம்: ஆதி**

**கண்:** அப்படியே நீ யெனக்கு சொல்படிக் கறி வகைகள்
அமுது படைப்பது எமது மனப்படி அரைகுவாய்
சத்தியமே!

**தொண்டர்:** சொல்லிய வாக்குச்சத்தியம் அல்லால்வேறுண்டோ சுவாமி - சொற்றவறாத அறத்தினுமின்னொறு நற்றவம் வேறுண்டோ.

**கங்:** நற்றவம் சிவனடியார் சித்தமகிழ-அமுது நடத் திடில் கைலையில் தடத்தினில் ஒயிலாக நடத்திடு வார்காணே.

**தொண்டர்:** காணா உத்தன் சீரடியைக் கண்டபோதே-சுவாமி கர்ம வினைகளும் வறுமையாம் பிணிகளும் கடந்தேனே நானே.

**கங்:** சுவாமி யென்று பணிகின்ற தர்மவானே பத்தா-மனச் சம்மத மாகவே உன் மனைமீதினில் தருவாய் அன்னந்தானே.

**தொண்டர்:** தருகிறேன் நீருண்ணுங்கறி அன்னமுடனே-சுவாமி சாற்றுவீருன் மனவேற்றுமையில்லாமல் சல்தியிலே இன்று.

**கங்:** இன்று நாமுண்ணுங் கறிகள் அன்ன மெமக்குத் தாரேன்
என்றது போலவே கெண்டியில் நீர்தனை என் கையிலே வாரே!

**தொண்டர்:** வார்க்கிறேன் தாரையினீரை வாங்கவே வாரு மெங்கள்
மாதவனே ஒயிலாதவனே பொயிலாதவனே சுவாமி

**கங்:** சாமியென்று தாரை வார்த்த தர்மவானே தொண்டா
சாற்றுவேனன் னங்கறி சாப்பிடுந்தினமது சம்பிரமாகவே!

## கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

ஐப்பசியும் பரணி யமுதருந்தக் கூறி ஆடவரும் அணங்கும் முதல் வருணமானோர்
ஒப்பிருவர் ஈன்ற மகவாயு மார்பிலுறை முன்னூல் உளனாய் மாமறையோர்ந் தோனாய்ச்

செப்பிய சேயனை மடிமேல் பிதா வறுத்துச் செய்து கறி
சித்திரைப் பரணி சிவனிராவில்
எப்புவி யோர் புகழ்ந்தேத்த எனையழைத்து ஈசனெனப்
பணிந்தமுது இடுவர் தாமே!

## கங்காளர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய சிறுத்தொண்டனாரே! எங்கள் ருத்திராபதி தேசத்திலே, நாமன்னம் உண்பது வருஷத்திற்கு ஓர் தினமாகும். அந்தத்தினமேதென்றால், ஐப்பசி மாதம் பரணி நக்ஷத்திரத்தில், அன்னங்கேட்டு வந்து விடுவோம். அதற்குள்ளாக ஆடவராகிய ஆணும் பெண்ணும், முதன்மைச் சாதியாயும் குலத்தில் முதற்குலமாயுள்ள, பேர்களைப் பார்த்து, அவர்கள் வயிற்றில் பிறந்த பிள்ளை ஒரைந்து வயதுள்ளவனாகவும், நாலு வேதம், ஆறு சாஸ்திரம், பதினெண் புராணம், இருபத்தெட்டாக மமுநதெரிந்தவனாய் முன்னூலிலங்கு மார்பனாயுள்ள பிள்ளையை தாய்மடியிலிருத்தி, தகப்பனறுத்துக் கறி சமைத்து சித்திரை மாதம் பரணி நக்ஷத்திரம் சிவனிராவாகிய சதுர்த்தசியும் கூடிய தினத்தில் அன்னம் படைப்பார்கள் கேட்டீரோ சிறுத்தொண்டனாரே.

## தொண்டர் பத்தியம்

**ராகம்: ஆனந்தபைரவி**

திருநீல கண்டனே கனல் மேவு முண்டனே கைலாச வாசா
வென்றுன் கழல்கள் பாடி
வருமேலை யண்டரும் புலி பாம்பும் கண்டிட மறை ஒல
மென்றிட மன்றுளாடி
ஒருபாலன் இல்லெனக் குளதாதலின் இன்றுனக் குணவாக
என்று நான் உதவ ஓடி
வரு மால முண்டோர் வயிறாற வின்றுதான் வருவாய் நீ
உண்டிட என் மனையை நாடி
திருமேவு முருவான திரிசூலத்தோய்-கருமேவும் பிறவியாம்
கவலை தீர
குருநாதனாய் வந்தசேரவே இன்று-தருவேனுன் மனம் போலத்
தமியன் தானே!

## தொண்டர் வசனம்

சரணம்! சரணம் ஐயாசுவாமி! திருநீலகண்டனே! கைலாச வாசனே! என்று தேவரும் மறையோரும், பதஞ்சலி, வியாக்கிரமரும் புகழ்ந்து பாட மன்றுளாடியவன்போல் வந்த நாதனே! ஆலமுண்ட வயிறாற அமுதுண்ண வந்தவர் போல வந்த மூர்த்தியே! உன்மனம் போல நல்லன்னம் கறி படைக்கிறேனையா சுவாமி.

## கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

அப்படியே நல்லது முக்காலத்துள்ளே அரன்பூசை முடிப்பதற்கு
அமுது ஈந்தால்
இப்புவியோர் புகழ்ந்தேற்ற எந்தையான ஈசர் பதம் பெற்றிருப்
பீரிமையோ ரேற்ற
மைப்பொலியுங் கன்னியும் நீயு மொருமையோடு வளமாகச்
சமைத் தழைக்க வருகுவாயே
தற்பரையில்லாத பொருள் மகிழ்ந்தானந்த சாயுச்சிய
பேறடைவீர் தர்மவானே!

## வசனம்

அகோ வாரும் பிள்ளாய் பத்தனே! நமது பூசை மூன்று சாமத்திற்குள்ளாக முடியவேணும் பிள்ளாய் பத்தனே!

## தொண்டர் வசனம்

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: கேதாரகௌளம்**

கங்காளர்க் குரைத்த வார்த்தை கசகிடா தெமது தாரம்
என் காதல் போலே அன்பர்க்கின்பமாய் மனமொன்றாகி
சிங்காரக் குழந்தை தன்னை திரிசூலத் தண்ணற் கூட்ட
சங்கரா கிருபை செய்வாய் தாளிணை சரணம் தானே!

## வசனம்

அரகரா மகாதேவா! இன்று கங்காளராகிய தம்பிரானுக்க முதுகறி சொல்லி வந்தது போல என் பெண்ஜாதியும் ஒருமையாகும்படி கிருபை செய்ய வேணுமையா சுவாமி!

# தொண்டர் தரு:-63

ராகம்: தாளம்:

1. பொன்னார் கடம்பணிமூலத்தில் பொலியும் தந்திமுகனாய்—
சுடர்
மின்னார் பரவெளி மேவிய விமலா சிவசரணம்

2. பொய்யிலா மனையாளுக் காயிந்த புவியா வையும் தேடி
மெய்யிலே வளர் திருவெண்காட்டு மெல்லியை மணம் சூடி

3. வாழ்ந்தேன் திருக் காஞ்சியில் மதிமந்திரியென மகிழ்ந்
தேன்-கிளை
சூழ்ந்த மகவினுக் காயிந்த திருச்செங்காட்டைத்
தொடர்ந்தேன்

4. அன்னதானஞ் செயதானன்பர்பால் அமுதேற்றுண்ட
பலத்தால்—அரன்
தன்னருள்பெற மகவீன்றபின் தவசி மறைந்தலுத்தே

5. தேடினேன் எங்கும் ஓடினேன் திரு ஆத்தியில் கண்டு
சீர்பதம்
சூடினேன் அமுதுண்கவே கறி சுதன் வேண்டுமென்றார்க்
கிதம்

6. கங்கை சூடிய அடியார்க்கின்று கரநீர் கையில் வார்த்தேன்
மங்கை யாளிதற் கின்பமாக என் மனம் போல் நின்று
போற்ற

7. செய்கு வாயின்று ஐயனே என்றுன் திருத்தாள் தன்னைப்
பணிந்தேன்
மைகுலாவிய களனே மதக் களிறே அருள் இரந்தேன்.

8. இன்னுமோ ரகந்தன்னிலே விலைக்கென்றுமே பிள்ளைக்
கொண்டுமே—மதக்
கன்னல் வேளெரித் தண்ணலன்ப ருக்காகுமோ
களிப்பாகுமோ

9. இமைப் போதினும் மறவாத வருளம் வாழ்கின்ற மதியே—
நீயும்
இமையிலெம தடியாள் மனம் இசையச் செய் கணபதியே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

கணபதீசரைத் துதித்துக் கன்னியை தொண்டர் காண
மனைவியுஞ் சென்ற சேதி வள்ளலே அறையுமென்ன
துணைவியே யரன்போல் வந்த சோதியைக் கண்ட மாத்ரம்
இணையிலாப் பொருளாம் வார்த்தை இசைப்ப நீ கேளென்றாரே!

## பொது வசனம்

கணபதீசனைத் துதித்து சிறுத்தொண்டர் மனைவியை நாடிப் போம்பொழுது, நடந்தசேதி என்ன வென்று வெண் காட்டு நங்கை கேட்கத் தொண்டனார் சொல்லத் தொடங்கினார்.

## தொண்டர் நங்கை தர்க்கம் தரு - 64

**ராகம்:** **தாளம்:**

**நங்கை:** கண்டதுண்டோ ஐயனே — கடவுளை
கண்டதுண்டோ ஐயனே
அண்டபிண்டம் யாவும் தானாகி நின்ற
வொன்றைத் தாவும் பொருளைக்
கண்டு கொண்டு மேவும் சிவோகம் கொண்ட
தொண்டர்
பரவுமிடமதைச் சென்று நாடியவர் சீரடிமலரை
[கண்ட]

**தொண்டர்:** மங்கையே நீ கேளாய் அமுத வாக்கினைப்
புகல் வேனே!
கங்கை சூழுல கினிலே உத்தர கோச மங்கை
பாகன் மயலே பெருகி
எங்குந் தேடுங்கலை ஆத்தியில் திங்கள் சூடிபோல
உருக்கொண்ட
சங்கமராகிய சம்புவைக் கண்டதை [மங்கையே]

**நங்கை:** சம்பு வென்ற நாதா அரனை நம்புகின்ற நீதா
தர்மத்
தெம்பு கொண்டபோதா தொண்டரன்பு
கொண்ட நீர்தான் சென்று
பண்பு கொண்டவன முண்க வென்ற வரை
[கண்ட]

**தொண்டர்:** ஆலமுண்ட ஆதி பலபல கோலங்கொண்டு காதி
வருவ னீலமென்று மேதியிமனை
ஆள மண்ட மோதும் குருபரன் கோலங் கொண்ட
குருநாதன் விண்டமொழி [மங்கை]

**நங்கை:** ஓதுகின்ற தென்ன மறை வேதநீதியிதென்று
நன்றாய் அடியார்கள் கொண்டு நண்ணா- தாங்கள்
ஓத வென்று மன்னா மனதில் வேதையான
தற்போதமானதுற [கண்ட]

**தொண்டர்:** ஒருவருக் கொரு பிள்ளையாயுள்ள சிறுவனைக் கறி
வள்ளிசாய்
தருகுவை யேல் அன்னங் கொள்ளு வேனெனவே
இருப்பவரை விள்ளவே தாரை தருகுவேனென
கர நீர் வார்த்ததை [மங்கை]

## தொண்டர் கொச்சகம்

**ராகம்: புன்னாகவராளி**

ஆத்தி நீழற்கீழீசன் அமர்ந்த குருவடிவான மூர்த்தி தனைக்
கண்டு மொழிந்த வனா நன்மகவாய்
தோத்திரத்திற்கோர் சுதனாய்க் குறைவில்லாக் கல்வியனாய்
ஏற்றகறி நீ யளித்தால் யின்றுண்பேனென்றாரே!

## தொண்டர் வசனம்

அகோ வாரும் பெண்ணே! வெண்காட்டு நங்கையே! ஆத்தியின் கீழிருந்த குருமூர்த்தியைக் கண்டு அன்னமுண்க வாரும் சுவாமி என்று கூப்பிட்டேன், அதற்கவர் சொன்னதாவது, தங்கள் உத்திராபதி தேசத்திலே, வருஷத்திற்கோர் தரம் அன்னம் உண்கிறதாம், அதுவோ, ஐப்பசி மாதம் பரணி நக்ஷத்திரத்தில் அன்னம் கேட்டு, சித்திரை மாதம் பரணியும் சிவனிராவாகிய சதுர்த்தசியும் கூடிய தினத்திலே கோத்திரத்திற்கோர் பிள்ளையாய், சகலகலையறிந்தவனாயுள்ள பிள்ளையைத் தாய் மடியிலிருத்தி தகப்பனறுத்துக் கறிசமைத்துப் போட்டால் சாப்பிடுகிறதென்று சொன்னார்கள். அப்படியே நான் அன்னமிடுவேனென்று சொல்ல, அப்படி நிசம் தானாவென்று கேட்க, அதற்குத் தாரை வார்த்து வந்தேன். ஆகையால் எவர் வீட்டிற்குப்போய் பிள்ளையை விலைக்குக் கொள்ளலாமடி, பெண்ணே!

## நங்கை விருத்தம்

**ராகம்: முகாரி**

நன்று நன்றிந்த வார்த்தை நவின்ற தின்புறக் கேளும்
இன்று நம் மகலைவச் சேதித்தெம்பிரார்க் கமுதளிப்போம்
ஒன்றும் நீர் அஞ்சவேண்டாம் உமைபாகன் செயலல்லாமல்
இன்றிந்தப் புதுமையேது இருளற என் சொற்கேளீர்

## நங்கை வசனம்

சரணம் சரணமையா சுவாமி என் பிராண நாயகா. இது ஈசன் செயலேயல்லாது வேறில்லையென்று உங்கள் மனதில் தோணாமல் பேசுவது அழகல்லவே யென் பிராணநாயகா!

## தொண்டர் நங்கை தர்க்கம் தரு-65

**ராகம்:** **தாளம்:**

**தொண்டர்:** தோணாத மனைவே தென்றெந்தனையே கேட்ட
துணைவியே கேளடி பெண்ணே என்
மனைவியே கேளடி கண்ணே!

**நங்கை:** மனதொடு தாரைநீர் வார்த்தின்னோர்
மனைதன்னில் மகவினைக்
கேட்டாலீவாரோ — இந்த நகைமொழி நாட்டார்
வையாரோ

**தொண்டர்:** வையாமல், மனமது நொய்யாமல் அமுதிட
வகையேதெனக்
குரைமானே-இந்த செக மாதர் பணி பதத்தேனே!

**நங்கை:** பணிவது உமதுட பாக்கியமானாலும் பரதேசிக்
கமுதிடப்
பாரும் வந்த குருமொழிக் கிசைவாகக் கூறும்

**தொண்டர்:** கூறுவ துன்னுடைய குணமேதோ அப்படியே
குறிப்பல்லால்
வேறினி ஏது-எந்தன்-கருத்துனையன்றிக் கூறாது

**நங்கை:** கருத்தொருமித்து வளர் காதலனே சீராளக்
கண்மணியை
அழைத்துவாரும்-இன்று நம் மகவை யழைத்து
வாரும்

**தொண்டர்:** வருகிறேன் நீயதற்காகிய வகையெல்லாம் வண்மையாய்ச்
சேகரி மானே-ஈதுண்மையென்றறிகுவாய் தேனே

**நங்கை:** உண்மையாய் நீர் மகன் ஓதுங் கூடத்திற்கேகி ஒரு நொடியில்
அழைத்துவாரும்-சென்று-அரைநொடியி லழைத்து வாரும்

## நங்கை வசனம்

சரணம் சரணமையா சுவாமி! நீரிந்தக்ஷணமே பள்ளிக் கூடத்திற்குப்போய் பிள்ளையை அழைத்துக் கொண்டு வாருங்களையா சுவாமி.

## தொண்டர் வசனம்

அப்படியே நல்லதடி பெண்ணே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்; மோகனம்**

நங்கையு மனுப்பத் தொண்டர் நாடியே மகனைத்தேடி
கங்காளர்க் கமுதளிக்கக் கடுகியே வழியைக்கூடி
திங்களை முடித்தோனருளைத் தியானமே புரிந்து கொண்டு
பங்கயப் பதம் சேப்பப் பதறியே நடக்கின்றாரே!

## பொது வசனம்

சிறுத்தொண்டர் திருமருகல் வருகிற விதம் காண்க.

## தொண்டர் தரு-66

**ராகம்: சௌராஷ்டிரம்** **தாளம்: ஜம்பை**

1. நடந்தாரே தொண்டரும்-மருகல் நாடி
நடந்தாரே தொண்டரும் [நடந்]

2. படர்ந்த ஆத்தியினீழல் இருந்த பரனை நினைந்து
அடர்ந்த மருதவேலி கடந்து மகனைத்தேடி [நடந்]

3. புன்னை யசோகு நெல்லி பொருந்தும் வனங்கள் தள்ளி
கன்னல் மொழியாள் சொல்லை உன்னி நினைந்து மெல்ல [நடந்]

4. காவில் கிளிகள் பூவை தாவிச் சிவனார் பாவை
கூவிக்குலாவுங் காவை மேவி மருகல் நாடி [நடந்]

5. அஞ்செழுத்து நீறும் துஞ்சாம லணிவோரை
நெஞ்சகத் திலவர்கள் செஞ்சரணம் நினைந்து [நடந்]

6. ஆவிக்கொரு துணையாம் தேவர் குருவினையைத்
தாவிக் கொண்டே மான் ஓதுங் கூடத்துக் கேகி [நடந்]

7. அஞ்சுமுகத்துக் கெல்லாம் ஆறுமுகம தானோர்
செஞ்சரணந்தன்னைச் சிந்தித்து வழி கூடி [நடந்]

## சபை விருத்தம்

இப்படித் தொண்டரேக ஈசனும் தன்பால் தொண்டர்
செப்பிய வார்த்தை யெல்லாம் கனவிலே தெரியவெண்ணி
சிப்பிய மறைகள் சொன்ன திரிபதார்த்தத்தைப் பாலன்
செப்பென உபாத்தியார் தெரிவித்ததுரை செய்வானே!

## பொது வசனம்

இந்தப் பிரகாரம் திருமருகலுக்கு சிறுத்தொண்டர் நடக்க. இப்பால் உத்திராபதியார் திருவுளத்திலே சீராளர்க்குத் தன்னிடத்திலே நடந்த சேதியெல்லாம் கனவிலே தெரியும்படி எண்ண இப்படி இருக்கும்போது பாலன் பள்ளியோதிய உண்மையைச் சொல்லுவாமென்றது காண்க.

## சீராளன் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

எழுத்து முதலைந்து இலக்கணமு மோர்ந்தேன் எண் வகையாம்
கணக்கறிந்தேன் ஈதல்லாமல்
வழுத்திய நான் மறை தேர்ந்தாறங்க மோர்ந்தேன் மற்றுமோர்
ஆகமம இருபத் தெட்டும் தேர்ந்தேன்
பழுத்த பதினெண் புராணம் கலை யெட்டெட்டும் படித்தேன்
உட்கரணம் பிறக்கரணமெல்லாம்
கழித்த முப் பொருளும் நால்வாக்கியம் சொல்லும்
கருத்தையினி அடியேர்க்குக் காட்டுவாயே!

## சீராளன் வசனம்

சரணம் சரணமையா சுவாமி என்குருநாதனே! அடியேன் இந்நாள் வரை உபதேசித்த பொருளெல்லாம் கண்டேன். இனி மேலாவது நால்வாக்கியத்தின் பொருளைச் சொல்ல வேணு மையா சுவாமி.

## உபாத்தியாயர் பத்தியம்

**ராகம்: ஆனந்தபைரவி**

சொல்லுவேன் ஈதல் அறம் அல்லலற்று சுத்தமாய்த் தேடுவது
பொருளாமன்பாய்
மெல்லியோடொருமையாய்ப் புணர்வதின்பம் இவை மூன்றும்
விட்டதே வீடாமென்பர்
மெல்லியொடு கலந்துலகம் வளரச் செய்து, மாலாகிக் காத்துப்
பின் வதைக்க ருத்ரன்
நல்ல குருவாகிய தோர் அமலன் சொன்ன நற்பொருளை
உந்தனுக்கு நான் சொன்னேனே!

## சீராளன் தரு - 67

**ராகம்: புன்னாகவராளி** **தாளம்: ஜம்பை**

சொன்னது தெரிந்தேன் இனிமேல் கேட்கச்
சொல்லுங்கள் அறிந்தேன்
சகல பொருள் மன்னு வேதாகமத்தின் வழங்கும் தத்தோமசி
வாக்கியம் பெருகவே நோக்கியீன் புறவே நீர் [சொன்ன]

## உபாத்தியாயர்

தத்தென்பதத்து விதம் தற்பதமென்பார்கள் சாற்றுந்
தோமென்பது தொன்பத மெண்பத் தொன்றாம்
அத்துவா தரிசனம் விட்டுநீங்கி அடைவதே
ஐக்கிய பதமாகுமிங்கு
தத்துவ மற்று மொரு பொருளும் பெற்று தானான ஞானமாம்
தலத்தைக்கண்டு
நித்திய பரிபூரண மொன்றானானாகில் நிலத்தைக்கிய
மென்பார் நீணிலத் துள்ளோரே!

## சீராளன்

நிலத்துள்ளோர்க் கெல்லாம் மகாவாக்கியம் பலித்துள்ளோர்க்
கல்லால்
முத்தியெந்த பலத்தாலே யுண்டதை சொலித்தாரு மின்றதை

நலத்தாவிக் கொண்டதை பெலத்தோதிக் கண்டிட
சொலித் தாருமையா நால் வாக்கியத்தின் பொருளைச்
சொலித்தாருமையா.

உபாத்தியாயர்

அறமுதல் நாலுமாவாக்கிய நாலும் அறைகின்றோம்
அறிந்தையோ ஈதறியாப் பத்தி
திறமென்ற சுருதிச் சொல் மொழியைக் கேட்டு சிவபூஜை
அடியர் பணி செய்து நின்றால்
பரமானியத் தெடுத்துன்னைப் பலனாக் கொண்டு பாலிக்கும்
பாலனே இப்பாரிலேதான்
அறமான ததிகமென்று உன்பிதாவும் அடியர் பணி
செய்கின்ற தறிந்திடாயே!

சீராளன்

அறிந்தேனே அய்யா அடியர் பணி தெரிந்தேனே மெய்யா
முடிமீதில் கரந்தையணி சடைக் கடவுளார் பணிவிடை
தெரிந்தேன் அறம் பொருளின்ப வீடென்பதை [அறிந்]

சீராளன் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

ஐயனே குருவே நாயேன் அரிமுதல் கலைகள் யாவும்
பையரோடோதி யின்னாள் பயின்றிடும் நாளில்லாத
நொய்யும் புன் சோம்பலான நோயெனை வாட்டுதையா
வெய்ய வித்தூக்கம் நீங்க விவரமே தறைகுவீரே!

வசனம்

சரணம் சரணமையா சுவாமி என் குருநாதனே! அடியேன் சகலகலைகளையும் தேவரீரிடத்தில் ஓதிவந்த நாளெல்லா மில்லாத சோம்பலும், நித்திரையுமாக வருகுது, அடியேனுக்கிந்த சோம்பல் நீங்கும்படி, கிருபை செய்ய வேணுமையா சுவாமி!

உபாத்தியாயர்: வெண்பா

**ராகம்: சங்கராபரணம்**

பாலனே சீராளா பண்ணவனாரன்புடைய
சீலனேயான் சொல்லும் சேதிகேள்-நூல்களிலே
சொல்லிய பஞ்சவத்தை தொடராதலாலதற்கு
மெல்லவே போய் நித்திரை செய்யுமே!

### வசனம்

அடாவடா சீராளா! குருபக்தியுடைய குழந்தாய்! இந்தத் தூக்கம் பஞ்சாக்ஷத்தையானதால், அதை நீக்கப் பருவ மில்லாத படியினாலே, சிறிது நேரம் கண்ணுறங்கி எழுந்து வாடா குழந்தாய்!

### சீராளன் கலித்துறை

**ராகம்: ஹரிகாம்போதி**

குரு ஓதியபடி ஓதிடுங் கூடத்திலோர் புறத்தில்
உரையா தரனடி மீதில் கருத்தையும் ஊன்றி வைத்து
தரை மீதிலே கலிங்கத்தை விரித்துத் தலையில் கையை
முறையாக வைத்தங்கனே தூங்கிக் கண் விழித்தனனே

### வசனம்

உபாத்தியாயர் சொன்னபடி சீராளனானவன் வேஷ்டியை தரையில் விரித்துத் தூங்கி, நித்திரையிலே சுனவுகண்டு அரண்டெழுந்தது காண்க.

### சீராளன் விருத்தம்

அன்னை பிதா தனிலேயும் அதிக அன்பாய் அடியேனை
ஆதரிக்கின்றீர் நீர் தான் இன்னலணுகாதபடி
அறிவு மல மெய்யா மென்றடியேனுக்கு சொன்ன
குருபரனே! யான் தூங்கையிலோர் சொப்பனம் கண்டேன்
அதனைச் சொல்லவென்றால் என்னுடைய நாவரண்டு
தடுமாறு தாதலினால் என் செய்வேன் எந்தையாரே!

### வசனம்

சரணம் சரணமையா சுவாமி! என் குருநாதனே! அன்னையைப் போலும், பிதாவைப் போலும், அதிகபட்ச முடைய குருநாதனே! நான் தூங்கும்போது, கண்ட சொப் பனத்தை என்னவென்று சொல்லுவேன், சொல்ல வென்றால், என் நாவரண்டு போகுதையா சுவாமி!

### உபாத்தியாயர் வசனம்

நீ கண்ட கனவைச் சொல்லும் பிள்ளாய் சீராளா!

## தரு -68

**ராகம்: ஆனந்த பைரவி** **தாளம்: ஆதி**

1. மாயமோ ஈதையனே கண்டகனவு
ஞாயமோ ஓதையனே!
காயுமோர் நஞ்சையும் நேயமாய் யூண் செய்யும்
தூயவனாத்தியமர்ந்து தொண்டர் தனை மறைத்தது
[மாயமோ]

2. அமுதுண்ணும் பேரைத்தேடி பிதாயேக அன்னைபால்
கங்காளரோடி
எமதுபசிக் கன்னம் வாடித்திடுவாயென்று ஈசனுமுண்
காமலோடி
உமது கணவனார் வந்தால் எமதிடமனுப்பவர் வந்தால்
அமுது கொள்வே னுகந்து. அன்னையென் றோடினது
[மாயமோ]

3. அன்ன முண்கவே யோடிக் கங்காள ஐயர் தனையே நாடி
இன்னிலங் காணாமலோடி ஆத்தியடியிலிருந்தவர்
தன்னைக் கூடி
பொன்னடி பணிந்திட்டுப் போஜன முண்ணக் கூப்பிட்டு
என்ன கறி என்று கேட்டு ஈசன் செய்த விளையாட்டு
[மாயமோ]

4. சொன்ன கறியாகாதே உண்டாலெமக்குத்
தோஷமுண்டாமிப்போதே
சின்ன மகவோ ரைந்து வய்துள்ள சிறுவனைத்
தாய் மடிமீது
அண்ணலறுத்துக் கறியாக்கி வைத்ததைக் கூறி
உண்ணவென்று பசரித்தூட்டுண்பே னென்றது
[மாயமோ]

5. அப்படியே யிசைந்து தாரைநீர் வார்த் தன்னையுடன்
விரைந்து
செய்திட அன்னையுகந்து நமதுட சிறுவன் தன்னையே
அரிந்து
மைப் பொலியுங் கன்னி மங்கை மணாள னுண்ண
இப்போதுணமுயுமென்ன எந்தை வாராரீதென்ன
[மாயமோ]

சமைத்த கறியமுதைக் கலமதில் தம்பிரானார்க்கேயதை
நிவேத்தியஞ் செய்ததை உண்ணையா வென்று நீள்
சடையார்க்கே யோத
சமர்த்தாய் விழித் தெழுந்தே தாய் தந்தையார் மகிழ்ந்தே
எமைத் தாவெடுத் தணைத்ததே ஈசனைப் புகழ்ந்தது
[மாயமோ]

## விருத்தம்

மாயமாய் அடியே னின்று வருந்தியே கனவு கண்ட
ஞாய மெய்யாகுமையா நடப்பது பொய்யல்லத்தான்
நேய மாய் அன்னை தந்தை நினைவு போலே என் புத்தி
தாயக மாகும் வண்ணம் சாற்றுவீர் சரணந் தானே!

## வசனம்

சரணம் சரணமையா சுவாமி! இந்தக் கனவு மாயம் போல் தோணுது, மறுபடி யோசித்தால் ஞாயமே யல்லாது வேறில்லை. ஆகையால் இதன் பொருளைச் சொல்ல வேணுமையா சுவாமி!

## தரு-69

ராகம்: காம்போதி　　　　தாளம்:

கனவின் பொருளைச் சொல்லுமையா-இன்று நான் கண்ட
கனவின் பொருளைச் சொல்லுமையா.

1. நினைப்பில்லாமல் ஏதோ வினைப்பயன் போல் காணுது
எனக்கும் பொருள் விள்ளாதே மனக்கிலேசங்கள் தோணுது
[கனவின்...]

2. அன்ன தானஞ் செய் பலன் தானோ முன் செனனத்தில்
அரன் பூசை புரிந்ததுதானோ யீதல்லாமலே என்ன தவஞ்
செய்தேனோ
மின்னும் சடையார்க்கு யானே உண்ணும் படியாய்க்கனா
கண்ணில் கண்டதைத் தானே! [கனவின்...]

3. அண்டர் முனிவருங் காணாத அமலனுருக் கொண்டு.
மென்மனையில் நாணாதே வந்தன்ன முண்ண
பண்டுமென் தந்தைதாயார் தொண்டர் பூசையில் நேயம்
கொண்டதினாலே நீலகண்ட னெனையுண்கவும்
[கனவின்....]

4. ஏதோ மயக்க மென்றெண்ணாதீர் இந்தக் கனவு
நீதமாகுமே சொன்னேனே சிவன் கங்காள
நாதனாகவே வந்து தோதகம் பேசி சிந்தை
பேதம் தவிர்த் தெந்தை பாதம் பெறவே வந்த

[கனவின்....]

## உபாத்தியாயர் வெண்பா

**ராகம்: சங்கராபரணம்**

கனவு கண்ட பாலனே கலங்காதே சொன்னேன்
நனவு கனவாக நடக்குமே — என நூல்கள்
சொன்னாலுமிக் கனவு தோன்றினது நல்லதல்ல
பண்ணாய் சிவனைப் பணிந்து

## வசனம்

ஆகோ வாரும் பிள்ளாய் சீராளா! நீ கண்ட கனவு நனவிலே காணுமென்று சாஸ்திரஞ் சொல்லியிருந்தாலும் சிவாகமத்தையோதி சிவதியானமாக திருவாசகத்தை ஓதும் பிள்ளாய் சீராளா!

## சீராளன்

அப்படியே மகாபாக்கியமையா சுவாமி!

## சீராளன் சந்த விருத்தம்

தில்லை மூதூர் மேவும் செல்வமே! என் சிந்தைக் கினிப்புள்ள
வில்வமே
வல்லியோ டாடிய வள்ளலே! என் மயக்கறுப்பாயின்று
மெல்லவே!
கல்லகத்தில் வாழுங் காட்சியே! என் கலக்க மறுத்தாளும்
சூழ்ச்சியாய்
அல்லல் வினையறுத் தாளுமே எமையாளுடையா
எமையாளுமே!

## வசனம்

சிதம்பரத்திலே நடனஞ் செய்யும் அடியார்கள் செல்வமே! என் சிந்தைக்கின்பமாகிய வில்வமானோனே! வல்லியோடன்று வாது பேசிய நாதனே! என் மயக்க மறுப்பாய் மெல்லவாக! கல்லகமாகிய ஸ்தல வாசனே! என் கலக்க மறுத்தாளுவாய்! அல்லல் வினையை அறுத்து என்னையாள்க வேணுங் கடவுளே'

## தேவாரம்

**ராகம்: ஹரிகாம்போதி**

கார் பூத்த கண்டா கமலனரிகாணாத
ஏர் பூத்து நின்றாய் எழில் வானவர் போற்ற
தார் பூத்த கொன்றை சடையா வெமையுடையாய்
பார் போற்ற வந்தாள் பரனே பரஞ்சுடரே

## திருவாசகம்

சிங்கமும் யானை வேங்கை திடமற உரித்த கையா
இங்கெனைக் காப்பாயென்று எளியேன் சொப்பனப்பயத்தை
சங்கை களகற்ற வேண்டி தற்பரா உனைத்துதித்தேன்
அங்கையில் மழுமானேந்தும் அய்யனே எனைக்காப்பாயே!

## சீராளன திருவாசகம்

**ராகம்: பூபாளம்**

போற்றி என் வாழ் முதலாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற்கிணை துணைமலர் கொண்டு
ஏற்றி நின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில் நகை கொண்டுநின்திரு வடி தொழுவோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல் சூழ்
திருப் பெருந்துறையுறை சிவபெருமானே
ஏற்றுயர்க் கொடியுடையா யெமை யுடையாய்
எம்பெருமான் என்னை யாண்டு கொள் வாயே!
[திருச்சிற்றம்பலம் — தில்லையம்பலம்]

## சீராளன் தரு - 70

**ராகம்: யதுகுலகாம்போதி** **தாளம்: ஜம்பை**

சொன்னபடியே தேவாரங்கள் வாசகம் ஓதினேன்—நீங்கள்
என்னையு மாதரித் தின்னாள் போதித்த குருநாதனே!
கண்ட கன வதை விண்டு சொன்னேன் அதைப் பேதமாய்
—தாங்கள்
கொண்ட தென்ன ஐயா தொண்டன் சொல்லை வெகு
பேதமாய்
ஆனாலுமுங்களால் ஞானோபமதசமும் நேசமும்—பெற்று
ஈனப் பிறப்பற மோனம் பெற்றேன் கைலாசனே!
உத்திராபதீசர்க்கு சத்தியஞ் சொல்லிய தந்தையும்—இதோ
ஓடிவாறார் பாரும் நாடி எத்தனைத்தேடி எந்தையும்

பெற்றவர் கூப்பிட புத்ரன் வாரேனென்று சொல்லியே
— எங்கும்
போகுமோ சொன்னதாலாகுமோ சுற்றிடுங் கல்வியே
கல்விக் கூடந்தன்னில் நல்வித்தை யோதின தாலே
செகனாதனமுதுண்ண வேதன் விதித்த முன்னாளே!

## பொது விருத்தம்

இப்படிப் பாலன் தானும் இன்ப வானந்தம் பொங்க
ஒப்பிலாக் குணத்த னாகி வேதங்க ளாக மங்கள்
செப்பிய பொருளை நன்றாய் சிந்தையில் தியானம் செய்து
அப்பனைக் கண்டு போற்றி அடியினில் பணிந்திட்டானே!

## வசனம்

இந்தப் பிரகாரம் சீராள னானவன் தேவாரம் திருவாசகம் சொல்லிக் கொண்டு இருக்கிற தருவாயில் சிறுத்தொண்டர் வந்தார். அவரைப் பணிந்து தோத்திரம் செய்தது காண்க.

## சீராளன் விருத்தம்

வேதியர் குலனே சரணம் சரணம்-மேவலறேரே சரணம் சரணம்
ஆதினாதனார் அன்பாய் சரணம்-அடியார் பூசை செய்யுமின்
பாய் சரணம்
மாதோடில்லறம் வளர்ப்போய் சரணம் மாசில்லா வேத பூசுரா
சரணம்
தாதை யாயெமையாள் தயாளுவே சரணம்-சாமி காரியம்
துறந்தராய் சரணம்

## வசனம்

வேதியர் குலதிலகனே சரணம்! சத்துருவிற்கு சிங்க ஏறு போலானோனே சரணம்! கடவுளன்பரே சரணம்! தெய்வ காரியம் வழுவாமல் நடப்பிக்கப் பட்டவரே சரணம்! மாதோடு கிரகாச்சிரமம் நடப்பிக்கப் பட்டவரே சரணம்! தாதையாய் எமையீன்ற ஐயனே சரணம்! தேவரீர் இங்கு இளைப்புடனே இந்த வேளையில், எங்கே வந்தீர்கள், வந்த காரியம் என்ன சொல்லுங்களையா சுவாமி!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: காம்போதி**

மைந்தனே மகனே செல்வமாகிய பொருளே எங்கள்
சிந்தையில் மயக்கம் நீக்கும் சீராளா சொல்லக் கேளாய்
உந்தனன்னைமுன் வந்தோனும் உனக்கு மாதுலனானோனும்
விந்தையைக் காணவேண்டி வீட்டினிலிருக்கின்றாரே!

### வசனம்

அடாவாடா என் செல்வமாகிய கண்மணியே! உன்னைப் பார்ப்பதற்கு, வடக்கே ருத்ராபதி தேசத்திலிருந்து, உன்மாமன் வந்திருக்கிறார். அவர் உன்னைப் பார்ப்பதற்கு அழைத்து வரச் சொன்னாரடா மகனே!

## தொண்டர் தரு-71

**ராகம்: கல்யாணி** **தாளம்: ஜம்பை**

1. வாடா என் கண்மணியே உந்தன் மாமன் தனைப் பார்க்க
வாடா என் கண்மணியே!
தேடாப் பொருளான சிந்தாமணி செல்வமே
செல்வ விசித்திரமே நீ இட்ட [வாடா]

உனக்கானதோர் பொன்னெழுத் தாணியும்
மினுக் கான புத்தகங் கண்ணாடியும்
முனைக் கூர்மையான நற்சூரியும்
இனிப்புடன் உனக்கிச்சையான தெல்லாம்
மனத்துடன் கொண்டு வந்தாரடா அப்பா [வாடா...]

பட்டிலே ருத்ர கண்டிகை வேஷ்டியும்
இட்டிடும் பூதிப்பை தூக்குத்தொட்டியும்
இஷ்டமாயுனைக் காணவே பேட்டியாய்
திட்டமுடன் கொண்டு வந்தாரடா மெய்யா
பட்டினியாய்க் காத்திருப்பாரடா அய்யா [வாடா]

ரெத்தினங்க ளிழைத்த பலகையும்
புத்தகங் கயர் தூக்குப் பலகையும்
முத்தெனச் சோகிக் கொத்துப் பீலிகையும்
இத்தை யெல்லாம் கொண்டு வந்தாருன் வாயாலே
க்ற்ற தெல்லாம் கேட்க வேணு மென்ற தாலே
[வாடா....]

## தொண்டர் விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

மாம னுமுனக்காயுள்ள வரிசைகள் உண்மையாக
ஆமென தெல்லாங் கொண்டு வந்தனர் வந்தபேரும்
தாமுமே காத்திருப்பார் தனையனே தாமிதங்கள்
ஆமோ சொல் மகனே நீயும் அன்புடன் வருகுவாயே!

## வசனம்

அடா வாடா மகனே சீராளா! உன் மாமன் உனக்காக அநேக வரிசைகள் கொண்டு வந்திருக்கிறார். நீயும் சுருக்கிலே வாடா மகனே சீராளா.

## சீராளன் விருத்தம்

மாமனுமெனையே காண வரிசைகள் எனக்காய் கொண்டு
தாமுமே காத்திருப்பார் தனையனே வருவா யென்ற
சாமியே சரணம் மாமன் தயவுடன் கொண்டு வந்த
தீமையாம் பொருளா மந்த சேதியும் செப்பு வேனே!

## சீராளன் தரு-72

ராகம்: மத்யமாவதி — தாளம்: ஜம்பை

வந்த காரியம் எந்தனுக்கே தெரியும்-நான் அதனையுமக்கு
வசனிப்பேன் தாங்கள் நிசமென அறியும்

1. எந்தன் மாமன் ஈசனாகும் இனிய வேஷ்டி ஏமனாகும்
என்றேனிதை நீரும் நன்றாகவே பாரும்
உண்டானது சோறு பண்டார முண்டார — [வந்த....]

2. பூதியின் பழம் மஞ்சனமாவது பொஸ்தகங் கண்களைப்
பொத்திடுங் கையென்றுரைத்திடுங் காணீரே
சோதியாகிய பொற்கலங் கறி சுண்டியிடுகின்ற
மட்கலமென்றறி
சொல்லுஞ் சூரிகத்தி - மெல்ல எனைப்பற்றி
கொல்லுகின்ற கத்தி - நல்லா அறியித்தை — [வந்த....]

3. பேசுங் கயிறோ பாசமானது எழுத்தாணி உயிரைப்
பிடிக்கும் காலன் தரிக்கும் சூலமே
மாசிலாக் கண்ணாடியோ நீங்கள் மனதிலெண்ணிய
தென்றறியுங்கள்

மாதா பிதா ஒத்தால் யார்தான் சொல்வார் குற்றம்
ஆதார மாயுற்ற நாதனுக்கே நத்தி — [வந்த...]

4. பலகையானது பரனுண்ணும் கலமே – நான்
தின்பண்டமென்றது
பாலகன் கறி தாளிக்கும் பல் காயமே
அலைவில்லாமல் அடியேன்றன் னையே அரனுக்கே கறி
ஆக்கவே நண்ணியே
அன்னை சொல்லைப் பற்றி சொன்னீர் பொய்யை நத்தி
என்னீலிது தந்து சொன்னேனறி வித்தேன் — [வந்த....]

5. ஆத்தியடியில் வீற்றிருந்திடும் - கங்காளனார்க்கு
அடியேன் விருந்தாகச் சமைந்திடும்
வார்த்தைகள் இந்த வையம் உள்ள வரை
வழங்குமாதலால் உளங்களி கூற
பூர்த்தியாகிய பேறும் கீர்த்தி யெமைச் சாரும்
பேத்தா தொழிவீரே! நீத்தோ றுணத்தானே
— [வந்த...]

## விருத்தம்

வந்ததோர் மாமன் ஈசனே வரிசை வந்திடும் வகை யெலா
மறைவேன்
மாசிலாவாடி நீங்களொன்றாகி மனதிலெண்ணியதே
காணும்
எந்தையே பூதி மஞ்சனமாகும் எழுதிடு மாணியோ ஏமன்
ஏந்திடும் சூலம்
ஆடையோ காலன் இனிய புத்தகங்களோ கண்ணை
வந்தெனைப் பொத்திடுங் கைகளாகும் சூரிவாள் கழுத்தறுத்
திடும் கத்தி
மாணிக்கம் பதித்த பொற்கலஞ் சமைக்கும் மட்கல
மென்று வசனிப்பீரே
தந்திடுங் கயிரோ பாசமாம், பலகை தரித்திடுங் கட்டை,
தின்பண்டங்கள்
தாளிதகாயம் ஆசனமுண்கலம் தந்தையே அறிகுவீரே!

## வசனம்

சரணம் சரணமையா சுவாமி! தேவரீர் சொன்ன தெல்லாம் நிசமே யல்லாது வேறல்ல. வந்த மாமன் ஈசனாகும். விபூதிப்பழம் என்னைக்கழுவும் திருமஞ்சனமாகும். கயிறு

என்னைத் தூக்கிப்பிடிக்கும் பாசமாகும். தூக்குத்தூட்டி உயர மாட்டும் தோரணமாகும். கோல வேஷ்டியோ ஏமனாகும். எழுத்தாணியோ காலன் சூலமாகும். பொற்கிண்ணம் கறியாக்கும் சட்டியாம். புத்தகம் கண்ணைப் பொத்திடும் கையாகும். சூரி என்னையறுக்கும் வாளாயுதமாகும். தூக்குப் பலகை கறியைக் கொத்தும் கட்டையாம். நான் தின்பண்டம் தாளிக்கும் மசாலையாம், ஆசனமாவது அரனுக்கு உண்ணப் படைக்கும் கலமாம். ஆகையால் இப்படி இருக்கிறது. என்னுடைய வினையின் பயன் என் சாதகத்தில் இது ஒரு தத்தாயிருக்கிறது. ஆகையால் நீங்கள் எண்ணின படியே அன்னதானமும் அடியார் பூசையும் நடப்பிவையுங்களையா சுவாமி.

## தொண்டர் விருத்தம்

செல்வமே தேனே யெத்தன் சீராளா சிறந்த சேயே
கல்வியின் விசேடமோ நீ கற்றிடுங் கருத்தை யென்பால்
சொல்லியதோதான் தேவர் முனிவர் கந்திருவரேனோர்
மெல்லவே யுனக்கு வந்து விளம்பியதோ சொல்வாயே!

## தொண்டர் வசனம்

அடாவாடா என் செல்வமாகிய கண்மணியே, இந்தக் கற்பனை வார்த்தைகளெல்லாம் உனக்கு எந்த தேவர்கள் முனிவர்கள் கந்திருவர்கள் யார் சென்னாரோ! அல்லது உன்னுடைய கல்வித்தனமோ. சிறு வயதிலே பேசாத பேச்செல்லாம் பேசினாயடா மகனே! சீராளா!

## தொண்டர்—சீராளன்—தர்க்கம், தரு—73

**ராகம்: ஸாத ஸாமகிரியை** **தாளம்: ஆதி**

**தொண்டர்:** இளமையிலே இந்தப் பழமைகள் பேசவுனக் கெவருரைத்தார் பிள்ளாய்
மகனே—தவறுரைத் தாய் மெல்ல

**சீராளன்:** தவறுகள் சொல்லத் தனையனாலாமோ தந்தையே நிசங் கண்டேன்—
சொன்னேன் எந்தையே பிசகன்றே!

**தொண்டர்:** ஆனால் தேவர்கள் முனிவர்களாரோ
அறைந்தாரோ காணேன்—
சொல்லி மறைந்தாரோ வீணே!

**சீராளன்:** வீணே யோதினேனென்றென்னை நீங்கள்
வெறுக்காதீர் போங்கள்
பொய் சொல்ல—அடுக்காதே தாங்கள் அய்யா

**தொண்டர்:** அடுக்காத வார்த்தையைத் துடுக்காகக் கந்திருவர்
அறைந்தாரோ காணேன்—
உனக்குச் சொல்லி—மறைந்தாரோ மகனே

**சீராளன்:** கரவாய்த் தேவர்கள் சொல்வது முங்களெண்ணம்
காணாதவர் போலே
சொல்மொழி தோணாதவர் போலே

**தொண்டர்:** தோணாத வார்த்தையை சொல்லிய தென்னா
சுதனே யிது நண்ணாம்
என்னுடைய மகனே இது வென்னா

**சீராளன்:** சொல்லுவேன் தூங்கையில் வல்லியோர் பாகன்
மெல்லவே என் கனவில்
நடந்த விதம் எல்லாம் சொல்லினரே

**தொண்டர்:** கனவில் கண்டதை நிசமென்றெண்ணியே கருதிக்
கொண்டு தாதை
சொல்லை உறுதி கொள்ளாதே குழந்தாய்

**சீராளன்:** உறுதியுடனே நீங்கள் கருதியபடி என்னை
உண்பதற்கே சமைத்து
அவர் தாம் தின்பதற்கே அமைப்பீர்

## சீராளன் விருத்தம்

**ராகம்: காம்போதி**

தேவர்களல்லச் சித்தர் முனிவர்கந்திரு வரல்ல
மூவரில் முதல்வனான மூர்த்தியே என் கனவில்
ஓவற நடந்த சேதி யாவையும் உணர்த்திப் போனார்
ஆவது இனி வேறேது அய்யனே அறிந்திடீரே!

### வசனம்

சரணம் சரணமையா சுவாமி, தேவர்கள் முனிவர்கள் கந்திருவர் யாரும் சொன்னதல்ல. என் கனவில் மூவருக்கும் முதல்வர் உணர்த்திப் போனாராகையினால் தேவரீர் அங்காளருக்குச் சொன்னபடியே நடத்தி வையுங்கள். நானும் தோழர்களுக்கும் உபாத்தியாயருக்கும் சொல்லிக் கொண்டு வருகிறேனையா சுவாமி!

### சீரராளன்: கட்டளைக் கலிப்பா

**ராகம்: தோடி** **தாளம்: ஜம்பை**

பெற்ற தாய் தந்தை யாரிலதிகமாய் பிரியமோடெந்தன்
பேதமகற்றியே
கற்ற கல்வி வேதாகமம் யாவையும் கருணையால்
உபதேசித்த கர்த்தனே
அத்தனென்னை அரனுக்காகக் கறியாக்கியே
அமுதீய்குவேனென்றது
இத்தருவாயில் என்னையனுப்புவீர் இணையடிகள்
நமஸ்காரம் எந்தையே!

### வசனம்

சரணம் சரணமையா சுவாமி குருநாதனே, என்னுடைய தகப்பனார் மொழியை நிறைவேற்றவேணுமேயல்லாது வேறல்ல. ஆகையால் தேவரீர் எனக்கு உத்திரவு கொடுங்களையா சுவாமி!

### தரு-74

**ராகம்: பைரவி** **தாளம்: ஆதி**

போய் வாரேனையா போய் வாரேன்
போய் வாரேன் என்னுடைய தாய்மாமனாகும் ஈசன்
தூயவன்றனக் குணவுக்கா யென்றாதை தன் பின்னோடு—
[போய்...]

அன்னையுந் தந்தையுங் கூடி என்னையே யறுத்துக்கறி
கன்னியோர் பாகனுக்கிய – எண்ணிய படிக்கிப் போதே
கடுகியே – அவர் சொல்படியே நான் – நடந்திட
கர்த்தனே உத்தாரந் தாரும் சித்தமே மகிழ்ந்திட நான்—
[போய்....]

அரிவோமென்றே யெனக்கு ஆதிகாலந் தொடுத்து
குருவாயிருந்துள் அன்பு கொடுத்தாண்டருளும்
குணக்குன்றமே – எனையின்றுமே – தந்தை யழைத்தால்
ஒன்றும் பேசாமலே நானின்றவர் பின்னேகவே நான் —
[போய்...]

அன்னமிடும் பலனெல்லாம் என்னால் வீண் போகாமலரன்
உண்ணும்படியாலே யான்—பின்னமொன்று சொல்லாமல்
நற்பேறுதான் பெருகவென்று – சீருடன்—விடையே தாரும்
ஆறுடனாத்தி தரித்த ஏறுடையானுணவுக்கே— [போய்...

## வெண்பா

நரியைப் பரியாக்கி நாரியொடு கூத்தாடி
கரிய குருவிக் குபதேசம் காட்டி—அறியாதான்
முனிமாதர் கற்பழித்த முதல்வன் தனக் கூணாய்
சிறியேனை ஏகெனவே செப்பு.

## வசனம்

சரணம் சரணமையா சுவாமி குருநாதனே! அடியேனுக்கு உத்திரவு தந்தருள வேணும். அன்று மாணிக்க வாசகருக்காக நரியைக் குதிரையாக்கியும், கரிக்குருவிக்கு உபதேசம் செய்தும், தாருகா வனத்து ரிஷிமாதர் கற்பையழித்தும் நின்ற கடவுளார்க்கு என்னை ஊணாக உண்ணும்படி தேவரீர் நல்வாக்குடனே போக உத்திரவு தந்தருள வேணுமையா சுவாமி குருநாதனே!

## உபாத்தியாயர் வெண்பா

**ராகம்: சங்கராபரணம்**

கற்பகமே சொற்புலமை கற்றோனே நற்குமரா
அற்புதமே சீராளா அய்யனே—இப்புவியோர்
எல்லோரும் ஏற்றவே ஈசனுண்டு பேறு பேற
நல்லோனே ஏகாய் நடந்து.

## வசனம்

அடாவாடா சீராளா ஈசனுடைய கிருபையினாலே நீங்கள் எல்லோரும் மோக்ஷ வீடடையும்படி போய் வாரும் பிள்ளாய் சீராளா.

### சீராளன்

நல்லது மகா பாக்கியமையா குருநாதனே!

### விருத்தம் சீராளன்

தேசிகன் விடையே பெற்று சிறந்தநல்தோழமையான
நேசரைக் கண்டு தந்தை தாயுடன் நினைவைக் காட்டி
ஆசிலா உருவங் கொண்டே ஆத்தியின் நிழலிருந்த
ஈசனுக் குணவதாக தோழரே ஏகுவேனே!

### சீராளன் தரு-75

ராகம்:- எது குலகாம்போதி தாளம்: ஆதி

1. அன்பில் மிகுந்தொரு தாயார் வயிற்றுதித்த
அறிஞர் போல நாமெல்லோரும்
நண்பிலிருந்தோ மென்னாளும் தோழரே இன்று
நான் பிரியவு மானேனே!

2 பள்ளியில் வைத்த நாள் முதல் இன்று வரையில்—
பகைத்தொரு நொடியாவது
மெல்ல மறந்தறியாத சிறியேனுங்கள் விருப்பு
மறக்கலாச்சுதே!
கூடியிருந்து பிரியும் தோழரேயென்மேல்—கோபதாப
மில்லாமலே
நாடி எனக்கு நீங்களும் நல்வாக்குடனே—
நடவென்றனுப்புவீர்களே.

3. தண்ணீர்ப் பந்தலில் ஆண்டியாய் இருந்துசெட்டி—தையல்
மாமனாக வந்த
அண்ணல் திருவிளையாட்டை யாரறிவார்—அன்பினுக்
கினியதோழரே!
அண்டர் முனிவர் உரகர் நரருங் காணா அம்பலத்தாடிய
சோதி
இன்று எங்களைக் காக்கவே எழுந்தருளும்
ஈசனுணவுக்காகவே

4. சந்தேகம் எண்ணிடாமலே தமியேன் பேரில்—தயவு
மறந்திடாமலே
எந்தை வந்திருப்பதினாலே எல்லோரும் நீங்கள்—என்னை
யனுப்புவீர்களே.

வந்த பிதாவினுடனே அடியேனைப் போய் வா
வென்றனுப்புவீர்களே
கண்ட கனவின் படியே கைமேல் பலன்—கண்டோமே இன்று
தோழரே
தொண்டர் நாதன் காத்திருப்பதால்—தடையில்லாமல்
தோழரே விடைதாருமே

சீராளன் கலித்துறை

நேசமதாகி யிருந்தோ மின்னாள்வரை நீடுலகில்
ஆசையதாயன்ன தானப்பலன் தனை யரனறிய
மாசறுக் கின்ற கங்காள ரெனவந்த வள்ளலுண்ண
ஆசறவோர் மொழி சொல்வீர்க ளென தன் பானவரே

வசனம்

அகோ வாருங்கள் எனது தோழர்மார்களே! உங்களுடைய பக்ஷம் மறவாமல் நீங்கள் என்னைக் கங்காளநாதர் அமுதுண்ணும் படியாய் அடியேனை அனுப்பி வையுங்கள் எனது தோழர் மார்களே!

தோழர் கலித்துறை

சீரே சிறந்துள்ள தீங்கரும்போ எங்கள் செவிக்கினிய
பேரே யுடைய சீராளா, உன்னைப் பிரிய வந்த
வாறே யரனுண்ண வென்றே மகிழ்ந்தில்லம் வந்ததினால்
ஆரே தடுக்க வல்லார் ஏகுவீர் அன்பு கொண்டே.

தோழர் வசனம்

அகோ வாரும் சீராளா! நீ பேசிய பேச்சும் உன்னுடைய பேரும் எங்கள் செவிக்கிசைய கரும்பின் ரசம்போல் இருந்த உன்னை இந்தப்படி விதியிருந்தால் யார் தான் தடுக்க வல்லார் ஆனாலுந்தன் தந்தை மனம் போலே நீயுமொருமித்து கடவுளர் பேரில் பக்தியை வைத்து நம்முடைய குருநாதர் சொன்ன உண்மையை நினைந்து போய் வாரும் பிள்ளாய் சீராளா!

சீராளன் விருத்தம்

தந்தையே சரணம் உங்கள் தம்பிரானுண்ப தாலே
எந்தன் மேல் முள்ளும் கல்லும் ஏதேனும் காயமாகில்
அந்தகன்றனை யுதைத்த அய்யருண் சாரோ ஏதோ
எந்தையே எமையுந் தோளில் ஏற்றியே செல்லுவீரே!

### வசனம்

அகோ வாருங்கள் என் பிதாவாகிய தெய்வமே! நம்முடைய தம்பிரானார் உண்கும் பதார்த்தமாக நான் போன படியினாலே, என் மேல் முள்ளுக் கிழித்துங் கல்லிரடிக் காயமானால் எமனை யுதைத்த ஈசனுக்கு ஏற்குமோ ஏற்காதோ தெரியவில்லை. ஆகையாலே என்னைத் தோளிலே சுமக்க வேணுமையா சுவாமி!

### தொண்டர்

அப்படியே என் தோளின் மேல் ஏறிக் கொள்ளடா சீராளா.

### சீராளன் வெண்பா

அய்யா வெனையீன்ற அத்தா நின் தோளிலெமைப்
பையவே வைத்துப் பாதை வழி—எய்தியே
போரீரீதோ சில பொல்லாச் சகுனமதைப்
பாரீர் ஈதென்ன பகர்வீரோ!

### வசனம்

சரணம் சரணமையா சுவாமி தேவரீர் என்னைத்தோளிலே வைத்துக்கொண்டு போரீர்களே! பொல்லாத சகுனங்கள் காணுது ஈதென்ன பலன் சொல்ல வேணுமையா சுவாமி.

### சீராளன் தரு - 76

**ராகம்: எதுகுலகாம்போதி** **தாளம்: ஆதி**

பள்ளிக் கூடம் விட்டு வருகையிலே ஒற்றைப்
பார்ப்பான் எதிரே வாரான் பாருமையா சுவாமி
பிள்ளைகளை விட்டு வருகையிலே தட்டரன் பேடியுமே வாரான்
பாருமையா சுவாமி
ஓதுங் கூடம் விட்டு வருகையிலே ஓரி ஊளையிடுகிறதைப்
பாருமையா சுவாமி
தாதையே நாம் போம் பாதையிலே தவசி சன்னாசியும் வாரான்
பாருமையா சுவாமி
தோளேறி நானும் போகையிலே குருடன் தூருதலை விறகுக்
கட்டுடனே
காலை வாய் ஒந்தி வாழ்விழந்த கைம்பெண் கரடி முயல் வந்து
கட்டுதையா

விறகுக் கட்டு, மொட்டை ஸ்தனமில்லாதாள் செட்டி,
விரிதலைச்சியும் வாராள் பாருமையா சுவாமி
குரல் நெறிய ஆந்தை கூப்பிடுதே கூகை குளறிடவும் காகம்
விழுகுதெகிரே
கண்ட கனா சுவாமி மெய்யாக இன்று காட்டுது பார்
துர்ச்சகுனமெல்லாம்
தொண்டர் பூசை செய்த பலனிருந்தால் துர்ச்சகுனமெல்லாம்
விலகிடுமே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: மத்யமாவதி**

கண்டிடும் சகுனமெல்லாம் காட்டிட தந்தை கேட்டு
ஒன்றறியாத பாலன் உணர்த்திடும் வார்த்தை ஏது
இன்றிது அமலன் கூற்றை எவராலும் விலக் கொண்ணாது
என்றுமே தொண்ட ரெண்ணி இன்ப வீடணுகின்றாரே!

## வசனம்

இந்தப் பிரகாரம் சகுனம் கண்டு சொல்ல, சிறுத்தொண்டர் இது சிவசோதனையே யல்லாது, வேறல்ல வென்ற யோசனை யுடனே வீடு வந்து சேர்ந்தார்.

## சீராளன் விருத்தம்

**ராகம்: மத்யாமாவதி**

வந்திடும் மகன் தாய் தாளில் வணங்கியே எழுந்திருந்து
தந்தையா ரழைத்தா ரெந்தன் தாய் மாமன் வந்தா ரென்று
அந்த மாமனுமெங்கே சொல் அன்னையே யென்று கேட்கச்
சிந்தையு மகிழ்ந்து நங்கை செப்புவாள் மகன் தனக்கே!

## வசனம்

வந்த சீராளன் வணங்கி எழுந்திருந்து தாயே! என்னுடைய மாமன் வந்திருக்கிறாரென்று தந்தையாரழைத்து வந்தாரே அந்த மாமன் எங்கேயம்மா தாயே!

## நங்கை விருத்தம்

**ராகம்: காம்போதி**

மைந்தனே மகனே எங்கள் வரபுத்ரா வடதேசத்தில்
சிந்துவின் முரசோன் றன்னை தீயெழ எரித்தார்க் கொப்பாம்
அந்தணர் குலத்தின் மேலாம் உன் அம்மானும் பூசைக்கேகி
வந்திடுங் காலமாச்சு மைந்தனே அறிகுவாயே!

## நங்கை வசனம்

அடாவாடா செல்வமாகிய கண்மணியே, உன்மாமனானவர் அந்தணர் குலத்திலும் விசேஷமானவர். தவத்திலே காமனை எரித்த கடவுளுக்கு ஒப்பானவர் ஸ்நானம் செய்து பூசை பண்ணிக் கொண்டு வரப் போனார் இந்நேரம் வந்து விடுவார் நீயும் பார்க்கலாமடா மகனே சீராளா.

## நங்கை சிந்தடி விருத்தம்

**ராகம்: தோடி**

மைந்தன் கேட்க மறுமொழி சொல்லியே வந்த காந்தன்
மலரடி போற்றி நின்று
எந்தன் நாயகனே ஈசனன்பர்க்கு சிந்தை மெய்க்க நாம்
செய்தர்மம் சித்தியே!

## வசனம்

இந்தப் பிரகாரம் கேட்ட மகனை நிறுத்தி-என்னுடைய பிராண நாயகனே சரணம் சரணமையா, இன்றுதான் தேவரீர் செய்த தவம் பலித்தது சிவனன்பர் சந்தோஷப் படும் படியாகவும் நாம் செய்த தர்மம் சித்தியாகும் காலம் வந்ததையா சுவாமி!

## தொண்டர் கந்தார்த்தம்

**ராகம்: புன்னாகவராளி**

மங்கையே மாதுரிய நங்கையே மதனகலைப் பிரசங்கியே
சிங்கார வதன மானே!
பொங்கு கடுவிடமுண்ட சங்கரனடியர் பதம் பூசை மறவா
தேற்றும் புனித மானே
எங்குமுள்ளோர் புகழ்ந்தேத்தும் மங்கள கல்யாண இன்பமாகிய
மாதே அன்புடையாளே!
சங்கை யாதேனு முரையா தெந்தன் சொல்படி தானே நடக்கும்
தங்கமே எனதுடைய மானே! உனக்கீடாரிங்குமே
அன்னமே பெண்ணே மாநில மாதரிலான பேர் காதலர்க்கான
பெண்ணேதுரை தேனே என்சொல்படி தானே!

## நங்கை கந்தார்த்தம்

**ராகம்: புன்னாகவராளி**

அந்தணர் குலத்தனே எந்தன் மணவாளனே வந்தமகன்
ஏதேதோ வசனித்தானே
இந்த விதமென்றோதுங் கடவுளன்பர் பணி இன்பமாய்ச்
செய்கின்ற என்மணாளா
சந்திர நிகர் வதனனே சகல பிரக்யாதனே தம்பிரார்க்
கமுதாட்டும் தர்மவானே!
விந்த நிகர் பாதனே மந்திரி யூகாதனே வேறு மயங்குமழகா
விமலனை யென்னாளும் மறக்காத குழகா-சிங்கார ரதியாள்
மணவாளனும்
ஏழ்கணை வாளனும் நீள்சடை யாளனும் மால் கொளவே
பொரும்.

## தொண்டர் கந்தார்த்தம்

**ராகம்: புன்னாகவராளி**

அன்னமே அதிரூப சொர்ணமே மானே அரிவையான
சிரோமணி யணங்கினாளே
கன்னலே காமரச மின்னியே பொழிகின்ற கார்குழல்
வனிதையே கடவுளானே
இந்நகர மதிலே நாம் அன்னமிடும் போதிலே
எந்தனிடமமுதுண்ண நந்திநாதன்
தன்னுடைய அடியார்களுணும் படியாலே செய்தர்மம்
பலித்தது பெண்ணே!
நம்முடைய கர்மம் தொலைந்தது பெண்ணே!
யீதறிவாய் தார் குழலே! அடியார்க் கழலே
குடிவே நிலையே யடி பார்தனிலே இன்று தர்மம்

## நங்கை கந்தார்த்தம்

**ராகம்: புன்னாகவராளி**

கந்திருவர் எழில் போலும் சுந்தரன் றொழில் போலும்
கருத்தினில் சேடன் போலக் கற்றுள் ளானே!
மந்திரி யதிகாரனே தந்திர மதியூகனே வன்னி முப்புரி நூலின்
மார்பினாரே
இந்திர கர தனுபோல் வந்த திரி மல மாய ஈசர் பஞ்சாக்ஷர
பிரகாசநேசா

மந்திரி புவனேசனே எந்தன் பிராணேசனே மைந்தன்
தருமத்தினாலே அருமையாக வந்தான் சுபுத்திரனாலே
நினைத்தபடி சந்திர சேகரன் நந்தமையாள் பரனும் தயவாயுற
வந்து பாரிது மைந்தன்

### பொது விருத்தம்

இப்படி இருவர் கூடி இணங்கியே மொழிகள் பேச
செப்பழகுடைய பாலன் சிந்தையும் மகிழ்ந்து கொஞ்சி
அப்பனை வலங் கொண்டேத்தி அன்னையைப் பணிந்து போற்றி
இப்பவே யழைத்த மாமன் எங் கென்று வணங்கினானே!

### வசனம்

சீராளனானவன் தாயார் தகப்பனார் தவப் பெருமையை பேசிய பிறகு, என்னை வருந்திப் பெற்ற தாயே! என் மாமன் வந்திருக்கிறார் என்றீர்களே அவர் எங்கேயம்மா தாயே!

### நங்கை விருத்தம்

மைந்தனே மகனே மாமன் வள்ளலார் பூஜை செய்து
உந்தனைப் பார்த்தே யுண்க ஒருநொடி வருவாரிங்கு
வந்தவன் வேர்வை சோப மாற்றிட வென்னீராட
வந்திடாய் மகனே என்று வஞ்சியும் வசனிப்பாளே!

### நங்கை வசனம்

**ராகம்: காம்போதி**

அடா வாடா என் செல்வமாகிய கண்மணியே உன்னுடைய மாமன் பூஜை செயது கொண்டு வரப்போனார். இங்கு வந்தால் உந்தனைப் பார்த்துண்பார் அதற்குள்ளாக நீயும் ஸ்னானம் செய்ய வாடா மகனே சீராளா!

### சீராளன் வசனம்

அப்படியே வருகிறேனம்மா தாயே!

### நங்கை தரு-77

**ராகம்: எதுகுலகாம்போதி** **தாளம்: ஜம்பை**

1. சகியே சந்தன மானே நீ வாடி – சம்பங்கித் தைலம் தன்னை நீக்க சண்பக மொட்டுக் கொண்டாடி.

2. வெண்ணீர் வாரடி மேனி துடைத்திடவே - பட்டுடை நன்னால்
மெல்லியே துடைப்போம் மெல்லவே நாம் கூடி

3. பட்டுப் பீதாம்பரம் கட்டி மையெழுதடி அந்த உத்திராபதீசரைப்
பணிந்து மஞ்சள் நூல் காப்புக் கையில் கட்டடி.

4. தொட்டிடும் பணி யாவும் பூட்டியே பூதியணிந்து
சுகந்த கதம்பம் சந்தனம் பூசடி

5. இட்டிடும் பணி கட்டி சவ்வா தணிந்து - சிந்தூரம் தீட்டி
ஈசனே காரென்று ஆலாத்திப் பணிந்து

6. மட்டவிழ் மலர் மாலை சூட்டியே நாமழகு பார்த்து
மகிழ்ந்து கலத் தமுதுண்ண வூட்டியே!

## நங்கை விருத்தம்

மகன்றனை யலங்கரித்து மகிழ்ந்து பார்த்தூஞ்சலேற்றி
புகழ்ந்து கங்காள னாதன் பொன்னடிதனை நினைந்து
அகந்தைகள் கெடவே மன்றுள் ஆடிய பரனே என்று
மகிழ்ந்திரு வருமே கூடி வளருஞ்சலாட்டினாரே!

## நங்கை ஊஞ்சல் விருத்தம்

உலகமெலாம் புகழ்ந்தேற்ற மரகதத்தால் ஊஞ்சலிட்டு மகன்றனையே உறங்கச் செய்து
இலகு விண்மணி போல எங்கள் நெஞ்சம் இருளகல வந்தோனே இகத்தோர்க்காக
கலக முறா வகையாய் நல்லரனன்பர்க்கு காட்சிதர வந்தருளுங் கண்ணேயின்று
விலகிட அஞ்ஞான மொடுமயல்கள் நீங்கி விமலனை நாம் காணவே நீராடீருஞ்சல்

## தொண்டர் விருத்தம்

ஊஞ்சலிலே வைத்தாட்ட உறங்கினான் போல் உளக்கண்ணைத் திறந்து கண்ணை மூடா நிற்கும்
பாங்கி சிறுத்தொண்டருக்கு உறங்கினானே பாருமெனக் கண் காட்ட பரமன் தொண்டர்
தேங்கிய நீர் வடிந்தாற்போல் கரத்தின் வாளைத் திருந்த எடுத்தவன் வருக சிவனை வாழ்த்திப்
பூங்கைலை வாழ்வோனே புனிதாவென்று புதுமை தனையே நினைந்து போற்றினானே!

## தொண்டர் தரு-78

ராகம் : தாளம் :

பெருமைக்கொருவ ரொவ்வாதருமை மகனைத் திவ்ய
பெம்மானே காத்தருள்வாய்
இருமை மனமெமக்கு ஒருமைப்பாடாகவே ஈசனே
காத்தருள்வாய்
சித்த மயங்காமலே இத்தனை நாளிலே சிந்தை குடிகொண்டாற்
போல
அத்தனே நீவந்து பெற்ற மகனைத் தந்தால் அமுதுண்பேன்
என்றது போலே
குற்றமணுகாமல் அத்தர் பத்தர் சுணங்காமல் கைத்தல வாள்
குணங்காமலே
சத்தியோக சாதனனே சித்தியா கேதனனுந்தனைத்
துதித்திடவே
உத்திரவாய் நிமித்த மித்தருவாயி லுரைத்தால் அத்தனே
அருள் பெறுவேன்

## தொண்டர் அகவல்

ராகம்: ஆரபி

பொன்னலர் கடுக்கை புனல் மதியுடனே
மின்னலர் செடிலவித்தகப் பொருளே
மால் தனைக் கொண்ட வைரவ நாதா
காலனை யுதைத்த கைலையாளியனே
திரிபுர மெரித்த தேவே சரணம்
நரிபரியாக்கும் நண்பா சரணம்
ஆனை யுரித்த ஆதிவைரவா, புலியிதழுடுத்தும் பூதனாதா
காளியோடாடும் கர்த்தனே சரணம் ஆளியைக் கொன்ற ஆதி
சகோரமே.
காமனைக் காய்ந்த கடவுளே சரணம் மாமனாம் தக்கனை
வதைத்திடும் வீரனே
எச்சனிரவி இனிய நாமகள் அச்சுவாகனன் அவர்கள் தலை பல்
மூக்கொடு கரமு முனிந்த தேவே தேக்கு நான் முகன்
சிரமறுத்தோனே
வாக்கொடு மனமும் வழிபடுவாரை காக்கும் கடவுள்
காரணப் பொருளே!
இன்றெமைக்காக்க எழுந்த கங்காளா குன்றை வில்லானே
குழந்தை மனது
என் மனம் போல இசைந்திடச் செய்வாய் பொன் மலை
வில்லா போதனே சரணம்

### பொது விருத்தம்

கடவுளை வழிபட்டேத்திக் கரத்தின் வாள் சேய் கழுத்தில்
திடமுடன் வைக்கு முன்னே சீராளன் முழித்துப் பார்க்க
தடதடென்றுதரி யேங்கித் தையலு மயங்கி நிற்கக்
கடல் விடம் நீங்கினின்ற கண்ணன் போலெழுகின்றானே !

### வசனம்

இப்படியாக சிறுத்தொண்டர், கடவுளை வாழ்த்திக் கையிலே வாளேந்தி சீராளன் கழுத்தில் வைக்குமுன்னமே, கடலிலே அமுதங்கடைய எழுந்த நஞ்சுள்ளே மூழ்கிய நாரணன் எழுந்து வெளிப்பட்டது போல், நித்திரையும், படுத்த சேப்பாளியும் விட்டு எழுந்திருந்து, தகப்பனைப்பார்த்து, மன வைராக்கியமும் திட சித்த முண்டாகவும், பயம் நீங்கும் படி வசனித்தது காண்க.

### சீராளன் தரு - 79

**ராகம்: எதுகுலகாம்போதி** தாளம்: **ஆதி**

ஏனோ உமக்கிந்த வீணான கலக்கங்கள் என்னிடம் வைத்தீரையா ஆனேறுங் கடவுளர் தானே திருவிளையாட் டாடுவோ மென்றால் அதையார்தான் தடுப்பார் அதை

### தனிச்சொல்

அப்போதே சொன்னால் அல்ல வென்றுரைப் பேனா
அரகரா அடியேன் மேல் அச்சமடை வானேன்
ஆகமங்களுணர்ந்துள்ள உங்கள் விவேகமெங்கு மறைந்தது
போங்கள் [ஏனோ....]
தந்தை தாய் மனம் போல மைந்தன் பிறந்த தாலே
தசரதராமன் என்று வசனம்பெருத்த தன்றோ.

### தனிச்சொல்

தமியே னறியாத மூகனா—அரகரா—தாங்கள் செய்த
தவப்பலத்தினால்
தம்பிரானமை ஆள்க நினைத்திடும்—கெம்பீரமதையே நீர்
மறந்திட' [ஏனோ]

கனவு கண்டு சொன்னதை மனதில் எண்ணாமல் ஏதோ
காணாமல் செய்வதுபோல் நாணிக் கவிழ்ந்த தேதோ.

தனிச்சொல்

கற்றுள்ள அறிவு மறந்ததோ அரகரா-
கலங்காமல் என் கழுத்தை அறுத்து
கடவுளார்க் கரிதாகிய உண்டியுந் திடமுடன்
சமையாமலே நின்று கொண் (டேனோ) [ஏனோ]

மாதா பிதா மகன் சம்மத மாகவே
மடியி லெனை யிறுத்தி மனது கலங்காமல்

தனிச்சொல்

வாளினால் தந்தை யறுத்து—அதனையே—
வகையுடன் சமைத் திதவுடன்
மகிழ்ந் தளித்திடில் அமுது கொள்வேனெனப்
பகர்ந்த வாசகமே மறந்தே தினம் [ஏனோ]

சீராளன் விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

தந்தையே உமக்கு என்மேல் சந்தேகம் நினைக்க வேண்டாம்
அந்தகன் படவுதைத்த அய்யனே கங்காளராக
வந்தது நிசமே யல்லால் மனிதரென்றெண்ண வேண்டாம்
எந்தையே என்று பாலன் இயம்பியே அன்னைக் குரைப்பான்.

வசனம்

சரணம் சரணமையா தந்தையே என் மேல் சந்தேகம் நினைந்து கொண்டு நான் கனவு கண்டு சொன்னது அல்ல வென்று எனக்குத் தெரியாமல், என்னைக் கறியாக்கி ஈசனுக்குப் படைக்க வந்தீர்களே! நல்லமதி யாச்சுது. இப்பவுமெனக்குப், பயப்படாமல் நடக்கிற காரியம் நடப்பி வையுங்கள் என்று-தாயாரைப் பார்த்து ஏன் கலங்குகிறாயம்மா. கலங்காம லிருங்களென்று சொல்லுகிறான்.

சீராளன் தரு-80

ராகம்: புன்னாகவராளி தாளம்: ஜம்பை

1. தாயே நீ கலங்குறாய் சஞ்சலப் புத்தியாலே
தனையேன் மேலன்பாலே எனம் மணி—

தேயும் பிறை முடித்த தேவனமை யடுத்தே
சேயை யுணவை நினைந்து தேடி வந்தாரை மறந்து
[தாயே]

2. கங்காள ராய் வந்த கடவுளுரை மறந்து கரமதில் வாள் இணைந்து
உண்காதே போம்படி—ஊஞ்சலிலறுக்க வோடி
இங்கு வந்ததால் நாடி எளியேன் முழித்த தால் வாடி—
[தாயே]

3. சஞ்சல மில்லாமல் சாடைகள் சொல்லாமல் சலித்தேதும் விள்ளாமலே
அஞ்சலென்றெமையாளும் அண்ணலார் தமையே நாளும்
நெஞ்சமதில் வைத்தென்னாளும் நிசத்தைச் சொல்லாத தாலே [தாயே]

4. கருவி லுதித்தபடி காணாமலே வாடி கலங்குறா யெனை நாடி
பொருமியழுகாதே புலம்பாதே கலங்காதே
அரனுணவிற்காகாதே அறிகுவாய் அஞ்சலீதே [தாயே]

5. சாதக கண்டமும் தப்பாது இன்றுமே தமியேனிருந்து பண்டுபோல்
நாதனருளினாலே நண்ணுவேனிவ் வுருப்போலே
பேத மகன் றென்னாலே பெருமானுண ஆட்டாமலே
[தாயே]

## விருத்தம்

அன்னையே நீங்களென்மேல் அன்புடனருட்டி வைத்தால்
கன்னியோர் பாகன் உண்கார் கண்டிடுங் கருத்தினுள்ளே
என்னையுன் மடியிலேற்றி எந்தையாரறுக்க வாக்கி
மின்னலர் சடையார்க் கூட்டி வீடது பெறுகுவீரே!

## வசனம்

சரணம், சரணமம்மா தாயே! நீங்கள் என்மேல் அன்பும், பயமும் வைத்தால், அரன் உண்க மாட்டார். ஆகையினாலே உன்னுடைய மடியிலே என்னை வைத்து பிதாவை யறுக்கச் சொல்லி நல்ல கறியமுதாக்கி அரனுக்குப் படைத்து மோக்ஷ வீட்டையுங்களம்மா தாயே!

## நங்கை விருத்தம்

மைந்தனே மகனே சொன்ன வசன மெய்யா மென்றாலும்
சிந்தையுள் துயரம் வந்து சேயனைப் பார்த்த ருண்டு
உந்தனைப் பெறவே வேண்டி ஒருகோடி தவங்கள் செய்து
வந்த பாலகனே எங்கள் மனமயக்க கற்று வாயே!

## வசனம்

அடாவாடா என் செல்வச் சீராளா உன்னைப் பெறுவதற்கு, அனேக தவஞ் செய்து பெற்ற பலத்தினாலே ஈசனன்பர்க் குரைத்தபடி நிறைவேற்ற எங்கள் மனம் திடப்படும்படி சொல்லும் மகனே சீராளா!

## சீராளன் வெண்பா

சொல்லுவே னென்னை சுகமுடனே யறுத்து
நல்ல கறியமுதாய் நாதனுண்ண —மெல்ல
படைப்பீரே யிப்பிறவி பாழ்படுங் கண்டீதே
நடப்பீ ரேல் நன்றாகு மே!

## வசனம்

சொல்லுகிறேன் கேளுந்தாயே! என்னை ஒரு மனதுடனே யறுத்து ஆக்கி ஈசன் உண்ணும்படி படைத்தீரேயானால் இந்தப் பிறவி அகலுமம்மா தாயே!

## சீராளன் தரு-81

ராகம்: தாளம்:

தாயே தந்தையே கேளும்—நீங்களினிமேல்
தாமதம் செய்யாதீர் நாளும்

வாயு மனமும் ஒன்றாய் வசனித்தபடி நன்றாய்
சேயன்றனையே யின்று சிவனுக் கெனவே யீன்ற [தாயே]

இந்த வுடலெடுத்து ஈசனார்க் குணவூட்ட—என்ன தவம்
செய்தேனோ தந்தையே தாயே!
சித்திய குருதியும் சீயும் புழுவு மொய்த்து தீண்டாத வுடல்
தானே

அதனையே எந்தை யரிச் சித்தால் ஏனோ நீங்கள் பட்சத்தால்
எந்தையே மயங்காது சங்கரன்—சிந்தையே களிகூறிடும்படி
[தாயே]

வையகமும் சுற்றமும் அன்னை பிதா புத்திரனும் வாழ்வும்
பொய்யாகுமே
தெய்வ நிலையைக் கண்டு சிந்தை மயக்கம் விண்டு தினமும்
அஞ்சலி
உனது நெஞ்சிலே இனிதுடன் சொலும் தனயனான் சொல
[தாயே]

தத்துவக் கூத்தாடடை மெய்யென்று நம்பியே
தன்னை மறந்து வெம்பியே தந்தையே தாயே!
சிற்றறிவாகாமல் சிவனை நான் மறவாமல்—தியானம்
செய்வேனிப் போதே
கர்த்தனுக் குரைத்திடும் காரியம் நடத்திடும்
கலங்கிடாமலே விளம்பும் வார்த்தையை நலங்கொண்டன்
பொடு.
பலன்கள் கண்டிட
[தாயே]

அண்டரும் முனிவருங் கண்டிடா அடிநோக இன்று நம்மிலத்
தேடியே
தந்தையே தாயே கொண்டவர் வந்ததால்
எண்டிசையும் புகழ இன்றவர் சொல்படியே இன்றெனை
மடிமீதில்
கொண்டறுத் தன்புடன் ஈசனுண்டிட போஜனம் படை
நேசமாங் கைலாயங் கண்டிட
[தாயே]

## தொண்டா விருத்தம

தந்தைக்கும் தாய்க்கும் நல்ல தைரிய வார்த்தை சொல்லி
சிந்தையில் சிவோக மெண்ணி தில்லையம்பதியை நாடி
வந்தன்னை மடியில் தூங்க வள்ளலார் தனை நினைந்து
சந்தோஷமாகத் தொண்டர் தனயனை அறுக்கின்றாரே!

## வசனம்

தாய்க்கும் தகப்பனார்க்கும் சிராளனானவன் தைரியம் சொல்லி சிவயோகத்தைத் தியானித்து சிதம்பரத்திலே சிவனை நிறுத்த சிறுத்தொண்டர் கடவுளை தியானித்து சந்தோஷத்துடனே அறுத்தார்

## தொண்டர் விருத்தம்

அயத் துரித் தசை வெவ்வேறாய் ஆய்ந்தெடுத் தரிவை கையில்
உறுத்துடன் சமையென்றீய ஒண்டொடி கரிகளாக்கி
கருத்தனைத் துதித்த நாவுந் தலையினைக் கழித்தே வைக்க
பொருத்த சந்தன மானந்தத் தலைக்கறி பொருந்தச் செய்தாள்.

## வசனம்

இப்படியே குழந்தையை அறுத்துத் தசைகளை வெவ்வேறாகச் செய்து வெண்காட்டு நங்கையிடத்திலே ஒப்புவிக்க அவளும் திவ்வியமாய் கறிகளாக்கி, சிவனைத் துதித்து சிந்தை மயக்கம் நீங்கும்படியாய்ச் சொன்ன நாக்குடைய தலையை சும்மா வைத்துவிட, அதனைச் சந்தன நங்கை தலைக்கறி தினுசு மாதிரி யாக்கி வைக்கவும் இப்படிச் செய்தபிறகு வெண்காட்டு நங்கை சிறுத்தொண்டரைப் பார்த்து சொல்லுகிறவிதங் காண்க!

## நங்கை கொச்சகம்

**ராகம்: புன்னாகவராளி**

தந்திதனை யுரித்த தற்பரனை சிந்தை வைத்து
இந்த உலகு பொய்யென் றெண்ணியே—மேல் வீட்டைய
எந்தனுயிர்த் துணைவா ஈசனன்பர் தன்னையே நீர்
சந்தோஷ மாயழைத்து சலுதியில் வாவென்றாளே!

## வசனம்

சரணம் சரணமையா சுவாமி, தேவரீர் இந்த உலக வாழ்க்கையை பொய்யென்று, மோக்ஷ வீடு மெய்யென்று, தம் பிரார்க் கமுதிடச் சொன்னபடியே ஆக்கி வைத்தேன். தேவரீர் கருக்கிலே போய் கங்காள நாதரை அழைத்துக் கொண்டு வாருங்களையா சுவாமி!

## தொண்டர் கந்தார்த்தம்

தேவரிலும் மனிதரிலும் நாகரிலு முனைப்போலே
சிந்தையுள் கணவனை வந்தித்தேற்றும்
பூவையர்களிலை யென்று பாவலர்கள் புகழ்ந்தேற்றப்
புத்திமதியுடைய நற் பொறுமையான பாவையே!
யானுமிப்போ அரனடியாரைப் பணிந்தழைத்தரை நொடியில்
பாராய் வாரேன் — தீவினைகள் அறவின்று

ஆவலுடன் கறி நன்றாய் செய்ததிட்ட மெப்படியோ
அதனையின்று

தையலே எனக்குச் செப்புமுன் கீர்த்தி பெற்ற
சானகி பாரதியான பெண்ணாள், ரதி மேனகையாள் துதி
ஞான மின்னே கறி செய்த திட்ட மெப்படியோ
காமனெனை யணுகாமல் பூங்கணைகள் பொழியாமல்
கலவிதனில்ப்

பழியாத கலைகற்றே தான்
நேமமுடனாசார ஓமமுடனே சார நிஷ்டை நயிட்டிய மெலா
மிஷ்டமாகித்
தாமதமிலாத் தையலே நினைத்தபடி சங்கரனடியார்
அமுதுண்க நீதான்
சேம முடன் செய்த விதமே மனதிற் கிசைவாகச்
செப்படிக் கறியின் வகையை
கங்காள நாதர் சொற்படி சரியானதாயமைய எனதுடைய
செல்வியே நயகுண வல்லியே மதுரித சொல்வியே
உனதுட வல்லமையறியவே — செப்படி கறி செய்த
திட்டமெப்படியோ

வசனம்

இப்படி பெண்சாதியைப் புகழ்ந்து, கறியாக்கிய வித மெப்படி யென்று கேட்க அப்போது வெண்காட்டு நங்கையார் கணவனைப் புகழ்ந்து, கறியாக்கிய விபரஞ் சொல்லுகிறாள்:—

நங்கை கொச்சகம்

சங்கமரைப் பூசை செய்து தானவர்கள் காணரிதாம்
மங்கையிடப் பாகம் வைத்து வள்ளலருளே தழைத்த
என் கணவா சொல்லு கிறேன் ஈசனன்பரா யெழுந்த
கங்காள ருண்ணு கின்ற கறியின் வகை யெல்லாமே!

வசனம்

சங்கமராகிய அடியார்களைப் பூசை செய்து அரன் பதமும் அவருடைய அருளும் பெற்றுடைய என் பிராணநாயகா கறியின் வகையைச் சொல்லுகிறேன் கேளுங்களையா சுவாமி.

## தரு-82

இராகம்: தாளம்: ஆதி

பூவுலகில் நமதுட புகழ் நிற்கவே—நமது
புத்திரனைச் சமைத்த விதம் முற்றுரைப் பேலே—சுவாமி

1. சந்தெலும்பும் நெஞ்செலும்பும் தாளிதம் செய்து—
தேன்போல்
சாறெனப் பேரிட்டதனைச் சமைத் தேனே!

2. கையெலும்பும் துடையெலும்பும் காயங்களிட்டுப்புளி
கடுகிட்டுத் தாளித்துக் கறுஞ் சாறென வைத்தேன்

3. பளுவெலும்பு மற்று நொறுக் கெலும்பனைத்தும் மேலாம்
பழச் சாறிட்டதனை ரசமாய்ப் பத்தர்க்குச் செய்தேன்.

4. கைவிரல் கால்விரல் கூட்டுக் கறியாக்கி—குடலைக்
காராவின் நெய்யில் வறுத்து ரெத்தக் கச்சாயம் வைத்தேன்

5. ஈரல் மிளகிட்டுத் தாளித் தின்பமாய்த் தாமரைக் காயை
ஈசனன்பருக்குத் தீயலாய் இசைத்தேனே சுவாமி

6. சுவரொட்டி வெத்தய மிளகுப் பொடித்தடவி சுட்டு—
சுண்டி
நுரையீரல்தனைக் கிண்டி வைத்தேனே சுவாமி

7. துடைச் சதையறைத் துருண்டையாகவே காயம் ஏலம்
சோம்புடன் பட்டை யரைத்து சூளப் பிரட்டி

8. தடையெனக் கால் சதை யறுத்து நெய்யில் வறுத்து
முதுகு மார்ச் சதையைத் தீயல் செய்து வைத்தேனே

9. பக்க விலாச் சதைப் புளிப்பச்சடி செய்தேன்
அரவா பரணன பர்க்கின்பமாகவே

10. இப்படிக் கறி வகைகள் செப்பமாய்ச் செய்தேன் நீரும்
எந்தை பிரானடி யாரை சந்தோஷமாக

11. ஒப்புடனே கூட்டி வாரும்இப் போதே சென்று
ஒருவனே துணை யேதினி வருவதேது காண்.

## நங்கை விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

நங்கையும் கணவனார்க்கு நல்லடி பணிந்து போற்றி
சங்கரனடியவர்க்குச் சமைத்திடும் கறியைச் சொல்லி
எங்கள் நாயகனே நீரும் ஈசன் போல் வந்த நாதன்
தங்களை யழைத்துக் கொண்டு சல்தியில் வருகுவீரே!

### வசனம்

சரணம் சரணமையா சுவாமி, இந்த விதமாக ஈசனன்பர்க்கு கறி சமைத்திருப்பதால் தேவரீர் சுருக்கிலே சென்று கங்காள நாதரை அழைத்துக் கொண்டு வாருங்களையா சுவாமி!

## தொண்டர் சிற்றடி விருத்தம்

போற்றி நங்கை புகன்றது நன்றென
ஆத்தி நீழல் அமர்ந்திடும் நாதன் பால்
வேத்திரக் கரன் போல விரைந்து போய்
வாழ்த்தி யேத்தி வருக வென்றானரோ!

### வசனம்

நங்கை புகன்றதைக் கேட்டு சந்தோஷ முடனே ஆத்தி யடியிலிருந்தவரைக் கண்டு வணங்கினான்!

## தொண்டர் தரு-83

ராகம்: தாளம்:

தந்தி முகன் கந்தர்க்குத் தாதையாய்
தன் வடிவு கொண்ட குருநாதா
வந்து கந்தே னுந்தன் திருத்தாளே
வள்ள லென்று ன்னைப் போற்ற முன்னாளே
சங்கமருருவாக வுகந்தே சங்கரன் போலிங் கெழுந்து வந்த
கங்காளரே சரணம் நின்றாளே! கர்த்தனே சரண
மெனையாளாய்.
தேவரீர் சொற்படியே கறிகள் செய்து வைத்து வந்தேனடிகள்
ஆவலாகப் புசித்திட வென்றே அய்யனே எழுந்தருளுவீரின்றே
எழுந்தருளுமமுதுண்ண வேதானே, ஏழை பின்னாலே வாரும்
நீர்தானே!
கொழுந்து மதி யணி சடையானே, கோவேவா யென்னை
யாளுடையானே!

## கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

சரணஞ் செய் தெழுந்திரென்ன தம்பிரான் கோபமாகி
கரணங்கள் புலனைக் காய்ந்த கற்றவர் போலே வந்து
சரணஞ் செய் கள்ளா உன் போல் தரணியில் கண்டதில்லை
தருணமுன் வேளை போச்சு சாப்பிட வாரேன் நானே!

### வசனம்

அடா வாடா உட்கரணம் புறக்கரணம் நீக்கிய மேலோர்களைப் போலே பசப்பு வார்த்தை பேசுங் கள்ளா. நான் சாப்பிடுகின்ற வேளை தப்பிப் போய் விட்டபடியால் இனிநான் சாப்பிட வரமாட்டேன் போடா திருடா.

## சுவாமி தரு-84

**ராகம்:** **தாளம்:**

தில்லுமுல்லும் பேசி இல்லுக்கு வாவென்ற திருடா
எழுந்திரடா

அடடா முரடா எழுந்திரடா.

1. எல்லையில்லாப் பேர்களென்னை உண்ணென்றதற்கு
எழுந்திராமலே இருந்தேனே!
உன்னைத் தொழுங் கள்ள னென் றறிந் தேனே
நீ மொழிந்ததையும் மறந்து வீணே - [தில்லு]

2. பத்தர் பரதேசி மார்களை இப்படிப் பட்டினியாய்ப் போடு
வாயோ—உனக்
கித்தனையாவது புத்தியிருந்தால் எழுந்திருமென்று
சொல்வாயோ
கற்று மறந்த கசட்டுப் புத்தியால் காக்க வைத்தாயேடா—
போடா—இது
மார்க்க மல்ல வடா தீயா—துன்மார்க்கம் போல் காணுதே
பேயா [தில்லு]

3. ஆகம சாஸ்திரம் எல்லாம் தெரிந்து அடியார்
பூசை செய்வார் போலே
கல்வி விவேக நடத்தை யுடையவனைப் போலே விளம்பர
வேடம் பூண்டதாலே

சிவயோகியர் சித்தத் துக்கேற்க நடக்க உன்னாலே யாகா
திப்பாலே—
நீ சொன்ன தெல்லாம் தப்பாலே—இப்போ என்னை
யழைத்திடச் சால— [தில்லு]

4. சொன்ன கெடுவான நாழிகையுந்தப்பி சோறுண்காமலே
நீ குழப்பி—இப்போ
என்னிடம் வந்து இனியவனைப் போலே ஏற்க வென்னை
மெத்தப் பசப்பி
என்னைச் சள்ளை களாகிய சாடைகள் பேசி சாப்பிட
வாவென்று அளப்பில்
என்னைக் கூப் பிட்டோமென்று எக்களிப்பில் நான்
சாப்பிடோ முந்தன் அளப்பில்— [தில்லு]

## காங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

கும்பிடுங் கள்ளா நீறு குழைத்திடுங் கள்ளா சோறு
அன்புடன் படைப் பேனென் றனேக தாமதம் செய்திப்போ
என்பதந் தொழுது வாவென்று அழைத்தால் வருதவேனோ
அன்பர் போல் வேடம் பூண்டதாலதற் கெழுந்தி ரேனே!

## வசனம்

கும்பிடுங்கள்ளா, விபூதி பூசுங்கள்ளா. நீ கறியமுது அன்புடனே படைப்பேன் என்று சொல்லி, இத்தனை நேரங் காக்க வைத்தாயே! என்னைச் சாப்பிடச் சொல்லி அநேகமான பேர் வந்து கூப்பிட, அதற்கு நான் போகாமலிருக்க, நீ இப்படித் தாமதப்படுத்தினால், நான் சாப்பிட மாட்டே னென்று செய்தது போல் காணாது, ஆனாலுமுன்னை அதற் கேற்றபடி செய்வேன். நீ இந்தத் திருவேடம் பூண்டபடியி னாலேயும், என் காலிலே வந்து விழ்ந்த படியினாலேயும் பொறுத்தேன்; இனிமேல் உன் னூருக்கு எழுந்து போம் பிள்ளாய் திருடா.

## தொண்டர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

திரிபுரனல்லேன் காலன் திருமால் நான்முகனுமல்லேன்
முன்னெதிரி செய் தக்கனல்லேன் யிருள் யானை அசுரனல்லேன்
கரிய நஞ்சுண்டார்ப் போலக் காய்ந்திடா தருளிக் காத்தென்
சிறியனூண் சமையலுண்ண தேவரீர் வருகுவீரே!

### வசனம்

அகோ சரணம் சரணமையா சுவாமி குருநாதனே! கரிய கண்டனே! என்னைக் கோபியாதேயும், நான் திரிபுரன், காலன், நான் முகன், நாரணன், தக்கன், புலி, யானை, சலந்தரன் என்று சொல்லப்பட்ட விசாதனல்லவாச்சும். நீலகண்டருக் கொப்பான குருநாதனே! கோபமில்லாமல் எழுந்தருளி, அடியேனுடைய குழந்தை ஊன் திவ்வியமாய்ச் சமைத் திருப்பதை வந்து பொசித்தருள வேணுமையா சுவாமி!

### தொண்டர் தரு-85

**ராகம்: ஆனந்தபைரவி** **தாளம்: ஜம்பை**

கோபம் செய்யாதே குருநாதா—உந்தன்
குரைகழல் நம்பினேன் குழந்தையைக் காவாய்
அடியேன்மேல் பிழையொன்றுமில்லையே—எந்தன்
அருமை மகனைப் பள்ளிக் கூடந்தன்னிலையே
கடிதினில் சென்றுமே யழைத்து வந்து
காதலி பாலனொ டென்மனம் களித்து
கங்காளனே செயா வென்று பாலன் கழுத்தறுத் தசை
குடல் கழித்திடாதின்று
உண்கும்படியே கறியாக்கி வைத்து—ஒண்டொடி என்முகம்
தன்னையே நோக்கி
அய்யர்தனை யழைத்து வாருமென்று அன்புடன் சொன்னபடி
வந்தே னீரும்
நம்பின எளிய வனென்று அருள் நாட்டம் வையாமல் கோபம்
காட்டினீரின்று
எவ்விடம் போவேன் குருநாதா—எளியோனைக் காக்கவே நீதா
குணக்குன்றே உன்கோபம் தாங்க இந்தக் குவலயத்துள்
ளோரா லாகுமோ நீங்கள்
இணக்கமாய் எந்தன் பின்னோடே—வந்தென் பாலன் கறிய
முதுண்டிட நானே
சரணம் சரணம் குருநாதா என்னைத் தற்காக்க வேணுமே
சகலப் பிரக்யாதா—

### கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

அன்புடன் கண்ணிர் சோர அஞ்சலி புரிந்து போற்றும்
நண்பன் மேல் கிருபை கூர்ந்து நாதனுமன மகிழ்ந்து
உன்புக ழுலகோ ரேற்ற உறுதிகொண் டெனையே காத்த
அன்பனே வருவே னீயும் அஞ்சிடா யென எழுந்தார்.

வசனம்

அகோ வாரும் பிள்ளாய் சிறுத் தொண்டனாரே! இந்தப் பூலோகம் உள்ள வரைக்கும் உன்னுடைய பேரும் கீர்த்தியும் விளங்கத் தக்கதாக நாம் அமுதுண்ண வருகிறோம் பிள்ளாய் பத்தனே!

பொது தரு-86

ராகம்: மத்யமாவதி தாளம்: ஆதி

வந்தனரமுதுண்கவே - கங்காள நாதர்

1. அந்தகன் றனையுதைத்த—செந்தளிர் மலர்ப்பாதத்தில்
விந்து நாதம் போல் நாதித்து - கந்து கண்டாமணி தரித்து
[வந்தனர்....]

2. சந்திராதித்த ரென்னவே காதிலணிந்த-கந்தக் குழை பிறை துன்னவே
முடித்த சடை-செந்தழலழலென்ன—கந்த ரக்கமாலை மின்ன
இந்திராதி செயா வென்ன—மைந்தன் கறிதன்னை யுண்ண
[வந்தனர்...]

3. சிறுத்தொண்டர் முன்னும் பின்னுமாய் வரவிவர்தன்
உருக்கண்ட பேர்களின்னமும்-நம் பிள்ளை யெல்லாம்
அறுத் துண்டிடு வாரே யென்று-விருத்தரிளையோர்க்கு விண்டு
உரைத்திட அவர்கள் வெகுண்டு—கருத்துடனவரில் புகக் கண்டு [வந்தனர்...]

4. அண்டர் முனிவோரும் மறையும்-அயன் மாலொடு
எண்டிசை பாலோர் பரவியும்-அறியொணா நீல
கண்டர் திருவுருவைக் கண்டபேர் காமுறவே
பண்டை மலத்தோர் வெருவா தொண்டர் வளவில்
[வந்தனர்...]

5. தங்கை கண்டு கண் களிக்கவே-சந்தன மானும்
சங்கரா வென்றே பழிக்கவே - பாதச் சதங்கை
பொங்கு கடல் போல் ஒலிக்க – சங்கு சேகண்டி முழக்கி
திங்கள் முடியைத் துலக்கி-எங்குமுள உயிர் செழிக்க
[வந்தனர்]

## நங்கை விருத்தம்

ராகம்: மத்யமாவதி

பழமல மறுத்து முத்தியம்பதம் பெறும் சிறுத்தொண்டையன்
வளவினிற் கங்காள நாதர் வந்திட நங்கை கண்டு
புளகித முடனே புந்தி பூரித்துப் பாங்கியோடும்
அளவிலாப் புகழைப்பாடி அஞ்சலி செய்கின்றாரே!

### வசனம்

கங்காள பரமேஸ்வரர் வீட்டிற்கு வந்தவுடன் வெண்காட்டு நங்கையும் சந்தன நங்கையும் ஆனந்தபரவசமாய்த் தோத்திரம் செய்தது காண்க.

## நங்கை தரு-87

ராகம்: தாளம்:

சரணம் சரணம் குருநாதா—வீர சங்கமராய் இங்கெழுந்த
பொற்பாதா
மரணப் பிறவியறுப்போனே செக—வாழ்வைப் பொய்
யென்றவர் வாழ்விலிருப்போனே
சதகோடி மந்திரம் விளங்க—திருத் தாளில் வீரகண்டா மணி
யோசை முழங்க
நிதமாடிப் பாடியே துதிப்போர்—வினை நீறாக்கு வோமென்று
திருநீறை விதிப்போய்
எங்கள் கலியைத் தீர்ப்போனே—செக தீசனே வாசனே தேசனே
சரணம்
பாலன் கறியுண்ண நாடும்—நம் பரமனைச் சந்தன மானே
நீ பாடும் [சரணம் சரணம்]

## நங்கை விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

உத்திராபதியே ஞான முணர்ந்தவர்க் குரியோ யெங்கள்
வஸ்த்துவே என்றெல்லோரும் வணங்கிட வந்த நாதா
பெற்றிடுங் குழந்தை தன்னைப் பிரியமாய்ப் புசிக்க வந்த
முத்தனே உந்தன் பாதம் முக்காலும் சரணந்தானே!

### வசனம்

உத்திராபதியாய், அஞ்ஞானம் நீக்கினோர் முன்னால் நின்ற முதல்வனே, பெற்ற புத்திரனை யுண்ண வென்று வந்த கங்காள பரமேஸ்வரனே! சரணம் சரணமையா சுவாமி!

## நங்கை விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

சரணமே செய்து நங்கை சந்தன மானோடுள்ளக்
கரண வேதனையில்லாத கணவனும் ஒருமையாக
சொர்ண கெண்டிகையில் நீரை சொரிந்தடி சுத்தி செய்து
பொருள் நயம் பெறவே பாத பூசைகள் புரிகின்றாரே!

## வசனம்

சுவாமி பாதத்திலே நமஸ்காரம் செய்து எழுந்திருந்து சிறப்புடனே, வெள்ளிப் பலகையைப் போட்டு அதன்மேலே சுவாமி பாதத்தை வைத்து சொர்ண கெண்டியில் சலங் கொண்டு வந்து பாதபூசை செய்யத் தொடங்கினார்.

## நங்கை தரு - 88

**ராகம்: சஹானா** **தாளம்: ஜம்பை**

தொழுவோம் இனி நாம்—குருதேசிகனை
தொழுவோம் இனி நாம்

1. அழகாகிய சீரடி மீதினில் தேன் ஒழுகா மலர்த்தூவியு
மன்புடனே — [தொழு]
2. முடியா முதல் சீரடி மீதினிலே கடியார் புனலாடிடவே
பொழிந்து — [தொழு]
3. நீறு சந்தனமும் சீருடனணிந்து வீறு சேரடியார்
அடிமீதினிலே — [தொழு]
4. முல்லை பாதிரி செண்பக மாவலரி அல்லி மல்லிகை
மெல்லடி தூவியே — [தொழு]
5. புன்னை கொன்றையுங் கூவிள மாதுளையும் பன்னீர்
ஆத்தியினோடுன்னி யர்ச்சித்து நாம் — [தொழு]
6. தூபதீப மோடாராதனை புரிவோம் சோப தாப மற
நேம மதாகவே — [தொழு]

## நங்கை விருத்தம்

**ராகம்: மத்திய மாவதி**

கடவுளர் போல் வந்த கங்காள நாதா போற்றி
புடவியி லெம்மைக் காக்க வந்திடும் புனிதா போற்றி
அடவுடனமுது கொள்ள ஆடக வாசனத்தில்
திடமுட னெழுக வேணும் திருவடி சரணந்தானே!

### வசனம்

கடவுளாரைப் போல வந்த கங்காள நாதனே சரணம் பூமியிலே எங்களை யாள்க வந்த புனிதனாகிய தேசிகனே சரணம் தேவரீர் இந்த அபரஞ்சிப் பலகையாகிய ஆசனத்தில் எழுந்தருள வேணும் அமுதுண்ணும்படியாக ஐயையா சுவாமி!

### கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

நங்கையே தொண்டனாரே நமதுட தேசந்தன்னில்
உண்குநாள் தனிலே உந்தன் அகத்தினில் உண்க வந்தோம்
இங்கு நீகறியமுது இதவுடன் படைப்ப தெல்லாம்
அங் கடை யாளத் தோடு அன்னையே படைத்திடாயே!

### வசனம்

அகோ வாருமம்மா தாயே! அன்னங்கறி படைப்பதை இன்னதிதுவென்று அங்க அடையாளத்தோடு படைக்க வேணுமம்மா தாயே!

### நங்கை வசனம்

அப்படியே படைக்கிறேனையா சுவாமி!

### நங்கை தரு-89

**ராகம்:**

**தாளம்: ஜம்பை**

திரியம்பக னடியார்க் கெதிராக வெண்சீலை மடித்து வைத்து
செம்பொற் கலமதில் மேலாகப் பொற்புறத் திருத்தி
மரு மலர்ப் பன்னீர் தெளித்துச் செஞ்சாலியன்னத்தையே
இலையில்
வைத்தையர் சொற்படி சிற்றடிக் கறி பொரித்ததையே
காலின் கறியிது பாருந் துடைக்கறி அய்யனே—நன்றாய்
காணுஞ் சந்தின் கறி ஆண் குறிக்கறியிது மெய்யனே
பக்கவிலாச் சதை பக்கதின்கறியிது தானே—முன்கைப்
பத்து விரலிது மொத்தமாய்க் கைக்கறி கோனே!
ஈரல் கறி நுரையீரல் கறி சுவரொட்டியும்—நன்றாய்
இனிய குடல் கறி கனிவுடனே செய்தேன் சட்டமாய்
பாதத் தெலும்புச்சார் நெஞ்செலும்புச்சார்—பாகமாய் செக
பத்தர் விலாசருக்கே நத்தியுண்ணச் செய்தேன் நீதமாய்

அஸ்திமுழுவதும் வைத்தக் குழம்பிது வாகுமே—ரெத்தமான
பொரியல் ரசாயினச்சார் வெகு பாகமே
முத்தி தருஞ் சிவ பத்தராகிய கங்காளரே நீங்கள்
நத்தும் படியே வெகு சுத்தியாய்ச் செய்தேன்—தாங்களே
உண்டு பாருங் கண் கண்டருளுமிகக் காட்சியே—பெறும்
தொண்டர் தவமெல்லாம் இன்று புகழ் பெற்றேன் சூட்சியால்

## விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

அன்னமுங் கறிகளெல்லாம் அன்புடன் படைத்துப் போற்றி
உண்ணு மென்றுபசரிக்க உம்பர் நாயகனார் சொல்வார்
கன்னியே தலையின் மேதைக் காண்கிலோ மெங்கென்றோத
அண்ணலே உணவுக் காகா தெனவதைக் கழித்தோ மென்றார்

## நங்கை வசனம்

இந்தப் பிரகாரம் அன்னங்கறி படைத்தேன் தாங்கள் சந்தோஷத்துடனே போஜனம் உண்க வேணுமையா சுவாமி!

## கங்காளர் வசனம்

அகோ வாருமம்மா தாயே! இது முதலான சிரசுக்கறி எங்கே யம்மா தாயே!

**நங்கை :** அது உண்காத பதார்த்த மென்று தள்ளிப் போட்டோமையா சுவாமி

**கங்காளர் :** ஆனால் எங்கள் தேசத்திலேதலைக்கறி விருப்ப மாய்ச் சாப்பிடுவோம். அது இல்லாததினாலே சாதம் செலவில்லையம்மா தாயே!

## பொது விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

நங்கையே எங்கள் நாட்டில் நாமுண்போ மதுவெல்லா மென்று
எங்கள் நாயகனார் சொல்ல என்செய்வோமென்று வாட
மங்கையே யஞ்சேலென்று வளர் தலைக் கறி யெடுத்து
சங்கம ருண்க அந்த சந்தனமான் வந்தாளே!

### வசனம்

இந்தப் பிரகாரம் கங்காளனாதர் சொல்ல, அப்போது வெண்காட்டு நங்கையும் மயங்கி நிற்க, சந்தன நங்கையும் அஞ்சாதே தலைக்கறி இருக்கிறதென்று கொண்டு வந்தது காண்க !

### சந்தன நங்கை – விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

கைலாச வாசனான கணபதீஸ்வரனார் தானே
ஒயிலாக வந்தா ரென்றுள்ளுணர்ந்தவர் விருப்பமாக
நெயிலாக்கித் தலையினூனை நேமமாய்க் கரத்தெடுத்து
முயல் வார்க்கு முன்னாய் நின்ற முதல்வர்க்குப்படைக்கின்றாளே!

### சந்தனநங்கை தரு-90

**ராகம்:** **தாளம்: ஆதி**

1. நாலு வாக்கோதி ரசத்தைக் காட்டும் அய்யா
   தாளுவாய் நாக்குக் கறி யிதைச் சூட்டும்
2. சத்த முதல் கேள்வி வழியான—காது
   தாளித்த கறியிது தானே!
3. கெந்தமறிந்தாக்கிருக்கேன் மூக்கின் வெந்தய மிட்டன்புடனே யாக்கி
4. ரூப விந்திரிய சக்கரங் கண்ணே வெகுபாகமாக செய்தேனே நீருண்ண
5. பரிசமாம் பல் வேலியாங்கபோல கறி வரிசையாய்ச் செய்தேனவர்க்கு மேலே
6. மூளை பொரிக் கறியாய்ச் செய்தேனே எலும்பை நீள் புளிச் சார்ரச மாக்கினேனே
7. உண்டென் பிறவிப் பிணியை நீக்கும் நீலகண்டனடியாரே உந்தனோக்கால்

### தொண்டர் வசனம்

அகோ சரணம் சரணமையா சுவாமி தேவரீர் மனம் போல தாதியான சந்தன நங்கையும் தலையினுடைய கறியெல்லாம் படைத்தாள் இனிமேல் தேவரீர் உண்டருள வேணுமையா சுவாமி!

## நங்கை தரு-91

ராகம்: தாளம்:

1. உண்டருளன்னங்கறி—தொண்டனருள் பெறவே
எண்டிசையோர் புகழவே—கங்காள நாதா
2. தந்தியை உரித்தவர் போல் வந்தருளுங் குருநாதா
சிந்தை மகிழ்ந் தமுதருந்துவீர் கங்காள நாதா
3. ஆதி வைரவரென்ன ஓதிய மால் புகழ் சொன்ன
நாதனே அமுதருந்துவீர்—கங்காள நாதா
4. அஞ்சன மிட(ற்று)மறைத்து தஞ்ச மென்றுஎன் பாலுற்றோய்
அஞ்சலென்றன்ன முண்டருள்வாய் கங்காள நாதா.
5. மூலமென்றடியார் தொழும் கோலங்கொண்டவனே—இளம்
பாலன் கறியுண்டருள் செய்வீர் கங்காள நாதா.
6. சுந்தரமுகப் பொலிவை எந்தனிரு கண்மகிழ
வந்த நாதா சோறுண்டருள்வீர்—கங்காள நாதா.
7. அண்டர் முனிவோர் அறியா தொண்டர் நாயகன் போல் வந்தோய்
இன்ற முதருந்தும் அய்யனே—கங்காள நாதா.
8. வேதன் சிரங் கொய் தருளும் நாதர் வடி வெய்திடுவாய்
சீதமார் போசன முண்டருள்வீர்—கங்காள நாதா.
9. திரிபுர மெரிசெய்தருள்—பரமனாருரு வெய்திய
குருபரா அமுதருந்துவீர்—கங்காள நாதா.

## நங்கை விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

பாதள விசும்பிலுள்ளோர் பார்த்திடற்கரிய கோல
நாதனே எம்மைக்காக்க நரர் வடிவாக வந்த
போதனே எளியேன் செய்த போனக மருந்திப் பவ்வு
வேதனை யகற்றி யாள்க வேண்டினர்க் கருள் செய்வீரே.

## வசனம்

சரணம் சரணம் கங்காளபரமேஸ்வரன்போல் வந்த தேசிகனே! அடியேன் செய்த அன்னங்கறியமுதை புசித்தருள வேணுமையா சுவாமி.

## சங்கரனர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

மறையவர் குலத்துதித்து மறை முதலாகமங்கள்
தெரியு னல்லன்பர் என்போல் சிவனடியார்கள் தன்னை
அரை நொடி தனி லெம் மோடே அமுதருந்திடவிப் போதே
திறமுட னழைப்பாயெல்லாந் தெரிந்திடும் தொண்டனாரே!

## வசனம்

பிராமண குலதிலகனாய்ச் சகலகலையறிந்த சிறுத் தொண்டனாரே என்னைப் போலொத்த ஒரு பரதேசியை அதிவிரைவுடனே அழைத்து வாரும் பிள்ளாய்.

## தொண்டர் தரு-92

**ராகம்: கானடா** **தாளம்: ஜம்பை**

1. அண்ணலே யோகா—அடியருக்கு யானெங்கே போக
உண்ண வுன் போலவே இன்னொரு தேசிகன்
தன்னை யழை யென்றால் என்ன நான் செய்குவேன்—
[அண்ண]

2. திருக்கண்ட கண்ணுக் கையா - ஒரு தீங்கு மிருக்கா
தென்றெண்ணு மெய்யா
குரு பிரசாதமாய்த்தேவர் உரைப்படி வழுவாமலே
நரர்ப்பசுக் கறிய முதை - சிறப்புடனருந்திடாமல்—
[அண்ண]

3. நாடு நகரு மலையும் குகையும் சோலை, காடுங்கரையுஞ்
சாலையும்
தேடிப் பரதேசியை நாடித் திசை திசையாய்
ஓடியுங் காணாமல் நின்று நாடினேன் தேவரைக்கண்டு—
[அண்ண]

4. சித்தமும் மயங்கி வாடியே அடியார்களைப் பற்றினாற்
றிசையுந் தேடியே
பத்தர் பரதேசி மாரை எத்திசையுங் காணாதாலே
பித்தர் போல் மயங்கு மென்பால் உற்ற குரு தேசிகனே—
[அண்ண

5. நீலகண்டரைப் போலவே கங்காள ரூப கோலங் கொண்டிடு
மேலவா

ஆல முண்டவரன் பரை ஓலமென்றெங்குந் தேடியே
காலசந்து வாடு மென்பாலி சைந்த பரமனே— [அண்ண]

## தொண்டர் விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

மதியென முகமுஞ் சென்னி மாலையுஞ் சூலத் தோளும்
கதி தருந்தாளும் வீர கன மணி பலிப்பு மார்பில்
பொதியு முந்நூலுஞ் செச்சை பொற்புற நோக்குங் கண்ணும்
துதி செய்வோர்க் கருளுங் கையா தொண்டரை எங்கு
காண்பேன்.

## தொண்டர் வசனம்

சந்திரோதயம் போலொத்த முகமும். சிரமாலை யழகும் சூலந் தாங்கும் தோளும் அடைந்தோரைக் காக்கும் தாளும் வீர கண்டாமணி விளங்கிய முழந்தாளும் செச்சையும் முன்னூலிலங்கிய மார்பும், சகலரும் சிறப்புடைய பார்வையும், அடைந்தோரைத் தாங்கிய கையும், அஞ்ஞான இருள் நீக்கிய வசனமும் உடைய தேவே! நான் தொண்டரை எங்கே காண்பேன். தேவரீர் அமுதுண்டருள வேணுமையா சுவாமி.

## கங்காளர் விருத்தம்

ராகம்: மத்தியமாவதி

சித்தின மகற்றி முத்தி சேர்க வென்றடியார் பூசை
பத்தியாய் நடத்து கின்ற பன்னவர்க் கதிகமான
பத்தனீயாதலாலே பரங்களுக் கதிகமாக
ஒத்துநீ இருப்பதா லெம் முடனிருந்தமுதுண்பீரே!

## வசனம்

அகோ வாரும் பிள்ளாய் பக்தனே! என்போலொத்த பரதேசி உனக் கெங்கே அகப்படப் போகுது. நீ இந்த திருவேடம் பூண்டதாலும், மகா அன்பனான படியினாலும், என்னுடனே கூட இருந்து அமுதுண்ண வாரும் பிள்ளாய் பக்தனே!

## சுவாமி விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

காரைக் காட்டு அம்மை பிட்டுக் கனிவுடனளித்த அன்னை
நேரொத் தாளென்று வையம் நிகழ்த்திடப் பணி செய்கின்ற
பேர் பெற்றா ரென் றுரைக்கும் பெருமையைப் பெற்ற தாயே
சீரொத்த கணவனார்க் கென்போல் சிறப்புடன்
படைத்திடாயே!

## வசனம்

அகோ வாருமம்மா தாயே! காரைக்காட்டம்மையிலும், பிட்டிட்ட அன்னையிலும், அதிக அன்புடைய தாயே, எனக்குப் படைத்த பிரகாரம், உன் புருஷனுக்கும் படையுமம்மா தாயே!

## நங்கை வசனம்

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி!

## நங்கை விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

சந்திரன் கங்கை தும்பை சடாடவியான் போல் வந்த
எந்தையே தேவர் சொன்னபடி எந்தன் மணாளர்க் கன்னம்
அந்தமாய்ப் படைத்தேனீங்கள் அடைவுடனன்ன முண்டு
புந்தியும் மகிழ்வீரெத்தாய் பொன்னடி சரணந் தானே!

## வசனம்

அகோ சரணம் சரணமையா சுவாமி, சந்திரனையும் கங்கையையும், தும்பையையும், சடையில் தரித்தருளிய பரமேஸ்வரன் போல் வந்த தெய்வமே தேவரீர் சொன்ன படியே என் புருஷனுக்கும் படைத் தேனையா சுவாமி.

## கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

நல்லது தாயே தொண்டா நாமுரைப்பது கேளுந்தன்
பிள்ளையை யழைத்து வாரும் பிரியமா யன்ன முண்ண
அல்லது இல்லையாகில் அமுதுண்க மாட்டோம் பிள்ளாய்
வல்லமை பேசிடாதுன் மகன் தனை யழைப்பிப் பாயே!

### வசனம்

அகோ வாருமம்மா தாயே! வாரும் சிறுத்தொண்டனாரே! பிள்ளையில்லா வீட்டில் போஜனம் செய்தால், மகா பாவம் ஆதலால், உன் பிள்ளையை அழைத்துக் கொண்டு வாரும் பிள்ளாய் பக்தனே!

### தொண்டர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

எங்களையாள்க வேண்டி எழுந்தருள் குருவே பாலன்
திங்களை முடித்தோன் வாழும் திருநகர் ஓதப் போனான்
இங்கவன் வருக நேர மாகுமாதலினால் தேவர்
சங்கைகள் பேசிடாமல் சாப்பிடும் சரணந் தானே!

### வசனம்

அகோ சரணமையா சுவாமி குரு நாதனே. குழந்தையானவன், திங்களை யணிந்த சிவனுடைய நகருக்கு ஓதிவரப் போனான், அவன் வரத் தாமதமாகும். நீங்கள் போஜனம் செய்யுங்களையா சுவாமி:—

### கங்காளர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

பாலன் வாரானேலன்னம் பருகிடேன் காண்பீரென்று
நீல கண்டனுமே சொல்ல நின்றிடும் தொண்டனோடு
ஆலம் நேர் விழியாளான அரிவையும் தாதியோடு
ஓலமென்றோடித் தேடி யழைத்தனருறுதி யோடே.

### கங்காளர் வசனம்

அகோ வாரும் பிள்ளாய் பக்தனே! பிள்ளை வந்தாலாச்சுது இல்லாவிட்டால் சாதம் செலவில்லையம்மா தாயே!

### நங்கை வசனம்

ஆனால் அழைத்துக் கொண்டு வருகிறேனையா சுவாமி

### தொண்டர் வசனம்

அடி பெண்ணே நங்கையாரே பிள்ளையை அழைத்து வருவோம் வாடி பெண்ணே!

## தொண்டர் விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

குருபராகுகனை யீன்ற கொற்றவா குன்றை வில்லா
சிறுவனைத் தம்பிரானார் சீக்கிரம் அழையென்றாரே
குரு மொழி தப்பிடாமல் குழந்தையைக் கூப்பிட வந்தேன்
அருள் புரி மகனைக் காண அய்யாவென் றரற்றினாரே!

### வசனம்

குருபரானந்தா குகனையீன்றருளும் ஆதியே! தம்பிரான் குழந்தை வந்தாலல்லது போஜனம் உண்கேனென்ற படியினாலே நானும் அழைத்து வருகிறேனென்று சொல்லி விட்டேன் தேவரீர் கிருபை செய்ய வேணுமையா சுவாமி:

## தொண்டர் வெண்பா

காதலியே மானே கடவுளுட சோதனைக்கு
ஏதெனவே சொல்வேனிது துயரந் தீரவே
மைந்தனுமே நம்மெதிரே வாரானோ பெண்ணேயினி
எந்த வித மென்றறிகி லோம்:-

### நங்கை – தொண்டர் - தர்க்க தரு: 93

**இராகம்:** **தாளம்:**

**தொ:-** மங்கையே மகனிங்கேயே வாரானோ துயரமதைத் தீரானோ:

**நங்கை:** மன்னனே நாம்—என்ன தான் செய்வோம்
வள்ள லருளாலே நாம் வருந்துவோம்

**தொண்டர்:** வருந்தினா லுருவம் பொருந்திட—யினிமேல்
மைந்தனும் வசனங்கள் நாம் மகிழ்ந்திட
பொருந்தவே வருவானோ புகழ்ந்திட—இந்தப்
பூமியிலானவர்கள் பொருந்திட

**நங்கை:** பொருந்திடக் கறாவுண்ட புதல்வனும் - அவர்
புண்ணியன் சுந்தரமூர்த்தியாம் போதனும்
அருந்தவர்க் காதி பேரில் பாடியே - முன்
அன்னைபால் வந்தானே மகன் ஓடியே!

**தொண்டர்:** ஓடியே வந்தது போல வின்றுமே - மகன்
உருவத்தைக் கண்டுமே சீராளா வென்றுமே
நாடியே யழைப்பேன் கண்ணில் கண்டுமே - அடி
நங்கையே சொல்லுவாய் நீ இன்றுமே

**நங்கை:** இன்றரனடியார் பூசை செய்திடும் — பேருக்கு
எத்தனை துன்பமுற்றிலும் அற்றிடும்
என்றாகமம் சொன்ன தறிந்திடும் — சுவாமி
என்ன செய்வோ மீச னறிந்திடும்

## பொது விருத்தம்

**ராகம்:**

சிறுத் தொண்டர் நங்கையோடு சிந்தை வெந்துயர மெய்தி
வருத்தங்கள் மிகவேயாகி மைந்தனே வருவா யென்று
கருத்தினில் நினைந்து தங்கள் கணபதீஸ்வரனைப் போற்றி
வருந்தியே மகனைத் தேடி மாதுமே கலங்கினாளே!

## நங்கை தரு-94

**ராகம்:** ஆனந்தபைரவி **தாளம்:** ஆதி

1 வந்திடும் எந்தனுட மைந்தனே சீராளா - உன்
மாமனழைக்குறா ரடா - சீராளா
2 முந்திய மறைகளும் முனிவர் மாலயன் காணா
முதல்வ னழைக்குறாரடா — சீராளா
3 மன்னன் சிறுத் தொண்டர் தன் மைந்தனே வந்திடுவாய்
மாதா மன மகிழவே — சீராளா
4 கன்னல் வேளை யெரித்த கடவுள ருரு மாறி
கங்காள ராகவே வந்து — சீராளா
5 உந்தனை வைத்துண்கவே உகந்தழைப்பதினாலே
ஓடியே நீ வருவாயடா — சீராளா
6 சுந்தர்க்குந் தாதையானோன் உந்தன் மாமனாகினோன்
எந்தையல்லால் வேறேதடா மகனே — சீராளா.
7 வருவாய் மகனே என்முன் வந்துந்தன் சுந்தரத்தை
மகிழ்ந்து நான் காண — வேண்டியே
8 வருந்துவதறிந்து நீயும் வா வா வா சீராளனே
மாதா மனம் மகிழவே.
9 தந்தியை யுரித்த பரன் வந்த திருவிளையாட்டை
தனயனே காண வருவாய் சீராளா
10 விண்ணவர் நாதேனாரும் உன்னை யழைத்த தாலே

விரைந்து வருவாய் மகனே சீராளா
கண்ணிலடங்காக் காட்சி உன்னை வைத் துண்ணத்தேடி
காத்திருப்பது அழகோ மகனே—சீராளா

நங்கை கரலம்

அந்தக சம்மாரன் நம்மைத் தேடுங்காலம்
அயன் மாலும் அறியாதார் அன்ன முண்ணுங் காலம்
புந்தி மகிழ்ந்துந் தனையே யழைக்குங் காலம்
பூதலத்தோர் புகழ்ந்திடும் மா புருஷகாலம்
வந்ததினால் மகன்றனையே தேடுங்காலம்
மாதவத்தோர் வழுத்தும் வள்ளல் வருந்தி உன்னை
மைந்தனையே அழையென்ற காலந்தனில்
மகனென்றே தேடிவந்து வருந்துங்காலம்

நங்கை மறுகாலம்

பல விதமாய்க் கறி செய்த பாலன் றன்னை
பயிர் வரும் மழை யென்று பகருங் காலம்
மலை மகளோர் பாகனுமே வருந்துங்காலம்
மைந்தனை வைத்துண்ண வென்றே வாடுங்காலம்
மலை சிலையான்றனைத்தேடி மறைகள் வாழ்த்த
வள்ளல் வந்து உன்னைத்தேடி வருந்துங் காலம்
அவமகல மகனே நீ வாராயாகில்
அன்னை துயர் அழுந்திடுவ தறியாக் காலம்

நங்கை தரு - 95

**இராகம்: மத்தியமாவதி** **தாளம்: ஆதி**

என்ன செய்வேன் ஜெகதீஸா எங்கே காண்பேன் என் மகனை
அன்ன முண்கவே அழையென்றாரே யானுமே—அழைப்பவர்
போல

இங்குமே தேடியே வந்து ஏங்கினேன் கணபதீஸா
கங்கையைச் சடையில் வைத்த கர்த்தனே-என்கண்மணியே
காணுவேனோ யீசன்போல் வந்த கங்காளர்—காத்திருப்பாரே
பானுண்கப் பாலனைத்தேடி ஓடியெங்குந் தேடினேன்
அன்பர் பூசை மறவாத் தொண்டர் அண்ணல் சுதனே
வாராயோ
நம்பி வந்தேன் மகனைத்தேடி நற்றொண்டர் புத்திரனே வாவா

சிறுத்தொண்டர் தவத்தில் வந்த சீராளனே—இங்கே வாராய்
அறுப்புண்ட மகனைக் கண்ணில் அடியாளுங் காணுவேனோ
சிவபூசை அடியார்பூசை செய்வோர் புத்திரனே வாராயோ
தவநேசர் பெற்றருளும் சந்ததியே வந்திடாயே

## நங்கை விருத்தம்

**ராகம்: மத்தியமாவதி**

மைந்தனே வருவாய் அன்பர் மகிழ்ந்திட வருவாய் மாலோன்
வந்தடி போற்றும் வள்ளல் வஸ்துவைக் காணவாராய்
இந்த நற்செனனம் தன்னில் ஈசனே நம்மையாள்க
வந்ததினாலே மைந்தா வந்திடாயெந்தன் முன்னே

## வசனம்

இந்த சென்மத்திலே நம்மையாள்க வேண்டி ஈசன் திரு விளையாட்டாய் நம்முடைய அகத்தில் வந்து உந்தனை வைத் துண்க வேண்டிக் காத்திருப்பதினாலே இனிமேல் தாமதம் செய்யாமல் மகனே வருவாய் வருவாய்.

## பொது விருத்தம்

**இராகம்: மத்தியமாவதி**

சிந்து வினடு வெழுந்த தினகரன் போல முன்னம்
வந்திடு மால நீக்கும் வள்ளல் தன்னருளால் பாலன்
முந்துள உருவின் மேலாய் முளைத்தெழு மதன் போல் கோலம்
தந்திடும் அரனை வாழ்த்தி தந்தை முன் வருகின்றானே !

## பொது தரு—96

**இராகம்: காபி** **தாளம்: ஆதி**

1. வந்தானே சீராளன் தந்தை தாய் மகிழவே—சுப
மங்கள கல்யாணி பங்க னெங் கென்றே கூவி—[வந்தானே]

முந்துள வுருவினும் சுந்தர மாகவே
சந்திர சடா தர மைந்தனு மெனவே —[வந்தானே]

2. ஐமுக னென்றும் அமலனென்றும் வேதங்கள் முன்னாள்
அலறியும் அரற்றியும் அறி யொண்ணாக் கள்வன்
தெய்வ சிகாமணியாகிய பயிரவ தேவரை விட்டிங்கே
மூவருமாகவே

உய்வகை யீதென உணர்வறியாமலே
ஓடியே வந்திங் காடியே பாடியே —[வந்தானே]

3. வெந்தயம் கடு கொடு வெங்காயம் பல்காயம்-பல
வேருடன் பட்டைச் சோம்புடன் சீரகம் நெய்யும்
இந்த விதமாகந்தாளிதம் செய் மணம் எங்கினும் வீசிடவுங்
குருமணி போலே சிந்து வினடு வெழு தினகரன் றோற்றம்
போலே
சிவ சிவ சிவ சிவ சிவ சிவ வெனவே —[வந்தானே]

4 அந்தக சம்மார புரம் அடலை செய்தோனே வுருவாகியே
நம்மைக் காக்க சிவயோகி ரூபமாய் வந்த கங்காளரே
மாலயனறியா வஸ்து வென்றெண்ணியே மகிழ்ந்
தங்கிராமலே
எந்தையே யிங்கெனை எளியேனைத் தேடியே வந்தீரோ
உன்ரண வந்தீரோ. [வந்தானே]

விருத்தம்

**இராகம்: மத்தியமாவதி**

வந்திடு மகனைத் தந்தை தாயுமே மனமகிழ்ந்து
புந்தி பூரித்துத் தேகம் புளக மெய்திடவும் பாலன்
சுந்தர வடிவைப் பார்த்துத் துணைக் கரத் தெடுத் தணைத்து
உந்தியும் உச்சிமோந்து உலவிலா உவகையுற்றார்

வசனம்

வந்த சீராள தேவனைத் தாயுந் தகப்பனும் எடுத்தணைத்து உச்சி மோர்ந்து ஆனந்த பரவசத்தை யடைந்தார்.

தொண்டர் விருத்தம்

**இராகம்: மத்தியமாவதி**

மலடி புத்திரனைப் போல வறிஞர் கண்டெடுத்த சொர்ண
துலையெனப் பாலன்றன்னைத் தொண்டரும் நங்கை யோடும்
நலமுள சந்தன மானோடு நல்லகந் தன்னில் னாதன்
நிலையினில் வந்து பார்த்துத் தேடியே வாடினானே.

வசனம்

மலடி பெற்ற பிள்ளையைப் போலும் தரித்திர வானெடுத்த புதையலைப் போலவும், சீராளனை நடுமத்தியில் விட்டு தாயுந்

தகப்பனும் இரண்டு பாரிசஞ் சூழ பின்பக்கத்தில் சந்தன நங்கையும் சோமாஸ் கந்தரைப்போல மகா களிப்புடனே தன்னுடைய வீட்டில் வந்து கங்காள பரமேஸ்வரனைக் காணாமல் கலங்கி வாடினார்.

## தொண்டர் தரு-97

**இராகம்: எதுகுலகாம்போதி** **தாளம்: ஐம்பை**

அரனே அரனே அயன்றலைக் கொய்திடும்
ஆதியே யெங்கேகினாய்—கங்காளா
பரனே மகனை அழையென்றுரைத்தெங்கு
பதலத் தொளிந்தீரோ—கங்காளா
மகனை யழை யென்றருள் செய்தவர் தான்
மறை வுண்டதே துரை செய்குவாய் கங்காளா
சுகரஞ்சுகனே அகர் வஞ்சகர் போல்
துயர் கொண்டிடுவெனோ - கங்காளா
மலைமா தொரு பால் அலை மாதொரு பால்
மறைவாயுனை வைத்தாரோ—கங்காளா
சிலைவேடுவனாயுரு வானது போல்
சிறியேனறியும் படியே—கங்காளா
வந்தாய் பரனே ஒளிந்தீரடியேன்
வருந்தாதினியே வா கங்காளா
சந்தாப மிதேன் வந்தான் மகனும்
சாமியே அமுதுண்ண வா—கங்காளா

## தொண்டர் விருத்தம்

**ராகம்: பூபாளம்**

பரமனைத் தேடி வாடி பரதவித்தயர்ந்து தொண்டர்
சிரமிசைக் கரங்குவித்து சிவன்றனைத் தேடி யாத்தி
மர மதிலிருந்த கோல வடிவினை யுளர்த்தில் வைத்துக்
கரமதில் வாளெடுத்துக் கடவுளை வாழ்த்தினாரே!

## தொண்டர் தரு-98

**இராகம்: மத்தியமாவதி** **தாளம்: ஆதி**

1· பாருந்திரியம்பகா—என்னைப் பாலனை யழை யென்றிந்திர
சாலஞ் செய்குரீரினி மேல்— [பாரும்]

1. வேதம் தன்னில் ஒளித்தும்—உன்னையே வேண்டி
விரும்பினோர்க் கொளித்திடும் குரும்பு போலவே
நாதனே எனக்கு முந்தன் சூதான வார்த்தைகள் சொல்லி
சாதங் கறி யுண்ணாமலே தோதகஞ் செய்தாயினிமேல்
[பாரும்]

3. பாலனொடும் மனைவி தாதியுடனே
பந்தமாய் நால் பேருருயிருந் தொந்த மாகவே
ஆலமுண்டது போலுண்பாய் நீலகண்டனே இனிமேல்
கோலமாயென் கை வாளாலே மேலவாவுயிர் விடுவேன்
[பாரும்]

பிள்ளைக்கறி சமைத்து எனக்கு அன்பாய்
போசனம் படைத்தா லுண்பேன் நேசமா யென்றே
மெல்லவே எனக்குச் சொல்லி கள்ளத்தனமதாகவே
வள்ளலே ஒளித்து என்னைத் தள்ளி லுன்னை விடுவேனோ
[பாரும்]

ஆத்தி மரத் திருந்த கங்காளரென்ற
அய்யனே எனையினிமேல் கைவிடாதே கார்
மூர்த்திக்கொரு மூர்த்தியே நாற்றிசை யெலாம் புகழ
போற்றினேன் இனியெனை காத்திடுங் கடவுளானே; [பாரும்]

வேதியர் குலத் துதித்து அடியார்
மெல்லடி பணிந்திடமுன் அல்லலறுமென் றோதியுனைப்
பணிந்தே
நாதனே யுந்தனுடைய தோதகம் செய்தாலுயிரைச்
சேதனம் செய்வே னினி மேல் [பாரும்]

## தொண்டர் கண்ணி

ராகம்: ஹரிகாம்போதி

பித்த னென்றும் பேயனென்றும் பேசியே பேரடைந்த
பத்தர்க்கு முன்னின்ற பரம் பரனே பாலகனூண்
மெத்தப் பொசிப்பனென்று மெய்போலுரைத்து என்னை
எத்தி மறைந்தால் நானென் செய்வே னேழை யேனே

## வசனம்

சுவாமி உன்னை முன்னாளிலே பத்தர்கள் உன் பெருமையைச் சொல்லி புகழாமல் ஏசிப்பேசின பேருக்கு முன்னின்ற முதல்வனே. ஏழையின் புத்திரனூணை மெத்தப் பொசிப் பேனென்று மறைவதற்கு என் செய்வேன் கங்காள நாதா.

## தொண்டர் தரு-99

**இராகம்:** **தாளம்:**

1. வருகுவாய் முன்னே கண்ணே
திருகு செய்யாதே சிறுமை வையாதே
கருணை பொய்யாதே எனைக் காக்க விப்போதே [வருகு]
2. பழமலமாய—பலபிறப் போய—கழலினைச் சாயைக்
காட்டிட்நீயே [வருகு]
3. மைந்தனைப் பார்த்தே வரவழை என்றுரைத்தே
இந்திர சாலத்தே—செய்தே எழுந்திடாதே [வருகு]
4. கனி ரசம் போலும் - காட்சி கொள் மேலோய்
இனி யெந்தன் முன்னாலே—எந்தையே இன்பாக— [வருகு]
5. அம்புலிச் சடையானே - நம்பினே னுடையானே
சம்புவே நீ தானே தற்காத்திடத் தானே [வருகு]
6. கண்ணப்பன் தேடுங் காட்சியே - யுனை நாடி
அண்ண லென்றே பாடி ஆடியெனை நாடி [வருகு]
7. கங் காள மூர்த்தி உன் கழலினைப் போற்றியென்
சங்கை களகற்றித் தற்பரா வென்றே யேற்ற — [வருகு]

## தொண்டர் கண்ணி

**ராகம்: ஹரிகாம்போதி**

உடல் குழைய வென்புருக ஒலமிட்டே தேடி
கடல் மடை போல் கண்ணருவி காட்டிடவே காந்தமென
படபடென நெஞ்சம் பதைத்துனையே தேடறியேன்
கடு வமுது செய்தோனே காத்திட முன் வருவாயே

## வசனம்

அரகரா, ஆலமுண்ட கடவுளே அன்பரைப் போலே ஆடியும் அலறியும் பாடியும் பரவியும் கண்ணருவி காட்டியும், காந்தம் போலச்சேர்ந்திடவறியாத சிற்றறிவுடைய நாயேன் முன்னம் வரவேணும் கடவுளே!

## தொண்டர் தரு—100

**இராகம்:** **தாளம்:**

கங்காளனே பலி கொள்ள வாவென்னுடையானே
எங்கா வாரூறை விடுவேனோ - நீறுஞ் சடையானே

சங்கர சம்போ சதாசிவ தற்பர தாணுவே யென்
தனையன் மனைவி யுயிர்க் கவர வர வேணுமே
பிள்ளையை யழைத்தா லூண் கொள்ளுவே னென்றுரைத்தபடி
என்னைப் பேதப்படுத்தி நீ தோதகம் செய்த விதிப்படி
ஈதென்றியாத பேதையைச் சோதிக்க லாமோ
இனி யென்னுயிரும் பாங்கி தன்னுயிரும் சேதிக்கலாமோ

## பொது விருத்தம்

**இராகம்:**

பரமனைக் காணா தரற்றிப் பாவையும் பாலனோடு
கரமதில் வாளளாவி கழிப்பனென்றுறுதி கொண்டு
உரமுடனுரைத் தாத்தி முன் உண்மையால் காணக் கங்கை
சிரமதிலணியுந் தேவன் சிறுத் தொண்டர்பால் வந்தாரே!

## பொது விருத்தம்

**ராகம்:**

மான் மழுச் சதுர்ப் புயத்தில் வாகை மாவிகை களாட
ஞான மார் பிருங்கி நந்தி நாதிக்க மத்தள தாளங்கள்
வானவர் ரிஷிகள் சூழ மாதவர் போற்ற மன்றுள்
ஆன நாடகம் செய்தேவர் அன்புடன் வருகின்றாரே!

## பொது தரு-101

**இராகம்: பூபாளம்** **தாளம்: ஜம்பை**

வந்தாரே கைலாச வாசரும்-வானவர் புடை சூழ
தேசமாய்
சந்திர சூரியர்—செந்தழல் கண்ணுடை சங்கரன் விடை
மீதேறி யன்புடன் [வந்தா]
காலகண்டசய வென நந்தியும் கட்டிங் கூற பிருங்கியும்
பாடவே
வேளை வென்ற விமலர் பராக்கென மேவிக் குண்டோதரன்
சதுர் நிகழ்த்திட [வந்தா]

பானுகம்பனும் வாணனுமே சங்கம் பம்பம் பென்ன
பதஞ்சலி போற்றவே ஞான சம்பு சபாவென நாரதர்
தும்புரு வீணா கானங்கள் பாட
மேனகை திலோத்தமை யரம்பையர் மெல்லி

ஊர்வசி தந்தி மீட்ட கான மார்த்துக் கந்திருவர் சூழ
கன்னிகை மாதர்கள் நடனமாட
தந்திமுகன் வல்லபையும் கந்தனும் தையல் வள்ளி
தெய்வானையும் சூழ்ந்திட
இந்திரன் இராணி முப்பத்து மூன்றிமையவர் புடையாக
னெறுங்கிட
முனிவரட்ட வசுக்களும் சூழ்ந்திட முத்தர் பத்தர்கள் சித்த
மகிழ்ந்திட
கனவுகொண்ட சிறுத் தொண்டர் காணவே காளைமீதில்
வந்தாரெமை யாள்கவே!

## சுவாமி விருத்தம்

**ராகம்: பூபாளம்**

சம்புவும் விடை மேற்கொண்டு தானவர் புடைகள் சூழ
அம்புவி தனி லுன்போல அன்புள பத்தர் காணோம்
நம்பு நம் தொண்டா வாரும் நம்பதமடைய நீயும்
இன்பமாம் பாலர் பெண்டிர் யாவரு மிசைந்து தானே!

## வசனம்

அகோ வாரும் பிள்ளாய பக்தனே! நீ மகாபக்தி மார்க்கனான படியினாலே நீயுமுன் பெண்சாதி பிள்ளை பாங்கியோடு கைலாசத்திற்கு எழுந்தரும் பிள்ளாய்

## தொண்டர் போற்றி விருத்தம்

**ராகம்: பூபாளம்**

1. சங்கரா சம்போ தேவே தற்பரா சர்வசாட்சி
மங்கை யோர் பாகம் வைத்து மால் விடை மேற்
கொண்டே தான்
எங்களை யாள்க வந்த ஈசனே எவர்க்கு மேலாம்
பங்கயப் பாதம் காட்ட வந்திடும் பரனே போற்றி

2. கரியுரியுடையாய் போற்றி கால கண்டிதனே போற்றி
நரி பரி செய்வோய் போற்றி நண்பரைக் காப்பாய் போற்றி
வெறி மயலாமஞ்ஞனம் விலகிடச் செய்வோய் போற்றி
அரியவருளத்தில் வாழும் அய்யனே போற்றி போற்றி

3. போற்றியே நீலகண்டா புனிதனே போற்றி வையம்
காத்திடும் மாலாய்க் கஞ்சன் வடிவெனக் காப்பாய்
போற்றி
ஏற்றிய அன்பர்க் கன்பாய் இணையடி தருவாய் போற்றி
காத்திடுங் கடவுளானே காரணா போற்றி போற்றி

## சுவாமி விருத்தம்

**ராகம் : பூபாளம்**

போற்றி செய் பக்தனே உன் புகழ் தனக் கீடில்லாமல்
காத் தெமை பூசித் தன்பாய்க் கதி பெற வேண்டி நின்ற
பார்த்திபன் மந்திரியே யிந்தப் பார்தனில் வேண்டும் பேறைப்
பூர்த்தியாய்க் கேளென்றே தான் புகன்றனர் புகழ்ச்சியாலே !

## வசனம்

அகோ வாரும் பிள்ளாய் சிறுக் தொண்டனாரே உமக்கு வேண்டிய வரங்களைக் கேளும் தருகிறோம் பிள்ளாய் பக்தனே!

## தொண்டர் விருத்தம்

**ராகம் : பூபாளம்**

வையகம் மனைவி சுற்றம் வாழ்வெலா முனதே யல்லால்
மெய்யனே வேறென் றெண்ணா ஏழையான் விளம்புமாறு
வையக மரசர் காடர் கோனு மென்னுடனே யுந்தன்
செய்ய பாதங்கள் சேர திருவருள் செய்கு வாயே !

## வசனம்

சரணம் சரணம் சம்புவே ! எனக் கெல்லா ஆசையும் வாழ்வும் நீயேயல்லாமல் வேறில்லை. ஆனாலும் காடர்கோன் மகாராஜனும் என்னுடனே உன் பாதமடையும்படி கிருபை செய்ய வேணுமையா சுவாமி !

## சுவாமி விருத்தம்

**ராகம் :**

இன்றுமுதல் இருபத்தி ஓராம் நாளில் எமதிடமே வருகவென
இசைத்தோம் பிள்ளாய்
வென்றி பெறு மாத்தி மரத்தடியில் நாமும் வீற்றிருந்த
வடிவமைத்து விளங்கும் வண்ணம்
நன்றி பெறச் செய்வானேல் அவர்க்கு முத்தி நண்ணுவிப்போம்
என உரைக்க நாதன் பாதம்
சென்று மகிழ்ந் தன்புடனே போற்றி செய்து சிறுத்தொண்டர்
சிவண் துதியே செய்கின்றாரே !

## வசனம்

அகோ வாரும் பிள்ளாய் சிறுத்தொண்டனாரே ! நாமிருந்த ஆத்தி மரத்தடியில் சிவாலயமுண்டாக்கி திருவிளையாடல் திருவிழா நடத்தினால் அந்தக் காடர்கோன் மகாராஜனுக்கு இன்று முதல் இருபத்தோராம் நாள் முத்தி கொடுப்போம். நீயும் உன் மனைவியும் பிள்ளையும் தொழியும் கைலாசத்திற்கு எழுந்தருளும் பிள்ளாய் பக்தனே !

## தொண்டர் கண்ணி

**ராகம்: பூபாளம்**

கங்கை அறுகு புன்னை கரந்தை பூமத்த மொடு
திங்களரா வாத்தி திருச்சடைமேல் சூடுகின்றோய்
எங்கள் தனைக் காக்க இவ்வுருவங் கொண்டோனே
சங்கரா நாயேனின்றாள் சேர்ந்தேன் தற்பரனே

## வாழி

காராறுங் கழலுடனே உமையாள் வாழி !
கந்தனொடு வள்ளி தெய்வானை வாழி !
சீராருங் கஜமுகன் வல்லபையும் வாழி !
திருமால் பூமகள் வாழி திசை முகத்துப்

பேராரு மிறைவன் நான்முகனும் வாழி !
பேறு பெற்ற நல்லடியார் பெருக வாழி !
ஆறாறு தத்துவத்துக் கப்பால் நின்ற
அயிலேச லக்குமக் குரு வாழி தானே.

கம்பனாயகனும் வாழி காமாக்ஷி உமையாள் வாழி !
சம்பு தீவரசர்க் கெல்லாம் தாணுவாம் காடர் கோமான்
செண்பகத் திருநாள் வாழி திருவமுதளித்த கீர்த்தி
அன்பினால் கேட்ட பேர்வாழி யான வன்றாள் சேர்வேனே

செந்தமிழ் வாழி இந்தச் சிவகதை படித்தோர் வாழி
பைந்தமிழ்ப் பாவாணர் வாழிப் பாலர்கள் பெரியோர் வாழி
மந்திரம் அஞ்செழுத்தும் வாழி மறையவர் அரசர் வாழி
மைந்த ஞான் அரர்க்களித்த மன்னனும் வாழி தானே !

## மங்களம்

மங்களம் கங்காளனார்க்கு மங்களம்
இன்ப வாருதி கங்கா தரர்க்கு – மங்களம்
கங்கை மதி சடையார்க்கும் கர கபாலத் தையருக்கும்
மங்கை யுமை யவளுக்கும் மாதேவ னாதனுக்கும்
மேருவில் பாரத முன்னாள் மென் மருப்பினாலெழுதும்
காரணக் கணேசருக்கும் கன்னி வல்லபை தனக்கும்
வீரர்கள் புகழ் சூரனை வென்று தேவரை முன்காத்த
சீரார் கந்தன் வள்ளியர்க்கும் தெய்வானை யம்மனுக்கும்
மறை நான் கினையுந் வேதன் வாக்கிலிருந்தே நடத்தும்
கரையிலா நூல் மகட்கும் காயத்திரி மாதினுக்கும்
சீராத் தியானத்திலே திருக்கண் வளர் மாலுக்கும்
வாராறுங் கும்பஸ்தன வனச மாது தனக்கும்
கொன்றை புன்னை வேணியர்க்கும் கோதிலா குரு வைரவ
னாதர்க்கும்
கண்டங் கருப்பருக்கும் கன்னி பரமேஸ்வரிக்கும்
சந்திரர் சூரியர்க்கும் சாருந்திருப் பாலருக்கும்
இந்திரன் வானவர்க்கும் எண்ணிய தபோதனர்க்கும்
பூரண மாரியம்மைக்கும் புகழ் வைப்பாளி கூத்தருக்கும்
காரணக் குருவிற்கும் கற்றுணர்ந்த புலவர்க்கும்
மங்களம்! மங்களம்! மங்களம்! மங்களம்! மங்களம்!

தும்பி முகன் வல்லபைக்கும் சுப்பிரமணியர் தெய்வானைக்கும்
எம்பிராட்டி வள்ளியர்க்கும் ஏனைய பாரியர்க்கும்
பாரதி நாயகனார்க்கும் பரமேட்டி காயத்திரிக்கும்
வாரணி பூர வாகினிக்கும் மாதவத்தோர் அனைவர்க்கும்
நாரணன் பூமகளுக்கும் நற்றவத்தோர் அனைவர்க்கும்
காரண குருவிற்கும் கற்றுணர்ந்தோ ரெல்லாருக்கும்
சிறுத் தொண்டர் நங்கையர்க்கும் சீராளத் தேவனுக்கும்
அருட்கொண்ட சந்தன நங்கை மகாபத்தினிக்கும்

மங்களம்! மங்களம்! மங்களம்! மங்களம்!

---

### 3. அரங்கேற்றத்தில் நடந்த அதிசயம்:-

ஆசிரியர் ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர், தமது இந் நாடகத்தை அரங்கேற்ற வேண்டி, மாரியம்மன் கோவிலைச் சேர்ந்த தமது மாணாக்கர்களை அழைத்துக் கொண்டு, திருச்செங்காட்டங்குடி சென்று, இரவு நாடகத்தைத் துவக்கி, மேடைக்கு கங்காளர் வரவேண்டிய காட்சியும் வந்துற்றது. ஆனால், தமது குழுவினைச்சேர்ந்த மாணவர், வேடமேற்று வரவேண்டியதிருக்க, சற்றும் பயிற்சியும் முன்னறிவும் இல்லாத புதிய ஒருவர், அனைத்து விதமான ஒப்பனைகளுடன் கூட மேடைக்கு வந்ததோடு மட்டுமின்றி, இவர்தம் பாடப்படி, திறம்பட நடகத்தின் முறைப்படி நடித்தும் முடித்தார்.

பின்னர் விவரம் கேட்டபோது, அப்புதியவர் அவ்வூரில் (திருச்செங்காட்டங்குடியில்) வாழும் தேவதாசிக் குலமாது ஒருவர், தமக்கு இவ்வாறான திருமுடி, புஜம், உத்திராட்சம் கமண்டலம், திருவோடு, அங்கி ஆகிய யாவும் அளித்து அனுப்பி வைத்ததாக கூறினார்.

இவ்வாறு கிடைக்கப் பெற்ற புனை பொருட்களையே இன்றும் இப்புன்னை நல்லூர் நாடகக் குழுவினர் போற்றிப் பூசித்து பாதுகாத்து நாடகத்தின்போது அணிந்து ஆடி வருகின்றனர்.

இவ்விடத்தே, ஆத்தி மரமொன்று அந்நாள் முதல் போற்றி வளர்க்கப் பெற்று வருகிறது.

### 4. ஸ்ரீ ரெங்கநாத உபாத்தியாயர் எனும் இந் நூலாசிரியரின் நூற்பாடத்தைக் கொண்டு நாடகம் நடத்தப்பெறும் ஊர்கள்:-

1. புன்னை நல்லூர் மாரியம்மன் கோவில், ஆசிரியரால் அரங்கேற்றப்பெற்ற
   1. பூண்டித்தெரு
   2. சன்னதித்தெரு
2. சாலியமங்கலம்—வெள்ளாளர் தெரு
3. உடையார் கோவில்—
4. அம்மாப்பேட்டை இரு குழுக்கள்
5. அரித்துவார மங்கலம்
6. ஒரத்த நாடு
7. உளூர்

ஆகியனவாகும்.

மேலும் வெவ்வேறு ஆசிரியர்களின் பாடங்களைக் கொண்டு கீழ்க்கண்ட ஊர்களில், சிறுத்தொண்டர் நாடகம் ஆண்டு தோறும் நடத்தப்பெறுகிறது.

பட்டுக்கோட்டை, அரியலூர், திருபுவனம், தொண்டராம் பட்டு வீரமாங்குடி, தஞ்சைநகரில், கொடிமரத்து மூலை, மானம்புச்சாவடி, பூக்காரத்தெரு ஆகிய மூன்று இடங்கள் மேலும், திருத்துறைப்பூண்டியை அடுத்த கொகலாடி, திருவோணம், ஊரணி புரத்தைச் சேர்ந்த கருக்காடிப் பட்டி சாத்தமங்கலம் ஆகிய இடங்களிலும் தென் ஆற்காடு மாவட்ட பெண்ணாடகம்—மஞ்சக்கொல்லை, திருச்சி மாவட்டம் அயிலாம்பட்டி ஆகிய இடங்களிலும் மற்றும் புரிசை கண்ணப்ப தம்பிரான் அவர்களால் தொழில்முறை நாடகமாகவும் நடிக்கப்பெறுகிறது. மேலும் நமது விவரத்திற்கு கிடைக்காத அநேக இடங்களிலும் இந்நாடகம் நடத்தப்பெறுகிறது.

## ஸ்ரீ சிறுத்தொண்டர் இசைக் கூத்து: நாடகமும் நடத்தப்பெறும் முறைகளும்:

### 1. நாடகத்தின் நிலை:-

இந்த நாடகம் ஒரு உயிருள்ள நாடகம். -Living Play- இக்குறிப்பிட்ட நாடகத்தை பெரும்பாலும் தொழில் முறை நடிகர்கள் நடிப்பது இல்லை. கோயில்களில் நடக்கக் கூடிய ஏதேனும் ஒரு திருவிழாவினையொட்டி அன்றைய நாளின் இரவு நேர பொழுது போக்கிற்காக இந்த சிறுத்தொண்டர் நாடகத்தை நடத்துவது இல்லை. குறிப்பிட்ட, சித்திரை மாத பரணியன்று தவிர வேறு நாட்களிலும் நடத்துவது இல்லை. இதில் நடிக்கும் நடிகர்கள் வேறெந்த நாடகத்திலும் கூட நடிப்பதில்லை. ''நாடகமும் இதுவே நடிகரும் அவரே''

### 2. நாடகத்தின் பொருளாதார நிலை:-

தமிழ் நாட்டில் சுமார் நூற்றுக்கும் மேற்பட்ட ஊர்களில் உத்திராபதியார் கோயில்கள், மடங்கள் அல்லது சிறுத்தொண்ட நாயனார் மடங்கள் அமைந்துள்ளன.

சில இடங்களில் இம் மடங்களுக்கென நிலையான சொத்துக்கள் உள்ளன. இப்படிப்பட்ட இடங்களில் நாடகம்

நடத்துவது, அன்னதானம் செய்வது ஆகியவை அச்சொத்துக்களின் ஆண்டு வருமானத்திலிருந்து செய்யப் பெறுகிறது.

நிலையான சொத்துக்கள் இல்லாத ஊர்களில், இந் நாடகம் நடைபெற உள்ள இரண்டு, அல்லது மூன்று தினங்களுக்கு முன், இந்நாடகத்தில் ஈடுபாடு கொண்டோர். இருவர் மூவர் கூடி, பொதுமக்களிடையே வசூல் செய்து-நன்கொடைகள் பெற்று-நிதி திரட்டி - நாடகத்திற்குத் தேவையான செலவுகளை அவ்வாண்டின் வருமானத்திற்கு ஏற்றப்படி, ஆடம்பரமாகவோ சுருக்கமாகவோ திட்டமிட்டு செய்கின்றனர்.

### 3. ஒத்திகை

இந்த நாடகம் நடத்தப் பெற உள்ள. நாளுக்கு, பத்து அல்லது பதினைந்து நாட்களுக்கு முன்னதாக, ஒத்திகை பார்க்க வேண்டி நாடக நடிகர்கள் பக்கவாத்தியக்காரர்கள் ஒன்று கூடி தினமும் இரவு நேரத்தில் சுமார் 9 மணிக்கு மேல் 12 மணி வரை பகுதி பகுதியாகப் பாடிப்பார்த்து நினைவூட்டிக் கொள்கின்றனர். ஏனெனில், ஆண்டு முழுவதும் நடிகர்கள் தத்தமக்குரிய வெவ்வேறு தொழில்களில் கவனம் செலுத்தி ஈடுபட்டு விடுகிறபடியால் தற்போது ஒரு முறை முன்கூட்டியே சரி பார்த்துக் கொண்டால் தான், நாடகத்தின் போது, தயக்கமும், தடங்கலும் இல்லாமல் பாடமுடியும். பொதுவாக ஜாதி பேதமின்றி ஊர்மக்கள் எல்லோரும் இந்நாடகத்தில் பங்கேற்கின்றனர்.

தமது செய்தொழிலின் காரணமாக வெளியூர்களில் இருக்க வேண்டியிருந்தாலும், நாடகம் நடைபெற உள்ள குறிப்பிட்ட நாளுக்கு முன்னதாகவே தமது ஊருக்கு வந்திருந்து நாடகத்தில் உரிய முறையில் பங்கேற்கின்றனர்.

நடிகர்கள் எவரும் தமது நடிப்பிற்காக ஊதியம் பெறுவதில்லை. இசைக்குழுவின் கருவிக் கலைஞர்களுக்கு மட்டும் ஊதியம் வழங்கப்படுகிறது. இத்தொகை அந்தந்த ஆண்டின் வருமானத்தின் அடிப்படையில் மாறுதலுக்கு உட்பட்டது. என்றாலும் கலைஞர்கள் ஊதியந் தொகையினை ஒருபொருட்டாகக் கொள்வதில்லை. ஒப்பனைகள் செய்பவருக்கு ஊதியம் அளிக்கப்படுகிறது.

இந்நாடகத்தில் பங்கேற்போர் மற்ற நாட்களில் சகோதர பாசத்துடன் பழகுகின்றனர். நட்பும், குழு மனப்பான்மையும் மாறாமல் பாதுகாக்கப்படுகிறது நடிகர்கள் ஊர்மக்களிடையே தனி கௌரவத்துடன் மதிக்கப்படுகின்றனர்.

## 4 நாடகமேடை:

நாடகம் நடத்தப்பட வேண்டிய நாடக மேடை, குறிப்பிட்ட ஒரே இடத்திலேயே ஒவ்வொரு ஆண்டும் அமைக்கப்படுகிறது. இம்மேடை கோயிலின் முன்புறம் அல்லது தெருக்களின் சந்திப்பு ஆகிய இடங்களில் அமைக்கப் படுகிறது.

மேடை தரையிலிருந்து சுமார் 1½ அடி உயரத்திற்கு, நிரந்தரமாக அமைக்கப்பட்டுள்ள இடங்களும் உண்டு, சில இடங்களில் அவ்வப்போது மட்டும் மண்ணால் உயரமான மேடை அமைத்துக் கொள்வதும் உண்டு. பலகைகளைக் கொண்டும் தற்காலிக மேடைகளை சில இடங்களில் அமைத்துக் கொள்கின்றனர். ஆனால் மேடைக்கான இடம் எக்காரணம் கொண்டும் மாற்றப்படுவது இல்லை. சாதாரணமாக இம் மேடைக்கருகில் ஒரு ஆத்திமரம் இருப்பதைக் காணலாம். அவ்வாறு இல்லாத இடங்களில் ஆத்திமரத்தின் கிளையை வெட்டி வந்து பந்தற்காலில் கட்டி வைப்பர்.

நாடக மேடை என்பது ஒரு சாதாரண கீற்றுப் பந்தல், உட்புறம் வெள்ளைத் துணி கட்டப்பட்டிருக்கும். நாற்புறமும் திறந்திருக்கும். பார்வையாளர்கள் திறந்த வெளியில் அமர்ந்திருப்பர்.

## 5. ஒப்பனையும், திரையும்:

மேடையின் பின்புறப் பகுதியிலிருந்து மேடைக்கு ஏறி வந்து, மேற்கு திசையை நோக்கி நடிகர்கள் நடிப்பர். நடிகர் களின் வலதுபுறம் அதாவது மேடையின் வடக்குப் பாகத்தில் இசைக்கருவிக் கலைஞர்கள் அமர்வர்: ஒப்பனைகள் மேடைக் கருகில் உள்ள, கோயில் அல்லது வீடு ஆகிய இடங்களில் செய்யப்பட்டு முகத்தில் திரையிட்டபடி நடிகர் மேடையை அடைவர்: ஒப்பனைகள் மிகவும் எளிமையான முறையில் அமைந்திருக்கும், ஒரு பாத்திரத்திற்கு ஒரு முறைதான் ஒப்பனை செய்யப்படும்.

நாடக மேடையில் 'முன் திரை' கிடையாது. ஒரு வெண்ணிற வேஷ்டி அல்லது துணியை இருவர் இருபுறமும் பிடித்திருப்பர். பாத்திரம் மேடைக்கு வந்து ஒரு சில வரிகள் தன் பாட்டைப் பாடிய பின் இத்திரையை நீக்கி விடுவர். திரை பிடிப்போர் நாடகம் முடியும் வரை மேடையின் ஓரத்தில் அமர்ந்திருப்பர்.

6. **விளம்பரம்:**

ஊர் முழுதும் பரவலாக இருப்பவர்களான நடிகர்கள் மூலம் நாடகம் நடப்பதற்கான செய்தி பரவி விடுவதோடு, குறிப்பிட்ட தினமான, சித்திரை மாத அமாவாசை என்றாலே இந்த நாடகம் நடக்கும் என்பது மக்களுக்கு தெரிந்திருந்த போதும், ஊர் வெட்டியான் மூலம் தண்டோரா போடப்பட்டு, சம்பிரதாயமான செய்தி தெரிவிக்கப்படுகின்றது. வழக்கமான இடத்தில் நாடக மேடைக்கான பந்தல்கால் முகூர்த்தம் செய்யப்பட்டிருப்பதும், அங்கு ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் அன்னக்கொடியும் (அன்னப்பறவையின் உருவம் வரைந்த தல்ல—காவி நிறத்தில் நீண்ட பிளவுபட்ட இரு கூர்முனைகள் கொண்ட துணியில் காளை உருவம் பொறிக்கப்பெற்ற கொடி). இதனை உறுதி செய்கிறது.

7. **நாடகம் நடத்தப்படும் நாளும் நிகழ்ச்சியும் நேரமும்:**

இந்த சிறுத்தொண்டர் நாடகத்தை சில ஊர்களில் நான்கு நாட்களுக்கும், மூன்று நாட்களுக்கும் தொடர்ந்து நடத்தி யுள்ளனர். தற்போது பெரும்பான்மையான இடங்களில் இரண்டு நாட்களில் நடத்தப்பெறுகிறது.

முதல் நாள் நாடகம், இரவு சுமார் 9 மணிக்கு துவங்கப் பட்டு மறுநாள் அதிகாலை ஐந்து அல்லது ஆறுமணிக்கு முடிவுறும். நாடகத்தின் பிற்பகுதி இரண்டாம் நாள் நடத்தப் படுகிறபடியால், மேடைக்கு வரவேண்டிய கங்காள மூர்த்தி எனும் சுவாமி வேடம் ஏற்பவர், இரவு 8 மணிக்கே ஒப்பனை ஏற்று, நாடகக் கதையின்படி, பிச்சை கேட்டுவர, மேள தாளத்துடன், சங்கொலி, சேகண்டி, சிலம்பொலி முழங்க ஊர்வலமாக வருவார். வீடுகள் தோறும் இந்த சுவாமிக்கு, தேங்காய் பழத்துடன் பூசனைகள் நடக்கும். ஊர்ச் சிறுவர்கள், "சம்போ" எனும் கோஷம் எழுப்பிய வண்ணம் உடன் வருவர்.

இரண்டாம் நாள் நாடகம் வழக்கம் போல் இரவு 9 மணிக்கு துவங்கி முதல் காட்சியில், தொண்டர் தோன்றி, பரதேசிமார்களைத் தேடும் காட்சி முடியும் தருவாயில் இவ்வாறு ஊர்வலம் புறப்பட்ட சுவாமி வேடக்காரர், தமது நினைவையெல்லாம் ஒரு முகமாக்கி, தாம் ஏற்ற பாத்திரமாகிய அவ்விறைவனாகவே உளம் கொண்டு மேடை ஏறி, தமது பாத்திரத்தை நடிக்கத் தொடங்குவார். இப்படிப் பட்ட காட்சிகள் வேறு நாடகங்களில் அமைவது இல்லை. பாகவத மேளாவின் நரசிம்ம அவதாரக் காட்சி நினைவு கூறலாம்.

## 8. வேடம் கலைதல்

இந்த இரண்டாம் நாள் நாடகம் மறுநாள் காலை சுமார் 8 மணியளவில் முடிவுறும். பின்னர் வேடமணிந்தபடியே, நடிகர்கள் அனைவரும் அவ்வவ்விடத்தே அமைந்துள்ள கோயிலுக்குச் சென்று இறை வழிபாட்டை முடித்த பின்னரே வேடம் கலைவர்.

மாரியம்மன் கோவில் எனும் புன்னை நல்லூரில் இந் நாடக ஆசிரியரின் நினைவாலயம், ஊரின் வட புறத்தே வடவாற்றின் கரையில் அமைந்துள்ளது. இவ்வூரார் தமது நாடகத்தை முடித்த பின்னர், வேடமணிந்தபடியே இந்நினை வாலயத்திற்குச் சென்று தமது குரு வழிபாட்டினை செய்து பின்னரே வேடம் கலைவர் :

## 9. நடிகர்களுக்கு மரியாதை-பரிசளிப்பு செய்தல்:

நாடகத்தில் பங்கேற்கும், இசைக் கலைஞர்களுக்கு நாடகத் துவக்கத்தில், சந்தனம், புஷ்பம் ஆகியவை கொடுத்து மாலையணிவித்து, மரியாதை செய்வது சம்பிரதாயமாகும்:

நடிகராக பங்கேற்பவருக்கு, உறவினர்களும் நண்பர்களும், மேடையில் மாலையணிவிப்பர் சிலர் வேஷ்டி, துண்டு, தங்கச் சங்கிலி, மோதிரம், ஆகியவைகளையும் கூட அணிவிப்பர் ரொக்கமாக அன்பளிப்பு செய்வதும் உண்டு.

## 10. நகைச்சுவை:

நாடகத்தின் அமைப்பு முறையில் நகைச்சுவைக் காட்சிகள் மிகக் குறைவாக அமைக்கப்பட்டிருப்பதால், பார்வையாளர்களை

உற்சாகப் படுத்தவேண்டி 'வெட்டியான்-வெட்டிச்சி', 'குறவன் குறத்தி', 'தயிர்க்காரி-கோனார்' போன்ற சிரிப்பிற்குரிய காட்சி களை உள்ளூர் நடிகர்களைக் கொண்டோ, சில சமயங்களில் வெளியூர் தொழில் முறைக் கலைஞர்களைக் கொண்டோ காட்சி களின் இடைவேளைகளில் பகுதி பகுதியாக அமைத்து நடத்துவர்.

(திருச்சி மாவட்டத்தில் நடத்தப்பெறும் இந்நாடகத்தில்- சிறுத்தொண்டர் நாடகத்தின் பாத்திரமாகிய தவசிகளை நகைச்சுவைப் பாத்திரங்கள் ஆக்கியிருப்பதும், நங்கைக்கு பிள்ளை பிறப்பிற்கு முன் சோதிடக்குறி சொல்ல குறத்தி வருவ தாகவும் நகைச்சுவைப் பாத்திரங்கள் இணைக்கப் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்க தாகும்.)

## 11. அமுது படையல்-அன்னதானம்:

இந்நாடகத்தை ஒட்டி பகல் நேரத்தில் அமுது படையல் எனும் அன்னதானம் நடத்தப்பெறுகிறது.

குறிப்பிட்ட ஒரு இடத்தில், வடை, அப்பளம், பாயசம், ஆகியவற்றுடன் கூடிய விருந்துணவு தயாரிக்கப்பட்டு, பரதேசி களுக்கும், ஏழைகளுக்கும் அன்புடன் அளிக்கப்பெறுகிறது.

தவிர ஆடைகளும் இலவசமாக வழங்கப்படலும் உண்டு. இதற்குத் தேவையான பொருட்கள், பணமாகவோ, அரிசி, காய்கறி போன்ற பொருட்களாகவோ நன்கொடையாகப் பெறப்படுகின்றன.

## 12. பிரசாதம் வழங்கல்-விடையாற்றி

இந் நாடகம் நடந்து முடிந்த மறுநாள் அல்லது இரண்டு மூன்று நாட்கள் கழித்து, இந்நாடகக் குழுவினர் ஒன்று கூடி, நாடக மேடையில் இறைவர்க்குப் படைக்கப் பெற்ற, பிள்ளைக் கறி எனும், மருந்துப் பொருட்களால் தயாரிக்கப்பெற்ற மாவினைக் கொண்டுவந்து பூசனைகள் செய்து பிரசாதமாக சிறிது சிறிதளவு அனைவர்க்கும் கொடுப்பர்.

## 13. நம்பிக்கை:

திருமணமாகி பல ஆண்டுகளாகியும் பிள்ளையில்லாதிருப் போர், இப்பிரசாதம் கிடைக்கப்பெற்று போற்றி உணின் விரைவில் பிள்ளைப் பேறடைவர் எனும் நம்பிக்கை வேரூன்றி நிலவுகிறது.

வெளியூர்களில் இருக்கும்; பிள்ளைப் பேறடையாத தமது உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரின் குடும்பத்திற்குக் கூட வேண்டுதல் செய்து கொண்டு இந்த பிரசாதத்தை அனுப்பி வைப்பர்.

இந்த நிகழ்ச்சியோடு அவ்வாண்டின் சிறுத்தொண்டர் நாடகம் முடிவு பெற்றதாகக் கொள்ளலாம்.

## 5. நாடகத்தில் சமூகப் பங்கேற்பு

நாடகத்திற்குத் தேவையான, பந்தலை இலவசமாகப் போட்டுத்தரவும், தேவையான பூக்கள் வாங்கித் தருவது எனவும், வெளியூரிலிருந்து வரும் இசைக் கலைஞர்கள், மற்றும் ஒப்பனைக்காரர்கள் ஆகியவர்களுக்கு உணவு அளிப்பது எனவும் நாடகத்தின்போது, காப்பி, டீ, சோடா, வெற்றிலை சீவல் ஆகியவை வாங்கித் தருவது எனவும், சிலர் தத்தமது வசதிக் கேற்ப வேறு சில நாடக சம்பந்தமான செலவுகளை ஏற்பது எனவும், வழக்கம் உடையவர்கள், நாடகம் நடத்தப் பெறும் ஊர்களில் இருந்து வருகின்றனர். தவிர வெளியூரிலிருந்து கூட இந்நாடகம் நடத்தப்படும் ஊருக்கு வந்து ஒரு குறிப்பட்ட செலவை ஆண்டு தோறும் தவறாமல் செய்துவிட்டுச் செல்பவர் களும் உண்டு. இதன் மூலம் இவ்வகையான நன்கொடையாளர் கள் நாடகத்தில் நேரிடையாக நடிப்பதன் மூலம் பங்கேற்கா விட்டாலும், நாடகக் குழுவினைச் சேர்ந்தவராகவே கருதப் பெறுவர்.

இவ்வாறு இந்த சிறுத்தொண்டர் நாடகம் மக்களின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்து பக்தி நெறியையும், சகோதர பாசத்தையும், நட்பினையும், குழு மனப்பான்மையை யும் குன்றாது காத்து வருகிறது. ஆகவே மற்ற நாடகங்களி லிருந்து இந்த சிறுத்தொண்டர் நாடகம் ஒரு தனிச் சிறப் பிடத்தை பெறுகிறது.

## 6. மருந்து தயாரிக்கப் பயன்படும் பொருட்கள்

பிள்ளைக்கறியென படைக்கும் போதும், பிள்ளையை அறுப்பதாக வரும் காட்சியின்போதும் கீழ்க்காணும் பொருட் களைக் கொண்டு அநுபவ முறையில் தயாரிக்கப் பெற்ற மாவினைப் பயன் படுத்துவர். இதனை மருந்தென்றே கூறுவர்.

## மருந்துப்பொருட்கள்

விரளி மஞ்சள்
சுக்கு
ஜாதிக்காய்
ஏலக்காய்
பட்டை
சீரகம்
அன்னாசிப்பூ
ஜாதிப்பத்திரி
கசகசா
வெந்தயம்
நெய்
உப்பு
தினை
வால்மிளகு
குங்குமப்பூ
கிராம்பு
சோம்பு
மிளகு
கல்பாசி
பொட்டு கடலை
மல்லி
வெல்லம்
தேன்

---

இந் நாடகத்தின் இறைவனாகிய சிவபெருமானை நூலாசிரியர் பல்வேறு இடங்களில் பலவேறான பெயர்களாற் குறிப்பிடுகின்றார். அவைகள் வரிசைப்படுத்தி அளிக்கப் பெறுகின்றன. எண்கள் பக்கத்தைக் குறிப்பன.

**இந் நூலாசிரியர் கையாண்டுள்ள சில சிறப்புச் சொற்றொடர்கள்:**

# 3. தரு அகர வரிசைப் பட்டியல்

# 4. சொல்லடைவு

# நூற்குறிப்பிற்கு பயன்பெற்ற நூல்கள்


1. தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹால் நூல் நிலையம்
   Copied Vol- No. 645 No. 616
2. டாக்டர் உ.வே. சாமினாத அய்யர் நூல் நிலையம்
   சுவடிகள் எண் 805-682, 719-2-216-318.
3. ஸரஸ்வதி மஹால் கால முறை வெளியீடு
   Journal No: 30 : கட்டுரை : குலவிளக்கு தீபாம்பாள்
4. சிறுத்தொண்டர் நாடகம் :
   By. பம்மல் சம்பந்த முதலியார்
   சென்னை டவுன் கம்பனியார் வெளியீடு-1922
5. தமிழ்நாடு இயல் இசை நாடக மன்ற
   வெள்ளி விழா மலர் — 1980
6. Journal of Music Academy
   Vol. XLVIII - 1977 - Page - 137 By. Dr. Seetha
7. 'MARG' of Bombay
   Vol. 10 - September 1957 - No. 4
   A Brief Historical Survey-By E. Krishnaiyar.
8. 'Tanjore as a seat of Music'
   By. Dr. Seetha.
9. 'Opera in South India'
   By. Dr. S.A.K. Durka - சென்னை - 1979
   கட்டுரை - தமிழகத்தின் தனிப் பெருங்கலை
10. தமிழ் நாடக ஆய்வு'
    டாக்டர் - இரா. குமாரவேலன்
11. ஆய்வுக் கோவை - தொகுதி I.
    இந்தியப் பல்கலைக் கழக தமிழாசிரியர் மன்றம்
    'பாமரர் பார்வையில் சிறுத்தொண்டர்
    கட்டுரை - B. செல்வராசன்
    புட்பம் கல்லூரி - பூண்டி
12. தமிழ் நாடக வரலாறு
    டாக்டர் திருமதி. சக்திப்பெருமாள்
13. 'Paper on Tamil Studies'
    Inter National Institute. Tamil Studies-Madras.

14. 'South Indian Music' Book. IV.
Prof. P. Sambamoorthi, B.A., B. L.
P. 208. Bhagavatha Mela

15. தமிழ் நாடக வரலாறு
கவிஞர் கு. ச. கிருஷ்ணமூர்த்தி,

16. Ashtapathi Attaprakaram,
Malayalam — Kerala University - No. 114
By. Raghavan Pillai

17. Bulletin of the Institute of Traditional Culture
Madras - 1957 Page. 184 - 'Art' By. E. Krishnaiyar

18. Drama in Rural India.
By. J. C. Mathur, Asia Publishing House
Bombay - Page - 403 - 405.

19. பெரியபுராண ஆராய்ச்சி
டாக்டர் இராசமாணிக்கனார்.
பழனியப்பா பிரதர்ஸ் - 1960.

20. சம்பந்தர் தேவாரம் :
சமாஜப்பதிப்பு - பக். 525 - 26.

21. பெரியபுராண விருத்தியுரை
சிவக்கவிமணி, சி. கே சுப்பிரமணிய முதலியார்

22. டாக்டர் வி. ராகவன் - முன்னுரை.
பிரகலாத சரித்திரக் கீர்த்தனைகள்
மியூசிக் அகாடமி வெளியீடு - 1965:

23. திருச்செங்காட்டங்குடி தல வரலாறு:
தேவஸ்தான வெளியீடு :
By. திரு. ச. தண்டபாணி தேசிகர் :

24. சரஸ்வதிமகால் 1000 ஆண்டு வரலாறு
வ. வேணுகோபாலன்.


